# யயாதி விலாசம்



பதிப்பாசிரியர் : சி. என். இரமேஷ், எம்.ஏ.,

பொதுப் பதிப்பாசிரியர் : நடன காசிநாதன், எம்.ஏ.,

தமிழ்நாடு அரசு கீழ்த்திசைச் சுவடிகள் வரிசை எண் 81

# யயாதி விலாசம்




பதிப்பாசிரியர்

சி.என். இரமேஷ், எம்.ஏ., சி.லிப்., வ.மொ. சான்றிதழ்

அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம், சென்னை-5.


] ] ]


பொதுப்பதிப்பாசிரியர்

நடன. காசிநாதன், எம்.ஏ.,

இயக்குநர்

தொல்பொருள் ஆய்வுத்துறை,

சென்னை - 113.


*****


அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகம்

சென்னை - 5.

1995.


( விலை ரூ. 104 )

TAMILNADU GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS SERIES NO. 81

# YAYATHI VILASAM




Edited by
C.N. RAMESH, M.A., C.Lib., C.Skt.,
Government Oriental Manuscripts Library,
Madras - 5.



General Editor
Natana-Kasinathan
Director
Archaeology Department
Madras - 113.



C
GOVERNMENT ORIENTAL MANUSCRIPTS LIBRARY,
MADRAS-5.
1995.

(Price Rs.104)

# YAYATHI VILASAM

## GENERAL EDITOR'S NOTE

Among the valuable manuscripts of the Govt. Oriental Manuscripts Library many remain still unpublished.

We are bringing out in print, this Yayathi Vilasam, a drama for the first time.

Government Oriental Manuscripts Library is sucessfully bringing out in print various works in Tamil in recent period.

Still many more books are going to be published from this institution.

Tamilnadu Government is helping in many ways for such publications.

In this regard I would like to expenses my gratitute to Mr. S.P. Ilangovan, I.A.S., Secretary to Tamil Development & Culture Department and Mr. R. Christodoss Gandhi, I.AS.

My thanks are due to Dr. S. Soundarapandian, Curator, Govt. Oriental Manuscripts Library for his outstanding job.

I hope that the Tamil world will appreciate this release.

- Natana. Kasinathan.

# யயாதி விலாசம்

## பொதுப்பதிப்பாசிரியர் முன்னுரை

அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகக் தமிழ்ச்சுவடிகளில் பாரதம் தழுவிய சுவடிகள் பல உள்ளன. அவற்றுள் இந்த 'யயாதி விலாசம்' என்ற சுவடியும் ஒன்று. இந்நூல் அச்சில் வெளிவராதது.

இதைப்போன்ற அச்சில் வெளிவராக நூற்களை அச்சிட்டு வெளியிடு வதைத் தமிழக அரசும், தொல்பொருள் ஆய்வுத்துறையும் ஆர்வம் காட்டி வருகின்றன.

அண்மைக்காலங்களில் அச்சில் வெளிவராக நூற்கள் பல அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தில் வெளிவந்துள்ளன. இதற்காகக் தமிழக அரசின் பண்பாட்டுத்துறைச் செயலாளர் சா.பா. இளங்கோவன், இ.ஆ.ப. அவர்களுக்கு நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

அரசினர் கீழ்த்திசைச்சுவடிகள் நூலகக் காப்பாட்சியர் டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன் அவர்களுக்கும் நன்றியைத் தெரிவித்துக் கொள்கின்றேன்.

யயாதி விலாசம் என்னும் இந்நூலில் பல நாடகக்கூறுகளும், பல இசைகூறுகளும் உள்ளன. பழந்தமிழ் ஆய்வுக்கு இது சிறந்த வகையில் உதவும் என்று எண்ணலாம்.

தமிழுலகு இதை வரவேற்று மகிழும் என்று நம்புகிறேன்.

**நடன. காசிநாதன்.**

# யயாதி விலாசம்

அணிந்துரை

- டாக்டர் எஸ். சௌந்தரபாண்டியன்
எம்.ஏ. (தமிழ்), எம்.ஏ.(ஆங்.), பி.எட்., டிப்.வ.மொ., பிஎச்.டி.
காப்பாட்சியர்
அ.கீ.சு. நூலகம்
சென்னை - 5.

*****

யயாதி விலாசம் எனும் இந்நாடகத்தை இயற்றிய புலவர், பையனூர் வரதராஜ பிள்ளை ஆவார்.

தமிழில் எழுந்துள்ள விலாசங்கள் வரவேற்கத்தக்கவை. ஏனெனில், கர்நாடக இசை எனும் தமிழ் இசை மக்களிடையே பரவுவதற்கு விலாசங்கள் போன்ற இசைநாகடங்கள் பெரிதும் உதவியுள. இத்தகைய நாடகப் பாட்டுகளை நன்கு அனுபவித்த மக்கள், கர்ந ாடகப் பாடல் ஒன்றைக் கேட்டதும், இது இன்ன இராகம் என்று கூ றுமளவுக்கு இசையில் முன்னேற்றம் பெற்றனர். விலாசங்கள் போன்ற இசை நாடகங்களை நன்கு அனுபவித்த ஒரு தலைமுறைக்குக் கர்நாடக (தமிழ்) இராகங்கள் ஓரளவுக்கு அத்துபடியாகியுள்ளன என்பது குறிப்பிடத்தக்க செய்தியாகும்.

பாரதத்தில் ஆதிபர்வத்தில் வரும் கதையே இந்த யயாதி கதை. இதே யயாதி கதையை நாடகமாக ஆக்கி மக்களை மகிழ்வித்தவர் பம்மல் சம்பந்த முதலியார்.

எனவே, நாடகம், இசை முதலியவற்றின் நோக்கில் யயாதி விலாசம் எனும் இந்நூல் வெளிவருவது தமிழுலகிற்கு மகிழ்வளிக்கும் செய்தியாகும்.

# ஆய்வு முன்னுரை

அன்னைத்தமிழை அணி செய்த நாடகங்கள் பலப்பல. நாடக வகைகளும் பலப்பல. அவற்றுள் விலாச நாடகங்களும் ஒரு தனி வகையைச் சார்ந்தவையாகும். அவற்றைப் பற்றியும், "யயாதி விலாசம்" என்கிற இந்நாடகத்தைப் பற்றியும் ஈண்டு ஆய்வு செய்வோம்.

விலாசங்கள் – இலக்கிய வரலாற்றுப்பின்னணி:

16–ஆம் நூற்றாண்டுக்குரியது என்று கருதத்தக்க பிரபந்த மரபியலிலும், 18–ஆம் நூற்றாண்டில் வெளியிடப்பட்ட சதுரகராதியிலும், சற்றேறக்குறைய அதே காலத்தில் தொகுக்கப்பட்ட பொருள் தொகை நிகண்டிலும், 96 வகைப்பிரபந்தங்களைப் பற்றிச் சொல்லப்பட்டுள்ளன.

"பிரபந்தத்திரட்டு" என்கிற நூலிலும், 96 வகைப்பிரபந்தங்களின் பெயர்கள் சொல்லப்பட்டுள்ளன. ஆனால் சதுரகராதியிலும், பொருள் தொகை நிகண்டு போன்றவற்றில் குறிப்பிடப்பெற்ற பெயர்களே இதில் இல்லை. அவைகளில் குறிப்பிடப்பெறாத சில பிரபந்தங்களின் பெயர்களையும் பிரபந்தத் திரட்டுக் குறிப்பிடுகிறது. அப்படி அது குறிப்பிடும் பிரபந்த வகைகளில்தான் "விலாசம்" என்கிற வகையினையும் காணமுடிகிறது. [2]

96 வகைப் பிரபந்தங்களில் விலாசமும் ஒன்று என்பதை அறிஞர் மு. அருணாசலம் அவர்கள் தமிழ் இலக்கியக் கொள்கைகளைக் குறிப்பிடுமிடத்தில் "விலாச" இலக்கியங்களையும் பிரபந்தங்களில் ஒன்றாகவே குறிப்பிட்டுள்ளார். [3]

சதுரகராதியில் "பவனை விலாசம்" என்கிற நூலைப்பற்றியும் அதை "நாடகத்தமிழாற்பாடுவது" என்பது பற்றியும் குறிப்பிடப்பட்டுள்ளது. [4]

பிரபந்தத்திரட்டில் விலாச இலக்கியத்தைப் பற்றிய குறிப்பு காணப்பட்டாலும், அங்குக்கூட "விலாசம்" என்ற பெயரில் "இலட்சுமி விலாசம்", "கற்பனை விலாசம்", "திருமுக விலாசம்", "சமூக விலாசம்" என்கிற நான்கு பிரபந்தங்கள் குறிப்பிடப்பெறுகின்றன. [5]

ஏனைய சிறு பிரபந்தங்கள் ஒவ்வொன்றுக்கும், தெளிவாக வரையறுக்கப்பட்ட இலக்கணங்கள் கூறப்பட்டுள்ளதைப் போன்று, விலாச இலக்கியங்களுக்குக் கூறப்படவில்லை. அப்படிக் கூறப்பட்டிருந்தால், "விலாசம்" என்ற பெயரில், ஒரு வகைப் பிரபந்தம்தான் கூறப்பட்டிருக்குமேயன்றி, நான்கு பிரபந்தங்களாக நான்கு விலாசங்களின் பெயர்கள் கூறப்பட்டிருக்க வேண்டிய அவசியமில்லை. [6]

விலாசம் – பெயர் விளக்கம்

"விலாசம்" என்கிற வடமொழிச் சொல்லிற்குப் பல பொருள்கள் சொல்லப்படுகின்றன. அழகு; ஆடவர் மகளிர் விளையாட்டு; நாணக்குறிப்பு; பத்திரிகையின் புறவெழுத்து; பொழுது போக்கு; விளையாட்டு; வினோதம்; வேடிக்கை; கூச்சம்; நாடக நூல்; சுகானுபவத்துக்குரிய இடம்; முகவரி; வியாபாரக்குறி; வாழை; தீபம், ஆகிய பதினைந்து பொருள்களைச் செப்புகிறது கழகத்தமிழ் அகராதி. [7]

"ஆடவர் மகளிர் விளையாட்டு–விலாசம் எனப்படும்" என்று விளம்புகிறது சதுரகாரதி. [8]

"விலாசம்" என்கிற சொல்லிற்குத்தமிழ் அகராதியில் சொல்லப்பட்டுள்ள பெரும்பாலான பொருள்களுடன், லீலாபிநயம்; குறியீடு; விசாலம்; ஒரு பிரபந்தம்; மேல் விலாசம், என்கிற கூடுதல் பொருள்களையும் மதுரைத் தமிழ்ப்பேரகராதி கூறுகிறது. [9]

"விலாசம்" என்கிற சொல்லிற்கு, கழகத்தமிழ் அகராதி மற்றும் மதுரைத்தமிழ்ப் பேரகராதி ஆகியவற்றில் கூறப்பட்டுள்ள பொருள்களைத்தவிர, காமக்குறிப்போடு கூடிய செய்கை; கடிதம் பெற்றுக்கொள்பவரின் பெயர் இருப்பிடம் முதலிய குறிப்பு; கூட்டு வியாபாரக்கடை அல்லது தனி நபரின் பெயரையுணர்த்துங்குறியீடு; வியாபாரிகளால் பண்டங்களிற் குறிக்கப்படும் விலைக்குறியீடு, ஆகிய பொருள்களைச் சென்னைப்பல்கலைக்கழகம் வெளியிட்டுள்ள "லெக்சிகன்" நுவலுகிறது. [10]

அணி நயங்கள் பலவும் அமையப்பெற்று அழகுடன் திகழ்வன பல விலாசங்கள். ஆடவர் மகளிர் விளையாட்டுக்களை விளக்கும் விதத்திலும் பல

விலாசங்கள் அமைந்துள்ள. நாணக்குறிப்பினையும், வேடிக்கை விநோதங்களையும் பல விலாசங்களில் காணலாம். பெரும்பாலான விலாசங்கள் நாடக நூல்களாகவும் திகழ்கின்றன. இவ்வுலகமே நம்முடைய சுகானுபவத்துக்குரிய இடமாகும். உலகில் அமைப்பினையும், தன்மை களையும், விரிவாகப்பேசுவன "பூகோள விலாசம்", "அண்டகோள விலாசம்" முதலிய விலாசங்கள். பொருள் கொடுத்து வாழ்விக்கும் வள்ளல்களின் முகவரியைக் கூறி அங்கு சென்று பொருள் பெறுமாறு ஆற்றுப்படுத்துகின்ற விதத்தில் அமைந்த திருமுக விலாசங்களும் உள்ளன. [11]

இது வடமொழியில் புராண நூலின் மரபு பற்றிப்பயிலும் "விலாசம்" என்ற பெயரைப் பெற்றுத்தமிழ்ச் செய்யுளால் அந்நெறியில் அமைந்துள்ளது என்பதே பொருந்தும். [12]

வடமொழியில் புராண நூலின் மரபிற்கு "விலாசம்" என்று வழங்குவதால்தான், தமிழிலும் பெரும்பாலான விலாசங்கள் புராணச் செய்திகளைக்கொண்டு உருப்பெற்றன போலும். காலப்போக்கில் அந்நிலைமாறி சமுதாயப்பிரச்சினைகளையும் மையமாகக் கொண்டு பல விலாசங்கள் தோன்றத் தொடங்கின. [13]

## விலாசங்களின் தோற்றமும் வளர்ச்சியும்

வடமொழி மரபு பற்றிப் பயிலும் விலாசம் என்ற பெயரில் தமிழ் நெறிக்கேற்ப இலக்கியங்களைப் படைக்கத் தொடங்கிய காலம் எதுவென்று வரையறை செய்ய இயலவில்லை. வடமொழியின் செல்வாக்குத்தமிழகத்தில் மிக்கிருந்த காலத்தில்தான் அது நிகழ்ந்திருக்கவேண்டும். தமிழ் மரபு பிறழாமல் எழுதப் பெற்ற நூல்களுக்கும் கூட வடமொழிப்பெயர் சூட்டுதல் பெருமையன்று கருதிய காலமும் உண்டு. அந்நிலையில்தான் தமிழ் இலக்கியத்திற்கு விலாசம் என்ற பெயர் சூட்டப்பட்டிருக்கும். இதை உறுதிப்படுத்தும் விதத்தில் பல விலாசங்களில், பாடல்களிலும் வசனங்களிலும் மிகுதியான வடசொற்கள் கலந்திருப்பதையும் அறிய முடிகிறது. வேறுபாடு கருதாமல் தமிழையும் வடமொழியையும் ஒப்பநினைக்கும் உளத்தோரால் உருவாக்கப் பெற்றவையே *விலாச* இலக்கியங்கள் எனலாம். [14]

இப்பொழுது கிடைத்துள்ள விலாச நூல்களில், மிகவும் பழைமையானது

“அண்டகோள விலாசம்” ஆகும். இது 16–ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் தோன்றியிருக்க வேண்டும். இந்நூல் சென்னையிலுள்ள அரசினர் கீழ்த்திசைச் சுவடிகள் நூலகத்தால் 1954–ஆம் ஆண்டு வெளியிடப்பட்டது. [15]

அப்படித்தோன்றிய அந்தத்தனி மரபைப் பின்பற்றிப் பிற்காலத்திலும் பல புலவர்கள் இலக்கியங்களைப் படைக்க முற்பட்டிருக்கவேண்டும். அதனால்தான் பல சிற்றிலக்கியங்களின் தன்மைகளும் அமைப்பும் விலாசங்களில் விரவிக்கிடக்கின்றன போலும். [16]

## சிற்றிலக்கியங்களும் விலாசமும்

விலாச இலக்கியங்களைத்தனிவகை இலக்கியங்களாகக்கருதாமல், பிற சிற்றிலக்கியங்களுள்ளேயே காணும் போக்கையும் காணமுடிகிறது. எந்தவகை இலக்கியத்தின் சாயல் இதில் காணப்படுகிறதோ, அதனைக்கொண்டே அதற்குள் இதனையும் சிலர் அடக்க முற்பட்டுள்ளனர். [17]

பூதரவிலாசம் (கோவை), சந்திரவிலாசம் (உலா) திருமுக விலாசம் (தூது), பஞ்சலட்சனத்திருமுக விலாசம் (பள்ளு), ஆறாதார விலாசம் (குறவஞ்சி), திருமுகவிலாசம் (தசாங்கம்) போன்ற விசாலங்களில் மேற்கூறிய சிறு பிரபந்தங்களின் கூறுகள் இயைந்திருப்பதைக் காணலாம். [18]

## விலாசங்கள் அனைத்தும் நாடகங்களா?

வடமொழியில் விலாசங்கள் என்ற பெயரில்ல அமைந்துள்ள அனைத்தும் நாடகங்களாகவே உள்ளன. அதே பெயர் இங்கு அமைந் துள்ளது கருதி, அனைத்து விலாசங்களுமே நாடகங்கள் என்று கருதிவிட முடியாது. ஆனால் பெரும்பாலான விலாசங்கள் நாடகப் போக்கிலேயே அமைந்துள்ளன என்று சொல்லலாம். எனினும் அந்நாடகங்களின் அமைப்பிலும் தன்மையிலும் பல வேறுபாடுகளைக்காண முடிகிறது. [19]

மேனாட்டு நாடக முறைகளைப் பின்பற்றி அங்கம், களம் போன்ற அமைப்புகளும் அமைந்துள்ள விலாசங்களும் உண்டு. பல்வேறு வகையான இசைப்பாடல்களையும், விருத்தங்களையும் இடையிடையே வசனங்களையும் பெற்று அமைந்த விலாசங்களும் உண்டு. பெரும்பாலான விலாசங்கள் இரண்டாம்

வகைப்பட்டனவே.

தொடர் நிலைச் செய்யுள் போன்று கலிவெண் யாப்பில் அமைந்த விலாசங்களும், சிலேடை, மடக்கு, திரிபு, போன்ற அமைப்பிலமைந்த விலாசங்களும் கூட இருப்பதாலும், மேலும் நிலநூல் போன்று அமைந்துள்ள "பூகோள விலாசம்", "அண்டகோள விலாசம்" போன்ற விலாசங்களும் இருப்பதாலும் விலாசங்களெல்லாம் நாடகங்கள் என்று கருத வாய்ப்பில்லை. [20]

"*சில நாடகங்கள் ஏதோ ஒரு மரபையொட்டி விலாசங்கள் என்று* அழைக்கப்பெற்றாலும், அனைத்து விலாசங்களும் நாடகங்கள் என்று எண்ணவேகூடாது. 18–ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த "பாவராகதாள சிங்காராதி அபிநயதர்ப்பண விலாசம்" "மகா பரத சூடாமணி" என்னும் நூல், இசை நாடகம் ஆகியவற்றை விளக்கும் நூலாகவே உள்ளது. ஆகவே, "விலாசம்" என்னும் சொல் லையும் நாடகத்தையும் பொருளடிப்படையில் இணைத்துக்கான இயலவில்லை. அஃது ஒரு பொதுப்பெயர் போன்று தோன்றுகிறது", 21 என்கிற கருத்தே பொருத்தமுடையதாகக் காணப்படுகிறது.

விலாசங்களின் வகைகளும் தன்மைகளும்

விலாச இலக்கியங்களை, அவை உணர்த்தும் கருத்தின் அடிப்படையிலும், உணர்த்துவதற்குக் கையாளும் யாப்பின் அடிப்படையிலும் வகைப்படுத்தலாம். புராண இதிகாச நிகழ்ச்சிகளைக்கருவாக அமைத்துத் தத்தம் மதக் கருத்துக்களைக் கூறுவதற்காக எழுதப்பட்ட விலாசங்கள்; மாணிக்கவாசகர் (மாணிக்கவாசக சுவாமிகள் விலாசம்); திருஞானசம்பந்தர் (பூம்பாவையார் விலாசம்) போன்ற நாயன்மார்களின் பெருமைகளைக்கூறிப் பக்திச் சுவையூட்டும் விலாசங்கள்; சமுதாயச் சீர்கேடுகளைச்சாடும் விலாசங்கள்; இறைவன் புகழ் பேசும் விலாசங்கள்; தனி மனிதரைப்பற்றி அமைந்த விலாசங்கள்; உலகின் தன்மைகள் அமைப்புகள் முதலியவற்றை விளக்கும் விலாசங்கள் என்று கருத்தின் அடிப்படையாக வகைப்படுத்தலாம். [22]

பாடல்களும் வசனங்களும் விரவிய நாடகப்பாங்கில் அமைந்த விலாசங்கள்; முற்றிலும் கலிவெண்பாவில் அமைந்த விலாசங்கள்; பல்வேறு வகையான யாப்புகளும் விரவிவந்த விலாசங்கள்; சிலேடை, மடக்கு, திரிபு போன்ற அமைப்புடைய விலாசங்கள் என்று யாப்பின் அடிப்படையில் வகைப்படுத்தலாம். [23]

விலாசங்கள் அமைந்துள்ள முறைகள், பாத்திரப்படைப்பு, பேச்சு மொழிகள் போன்றவற்றின் அடிப்படையில் அவற்றின் தன்மைகளை அறியலாம். விலாசங்களில் சில சுவை குன்றியனவாகவும், கருத்து நலமற்றதாகவும், தெருக்கூத்தைப்போன்ற அமைப்பிடையதாகவும் உள்ள போதிலும், சில விலாசங்கள் நாடக வரலாற்றிலேயே திருப்புமுனை என்று கூறுமளவிற்கு அமைந்துள்ளன. [24]

மாரிமுத்துப்பிள்ளை என்பவர் 18-ஆம் நூற்றாண்டிலேயே, ஆட்சியிலுள்ளவர் அதிகாரத்தினால் செய்த கொடுமைகளை நீதி நாடகம் என்ற பெயரில் இயற்றினர், என்பர். ஆனால் 19-ஆம் நூற்றாண்டின் பிற்பகுதியிலிருந்தே, சமுதாய நாடகங்கள் புதிய பொலிவோடும் வலுவோடும், வெளிவரத் தொடங்கின எனலாம். [25]

19-ஆம் நூற்றாண்டின் புகழ்வாய்ந்த நாடக ஆசிரியர்களுள் ஒருவரான காசி விசுவநாத முதலியார் இயற்றிய நான்கு சமூக நாடகங்களுள், அக்கால மக்களால் பெரிதும் பாராட்டப்பெற்று, அடிக்கடி மேடையில் நடிக்கப்பெற்ற நாடகம், 1857-ஆம் ஆண்டில் எழுதப்பட்ட "டம்பாச்சாரி விலாசம்" என்கிற நாடகம்ட ஆகும். சென்ற நூற்றாண்டில் சென்னையிலுள்ள சிந்தாத்திரிப்பேட்டையில் ஆடம்பரமாகச் சீர்கெட்ட வாழ்க்கை வாழ்ந்து, தன் அழிவைத்தானே தேடிக்கொண்ட டம்பாச்சாரி ஒருவரின் அவல வாழ்க்கையைத் துணிச்சலுடன் ஆசிரியர், இந்நூலில் படம்பிடித்துக் காட்டியுள்ளார் என்பர். இவ்வாறு நாடகத்தைச்சமூகச் சீர்திருத்தக்கருவியாக்கிய நாடகாசிரியர் காசி விசுவநாத முதலியார் எனலாம். [26]

1877-ஆம் ஆண்டில், திண்டிவனம் இராமசாமிராசு என்பவர் "பிரதாப சந்திர விலாசம்" என்னும் சமூக நாடகத்தைக் கவிதை உரைநடை கலந்து அங்களப்பிரிவுகளுடன் எழுதினார். அது முதல் தமிழ் நாடக உலகில் ஒரு மறுமலர்ச்சி தோன்றியது. [27]

1883-ஆம் ஆண்டில் பதிப்பிக்கப்பெற்ற கன்னிபுத்தூர் வேலாயுத முதலியாரின் "ஆறாதார விலாசம்" என்னும் நாடகம் அக்காலத்தில் எழுதப்பட்ட நாடகங்களிலேயே குறிப்பிட்டுப்பேசும் அளவிற்றுத்தகுதியும், நல்லநடையும், நாடகத்திற்குரிய கட்டுக்கோப்புகள் அனைத்தையும் பெற்று விளங்குவதைக் காணலாம். 19-ஆம் நூற்றாண்டின் தொடக்க கால நாடகங்களுக்கு இது ஒரு முன் மாதிரியாக விளங்குகிறது. [28]

விலாசங்களும் பாத்திரப்படையும்

விலாச இலக்கியங்கள் பெரும்பாலும் புராண இதிகாசக் கதைகளைக் கருவாகக் கொண்டு அமைப்பட்டுள்ளதால் பிரம்மன், திருமால், சிவன் ஆகிய மும்மூர்த்திகள், அவர்களது துணைவிமார்கள், மற்றுமுள்ள பல்வேறு தேவர்கள் முனிவர்கள், தேவலோக மாதர்கள் போன்றவர்களைப் பற்றிய செய்திகளையே அதிகம் காண முடிகிறது.

மாணிக்கவாசகர், திருஞானசம்பந்தர் போன்ற நாயன்மார்க ளையும், சில கற்பனை மாந்தர்களையும் படைத்துக்காட்டுவதுடன், தாங்கள் வாழ்க்கையில் சந்தித்த சில மனிதர்களையும் கூட இலக்கியங்களில் உலவ விட்டுள்ளார்கள், நூலாசிரியர்கள். பரத்தையர் வழி சென்று தன் வாழ்வைப் பாழாக்குபவர்களாகக் காட்டப்படும் மனிதர்களுங்கூட இறுதியில் திருந்தி நன் மனிதர்களாகும் தன்மையினையே பிரதாபசந்திரவிலாசம், டம்பாச்சாரி விலாசம் போன்ற நூல்களில் காண்கிறோம். [29]

விலாசங்களும் பாடுபொருள்களும்

பெரும்பாலான சிறு பிரபந்தங்கள்—அரசன், மதவாதி போன்றோரை நிறைவுபடுத்தும் நோக்கில்தான் படைக்கப்பட்டுள்ளன. அதனால்தான் அவ்வகை இலக்கியங்களில் அளவுக்கு மீறிய இன்பச்சுவையினையும், பக்திச்சுவையினையும் காணமுடிகிறது. பொருள் தரும் வள்ளலை மகிழ்ச்சிப்படுத்துவது ஒன்றுதான் அங்கு முக்கிய நோக்கம். பாடும் புலவனின் உள்ளத்து உணர்ச்சிகளுக்கு அங்கு எள்ளளவும் இடமில்லை.

தனிப்பட்ட எந்த அரசனையோ, மதவாதியையோ மகிழ்ச்சிப்படுத்த வேண்டுமென்பதற்காக எந்த விலாசம் பாடப்பட்டதாகத் தெரியவில்லை. சில நல்ல மனிதர்களின் வேண்டுகோளுக்கிணங்கிச் சில விலாசங்கள் பாடப்பட்டன. அப்படிப்பாடப்பட்ட விலாசங்களிலும்கூட உலகிற்குத்தேவையான உண்மைகளே உணர்த்தப்பட்டன.

தானப்பன் என்பவர் மீது இராமச்சந்திரக்கவிராயர் பாடியுள்ள விலாசத்திற்குத் "தானப்ப விலாசம்" என்று பெயர் சூட்டாமல், அதற்குச் "சகுந்தலை விலாசம்" என்றே பெயரிட்டுள்ளார். [30]

புராண இதிகாசத்லைவர்களின் பெயர்களில் விலாசங்கள் பாடப்பட்டுள்ளனவே அன்றித்தனி மனிதர் எவர் பெயரையும் துதி செய்து பாடவில்லை. மாறாக, தவறு செய்து கெட்டழியும் தனி மனிதர்களைக் கதைத்தலைவர்களாகப் படைத்து அவர்கள் திருந்தி நல்வாழ்வு வாழும் பாங்கினையே காட்டியுள்ளார்கள்.

தனி மனிதனைப்பற்றிச்சிந்திப்பதற்குப்பதிலாகச்சமுதாயத்தைப் பற்றி நன்கு சிந்தித்துள்ள திறம் விலாச இலக்கியங்களில் வெளிப்படுகிறது. சமுதாயச் சந்தையில் தாம் கண்ட துயர்களையெல்லாம் துணிவோடு சாடிய தன்மையினையும் விலாச இலக்கியங்களில் காண்கிறோம். இறைவனைப் பற்றிப்பாடும் போதிலும், சமூகக் கேடர்களைச் சாடும் போதிலும் சுயசிந்தனையும் உரிமையுணர்வையும் உடையவர்களாகவே விலாச இலக்கியப் புலவர்கள் விளக்கியுள்ளனர். சில விதி விலக்குகள் இருக்கக்கூடும். [31]

விலாச இலக்கியங்களில் பாடப்பட்ட பொருள்களில் மிகவும் சிறப்புடையது நாட்டுப்பற்றைப்பாடியதாகும்.

"ஆசைசேர் தந்தைதாயர் அன்புகூர் மனைவிமக்கள்
நேசர்கள் பலரோடின்னும் நெருங்கிய சுற்றத்தார்மேல்
பாசமுற்றிருத்த விந்தப் பாரினி லியற்கை யாகும்
தேசாபி மானமொன்றே தெய்வீக உணர்ச்சியாகும்"

– சகுந்தலை விலாசம் (திண்டிவனம் ராமசாமிராசு) அங். 1 களம் 1

என்ற பாடல், நாட்டுப்பற்றின் சிறப்பை, நன்கு உணர்த்தவல்லது. தேசத்தின் மீது காட்டும் அன்பே தெய்வீகமானது என்ற புரட்சிக் கருத்தைப் புகட்டும் இந்நூலே தமிழ் நாட்டில் விடுதலைக்குரல் கொடுத்த முதல் நூல் எனலாம். [32]

மேலும் விலாசங்களில் பொய்யர்களைச் சாடுதல் (பஞ்ச லட்சணத் திருமுக விலாசம்), புரட்சிக்குரல் (அப்பர் பர்மா யுத்த விலாசம்), வறுமையின் கொடுமை (ஏழு நகரத்தார் பெயரில்பாடிய திருமுக விலாசம்), அமைச்சரியல்பு (நாலுமந்திரி விலாசம்), ஆணவத்தில் இழிவு (தாருகாவன விலாசம், கிரு ண விலாசம், இரணிய விலாசம்), பரத்தமையின் இழிவு (பிரதாப சந்திரவிலாசம்) போன்ற பொருள்கள் பற்றியும் பாடப்பட்டுள்ளன. [33]

உலகைப்பற்றிய வருணனைகளையும், அதன் தன்மைகளையும் "பூகோள விலாசம்", "அண்டகோள விலாசம்" போன்ற நூல்கள் எடுத்தியம்புகின்றன. இறைவனிடத்துக்காட்ட வேண்டிய பக்தியைப் பற்றியும், இறைவனின் பெருமைகள் பற்றியும் "சங்கரவிலாசம்", "பூம்பாவையார் விலாசம்", "மாணிக்கவாசக சுவாமிகள் விலாசம்" போன்ற நூல்கள் விரிவாக விளக்குகின்றன. சித்தாந்தக் கருத்துக்களைத் தெளிவாக எடுத்துக்காட்டுகிறது "ஆறாதார விலாசம்". [34]

உண்மை பேசுவதன் உயர்வை "அரிச்சந்திர விலாசம்" பேசுகின்றது. வறுமையில் வாடியபோதிலும் பொருளுக்காக அலையும் தன்மை கூடாது, என்பதனை விளக்குகிறது "குசேல விலாசம்". தருமத்தின் வாழ்வுதனைச் சூது கவ்வினாலும் முடியில் தருமமே வெல்லும் என்கிற தத்துவத்தை உணர்த்துகிறது "மகாபாரத விலாசம்". காதலின் தன்மையினையும், காதல் வயப்பட்ட தலைவனின் மன நிலையையும் சுவைபட விளம்புகின்றன "சந்திரவிலாசம்", "சமுத்திர விலாசம்", "பூதரவிலாசம்", "பவனி விலாசம்" போன்ற இலக்கியங்கள். இப்படி அனைத்து விலாசங்குளுமே கருத்துக் கருவூலங்களாகத்திகழ்வதனைக் காணலாம். [35]

விலாசங்களும் வடிவமைப்பும்

பிற சிற்றிலக்கியங்களைப்போன்ற வரையறுக்கப்பட்ட வடிவமைப்பு, விலாச இலக்கியங்கள் அனைத்திற்கும் பொதுவாகப் பொருந்துமாறு அமையவில்லை. எனினும் உணர்த்தும் கதைகளுக்கும், கருத்துக்களுக்கும் ஏற்ற வடிவமைப்பை விலாசங்களில் காணமுடிகிறது.

பல்வேறு வகையான இசைப்பாடல்களும், சந்தங்களும், கவிதை நயம் மிக்க உரையாடல்களும் விலாசங்களைச் செழுமைப்படுத்துகின்றன. சில விலாசங்களில் பாடல்களிலும், உரையாடல்களிலும் வடசொற்கள் விரவி வந்துள்ளன. ஆங்கிலம் போன்ற பிற மொழிச் சொற்களும்; பாத்திரங்களின் தன்மைக்கேற்பக்கையாளப்பட்டுள்ளன. ஒரு சில விலாசங்கள் அங்கம், களம் போன்ற பிரிவுகளுடன் மேனாட்டு நாடக முறையில் அமைந்துள்ளன. படலம் என்றும், பிரிவு என்றும், கூடப்பகுக்கப்பட்டு நிகழ்ச்சிகள் முறைப்படுத்தப்பட்டுள்ள பாங்கும் போற்றுதற்குரியது. [36]

## விலாசங்களும் வெளியீட்டு முறைகளும்

விலாச இலக்கியங்கள் கருத்துக்களால் எப்படிச் சிறப்புற்று நிற்கின்றனவோ, அது போன்று வெளியீட்டு முறைகளாலும் சிறந்து விளங்குகின்றன. அந்நூல்களின் சிறப்பிற்கே அவற்றின் வெளியீட்டு முறைகள்தான் பெரிதும் காரணமாகும். பல்வேறு வகையான இசைப்பாடல்களாலும், சந்த விருத்தங்களாலும் படிப்பவரை ஈர்த்துவிடும் ஆற்றல்ல பல விலாசங்களுக்குண்டு. சிலேடைகளையும், மடக்கு, திரிபு போன்ற சொல்லிணிகளையும் அவர்கள் பயன்படுத்தியுள்ள பாங்கு வியத்தற்குரியது. பழமொழிகள், உவமைகள், உருவகங்கள் ஆகியவற்றை ஏற்ற இடங்களில் கையாண்டுள்ளனர். [37]

குறவஞ்சி நாடகமென்பது, நொண்டி நாடகம் போல், இடைக்கா லத்தின் பிற்பகுதியில் உண்டான நாடகப் பிரிவாம், குறவஞ்சி நாட கங்களைக்கொண்டு ஊகிப்பதானால், அக்காலத்தில் தமிழ் நாடகங்களெல்லாம் பெரும்பாலும் இசை கலந்தேயிருந்தன எனலாம். [38]

இந்நாடகங்களில் சமஸ்கிருத நாடகங்களிலிருப்பதுபோல் கடைசியில் பரதவாக்கியம் கிடையாது. அதற்குப் பதிலாகப் பொது மங்களப் பாட்டுக்கள் பல நாடகங்களில் வரையப்பட்டிருக்கின்றன. இவைகளில் வரும் பாட்டிற்குத், "தரு" என்று பெயர். [40]

மேற்குறித்தபடி ஆடப்பட்ட நாடகங்களுக்கு உதாரணமாக, பெங்களூர் அப்பாவு பிள்ளை இயற்றிய "சத்தியபாஷா அரிச்சந்திர விலாசத்தையும்", காசி விசுவநாத முதலியார் இயற்றிய "டம்பாச்சாரி விலாசத்தையும்" கூறலாம். [42]

## விலாசங்களின் சிறப்பும் தனித்தன்மையும்

சிற்றிலக்கியங்களில் ஒன்றாகப் போற்றப்படும் விலாச இலக்கியங்கள், சிற்றிலக்கியத்திற்கான கட்டுக்கோப்புகளுக்குள் அடங்காத புது மரபையுடையனவாக விளங்குகின்றன. [43]

தனி மனித வழி பாட்டிலக்கியங்களாக விளங்காமல், சமுதாயத்தைப் பிரதிபலிக்காட்டும் பாங்குடைய இலக்கியங்களாகத்திகழ்கின்றன விலாசங்கள். தவறு செய்பவர்கள் எவராயிருப்பினும் அவர்களைச் சாடும் திறமும், தீயோர் திருந்தி நல்வாழ்வு வாழ வழிகாட்டும் உரமும் அமைந்தோரால் படைக்கப்பட்டவையே விலாச இலக்கியங்களாகும். கருத்து நலமும், கற்பனை வளமும், அணி நயங்களும் அமையப்பெற்ற இவ்விலாச இலக்கியங்கள் இன்னும் முழுமையான அறிமுகத்தைப் பெறவில்லை என்றே எண்ணத்தோன்றுகிறது. [44]

## *யயாதி விலாசம் - சுவடி விளக்கம்*

"யயாதி விலாசம்" என்கிற இந்நூல், சென்னை அரசினர் கீழ்த்திசை ச் சுவடிகள் நூலகத்திலுள்ள டி. 2478 என்கிற எண் கொண்ட ஓலைக்சுவடியை ஆதாரமாகக் கொண்டு பதிப்பிக்கப்பெறுகிறது. சுவடியின் அளவு 18 1/2" X 1". ஒரு பக்கத்திற்கு 4 வரிகள். மொத்தம் 254 பக்கங்கள். ஓலை பழமையானது; பழுதடைந்துள்ளது.[1] இம்மூலச்சுவடியைப் பார்த்து மீட்டெழுதப்பட்ட (ஆர்.1682 என்கிற எண் கொண்ட) ஒரு காகிதச்சுவடியும் உள்ளது. இதுகாறும் வெளியிடப்பெறாத இச்சுவடி, இலக்கிய ஆர்வலர்களின் வேட்கையை நிறைவு செய்யும் வகையில் அச்சிட்டு வெளியிடப்படுகிறது.

## *பதிப்புமுறை:*

இத்தலைப்புள்ள சுவடிகள் வேறு எதுவும் கிடைக்காமையாலும், இந்நூல்கத்திலுள்ள ஒரே சுவடியைக் கொண்டு பதிப்பு முயற்சி மேற்கொண்டமையாலும், பல்வேறு பாட பேதங்களைக் கண்டு ஒப்பாய்வு செய்து விரிவான பதிப்பாக வெளியிடும் வாய்ப்பு அமையவில்லை. மூலச்சுவடி பழமையானதாகவும், பல இடங்களில் சிதைந்தும் முறிந்தும் காணப்படுகிறது. திருத்தங்கள் ஏதும் மேற்கொள்ளாமல் மூலச்சுவடியில் உள்ளவாறே பதிப்பிக்கப்பட்டுள்ளது.

## *நூலாசிரியர்:*

இந்நூலாசிரியர் சீர். கருணீகர் மரபைச் சேர்ந்த செம்மலும், செயமாமுனி கோத்திரத்தைச் சார்ந்தவருமான வீராசாமி என்பவரின் மகனும், பையனூர்[2] என்கிற ஊரில் வாழ்ந்தவருமான வரதராசப்பிள்ளை என்னும் கவிஞர் ஆவார்.[3]

இவர் இந்நூலைத்தவிர, திருக்கடன்மல்லைப் பதிற்றுப்பத்தந்தாதி, திருமழிசைப்பதிற்றுப்பத்தந்தாதி, திரு எவ்வுட்பதிற்றுப்பத்தந்தாதி போன்ற நூல்களையும் இயற்றியவர் என்று தெரிகிறது.[4]

இவர் சிறந்த திருமால் பக்தர் என்பதும், புராண, இதிகாச, இலக்கியப் பயிற்சி மிகுந்தவர் என்பதும், இவர் இந்நூலில் எடுத்துக்காட்டியுள்ள மேற்கோள்களிலிருந்து தெரியவருகிறது.

இவருடைய காலம் 18–ஆம் நூற்றாண்டின் இறுதிப்பகுதி, அல்லது 19–ஆம் நூற்றாண்டின் துவக்கப்பகுதியாக இருக்கலாம்.

1. A Descriptive Catalouge of the Tamil Manuscripts in the Govt. Oriental Manuscripts Library, Madras, Vol. VI 1948 (Introduction p, 2213)

2. "சோமலெ" – நமது தமிழ்நாடு – : செங்கற்பட்டு மாவட்டம். பையனூர் என்கிற ஊர், செங்கற்பட்டு மாவட்டம், திருப்போரூர் ஊராட்சிமன்ற ஒன்றியத்திலுள்ளது.

3. யயாதிவிலாசம் – செய்யுள் 9

4. அபிதானசிந்தாமணி – பண். 1386

---

# யயாதியின் கதை:

சிற்றிலக்கியங்களில் சிறப்பானதொரு இடத்தைப் பெற்றுள்ள விலாச இலக்கியங்களில் குறிப்பிடத்தக்க விலாசமான, "யயாதி விலாசம்" என்கிற நூலின் கதைத்தலைவனாகிய யயாதியின் கதையை இங்கு பார்ப்போம்.

"அறம்" என்றும், "ஐந்தாவது வேதம்" என்றும், "ஜெயம்" என்றும் புகழ்ந்து கூறப்படும் மகாபாரதத்தில் பேசப்படும் பரதன், சந்தனு, காங்கேயன் (பீ மர்), பாண்டவர்கள், கௌரவர்கள் ஆகியோரின் முன்னோர்களில் குறிப்பிடத்தக்கவன் யயாதி மன்னன். சந்திர வமிசத்தைச் சேர்ந்தவன். அத்தினாபுரத்தில் மிக்க பெருமையுடன் அரசாட்சி புரிந்து வந்தான்.

அப்போது, தேவர்கட்கும், அசுரர்கட்கும் பகையுண்டாகிப் போர் நடந்து வந்தது. அசுரர்களின் குருவாகிய சுக்கிராச்சாரியார், தான் கற்ற அமிர்க சஞ்சீவினி மந்திரத்தால், இறந்த அசுரர்களை உயிர்ப்பித்து எழுப்பி உதவி செய்து கொண்டிருந்தார்.

சுக்கிரரின் மகள் தேவயானி; அசுர மன்னன் இடபன்மனின் (விருஷபர்வன்) மகள் சன்மிட்டை (சர்மிட்டை). ஒரு நாள் தேவயானியும் சன்மிட்டையும், பல மணிப்பெண்களுடன் காட்டிலுள்ள ஓர் ஓடையில் நீராடினார்கள்.

அவ்வமயம் அவ்வழியே வந்த இந்திரன், தன்னைச் சூறாவளியாக மாற்றிக்கொண்டு, கரையில் பெண்கள் அவிழ்த்து வைத்திருந்த ஆடைகளைக் கலைத்து, ஒன்றாகக் குவித்து வைத்தான். இதைக் கண்ணுற்றுக் கலவரமடைந்த பெண்கள், விரைவாகக் கரையை நோக்கி ஓடி, அவரவர் கையில் அகப்பட்ட ஆடையை எடுத்து அவசரமாக உடுத்திக்கொண்டார்கள்.

இந்த அமளியில், தேவயானியின் ஆடையைச் சன்மிட்டையும், சன்மிட்டையின் ஆடையைத் தேவயானியும் மாற்றி உடுத்திக்கொள்ளும் படியாகிவிட்டது. இதனால் இருவருக்கும் வாக்குவாதம் முற்றியது.

தேவயானி, சன்மிட்டையை நோக்கி "அரச குலத்தவளாகிய நீ அணிந்த களங்கமுற்ற ஆடையை அந்தணகுலத்தவளும், அசுர குருவின் மகளுமாகிய நான் தரிக்கத்தகுமோ?" என்று வினவ, சன்மிட்டையானவள், தேவயானியைப் பார்த்து, "நாடாளும் வேந்தனாகிய என் தந்தைக்கு அவ்வப்போது உபாயம் சொல்லி என் தந்தை கொடுப்பதைக் கை ஏந்தி வாங்கி யாசித்து வாழ்பவரின் மகளாகிய நீ, என் ஆடையை அணியத்தகாதோ" என்று சினந்து கூறி தேவயானியை ஒரு பாழும் கிணற்றில் தள்ளிவிட்டுச்சென்று விடுகிறாள்.

அப்போது, வேட்டையாடிவிட்டு நீர் வேட்கையால் அப்பக்கம் தற்செயலாக வந்த யயாதி வேந்தன், தேவயானியின் முனகல் குரலைக் கேட்டு, அவளுடைய வலக்கரத்தைப் பற்றி அவளைக் கரையேற்றினான். அவள், யார், எப்படிக் கிணற்றில் வீழ்ந்தாள் என்பன போன்ற விவரங்களைப் பிரிவுடன் விசாரித்து அவளை, அவள் ஊருக்குப் போகும்படி அறிவுரை சொல்லிவிட்டுத்தன் அரண்மனைக்கு ஏகினான் யயாதி.

தன்னைக் கரம்பற்றித் தூக்கிக் காப்பாற்றிய யயாதியையே, தான் மணந்து கொள்ள வேண்டுமென்று தேவயானி அப்போதே தீர்மானித்து விட்டாள்.

சம்மிட்டையால் தனக்கு ஏற்பட்ட அவமானத்தான் மனம் நொந்துபோன தேவயானி, மீண்டும் ஊருக்குப் போகாமல் காட்டிலேயே தங்கிவிட்டாள்.

தன் உயிருக்கு மேலாக அன்பு செலுத்தி வந்த தன் மகள் தேவயானி கிணற்றில் தள்ளப்பட்ட செய்தியறிந்த சுக்கிரர் மிகவும் கவலைப்பட்டு, அவள் தங்கியிருந்த காட்டிற்கு வந்து, அவளுக்குப் பலவாறு ஆறுதல் சொன்னார். "மகளே மக்கள் துன்பத்தை அடைவதும், இன்பத்தைப் பெறுவதும், அவர்களுடைய குற்றங்களாலும் குணங்களாலுமேதான். ஆகையால் நீ யார் பேரிலும் கோபிக்காதே. பிறருடைய குணக்குறைவு நமக்கு ஒரு தீங்கும் இழைக்க முடியாது" என்ற தத்துவத்தை எடுத்துச் சொல்லிப்பார்த்தார்.

அதற்குத்தேவயானி, "தந்தையே என் குற்றங்களும் குணங்களும் இருந்தாவாறு இருக்கலாம். அவற்றுக்கு நானே பொறுப்பு. "உன் அப்பன் அரசர்களிடம் தோத்திரம் பாடுகிறவன் என்றும், தோத்திரம் பாடி யாடிசத்துக்கையேந்திரப் பிழைப்பவனான ஒருவனுடைய பெண்" என்றும் என்னை விருஷபர்வனுடைய மகள் சர்மி ட்டை ஏளனமாகச் சொன்னதோடு மட்டுமின்றி, கிணற்றிலும் தள்ளிவிட்டுப்போய் விட்டாள். ஆகையால் அவளுடைய தகப்பன் ஆட்சி செய்யும் ஊரில் நான் வசிக்க விரும்பவில்லை என்றும், அங்கு நான் வர மாட்டேன்" என்று கோபமும் வருத்தமும் மேலிடகூறி அழுதாள்.

அதற்குச் சுக்கிரர் "அயலார் சொல்லும் நிந்தனைச் சொற்களை எவன் பொறுத்துக்கொள்கிறானோ, அவன் உலகத்தை எல்லாம் வெற்றி கொள்வான். கடிவாளத்தைப் பிடிப்பவன் அல்ல சாரதி. குதிரையை அடக்குவது போல், கோபத்தை எவன் அடங்குகிறானோ, அவன்தான் உண்மையான சாரதியாவான். பாம்பு சட்டையை உரிப்பதுபோல் வந்து கோபத்தை எவன் நீக்கி விடுகிறானோ, அவன்தான் ஆண்மை படைத்தவன். பிறர் எவ்வளவு வருத்தினாலும் எவன் வருத்தமாலிருந்கிறானோ, அவனே சாரியசித்தி அடைவான். மாதம் தவறாமல் யாகம் செய்து கொண்டு நூறு வருடக்காலம் கழித்தவனைக்காட்டிலும், கோபிக்காதவன் மேலான தீட்சிதனாவான். கோபிக்கிற இயல்புடையவனை, வேலைக்காரனும், நண்பனும், சகோதரனும், கட்டிய மனைவியும், பெற்ற புதல்வனும், தருமமும், சத்தியமும் எல்லாமே விட்டு விலகிப்போகும். சிறுவர்களும்

சிறுமிகளும் பேசிய பேச்சை அறிவுள்ளவர்கள் பொருட்படுத்தமாட்டர்கள்" என்று அறிவுரை கூறினார். (இவ்விடத்தில் வியாச முனிவர், சுக்கிராச்சாரியார் தன் மகளுக்கு உபதேசம் செய்வதாக வைத்து, உலகத்திற்கே உபதேசம் செய்கிறார். ஆதாரம்: இராஜாஜி அவர்களின் வியாசர் விருந்து)

அதைக்கேட்ட தேவயானி "தந்தையே நான் சிறியவள். எனினும் தாங்கள் கூறும் தருமத்தின் நுட்பத்தை அறிவேன். ஆயினும் ஒழுக்கமும் மரியாதையும் தவறினவர்களிடம் நாம் வசிப்பது சரியாகாது. குலத்தை நிந்திப்பவர்களுடன் அறிஞர்கள் சகவாசம் செய்யமாட்டார்கள். ஒழுக்கம் கெட்டவர்கள் எவ்வளவு தனவான்களாயிருந்தாலும் சண்டாளர்களே ஆவார்கள். அவர்களிடம் சாதுக்கள் வசிக்கலாகாது. வருஷபர்வனுடைய மகள் சொன்ன சொல்லால் கடையப்படும் அரணிக்கட்டையைப் போல் என் மனம் தீப்பற்றி எரிகிறது. ஆயுதங்களினால் உண்டான காயம் ஆறும். தீயினால் உண்டான புண்ணும் ஆறும். ஆனால் சொல்லினால் உண்டான புண் உடல் உள்ள வரையிலும் ஆறாது. ஆகையால் விருஷபர்மனும், அவன் மகள் சர்மிட்டையும் வாசம் செய்யும் ஊருக்கு நான் வரமுடியாது" என்று கூறிவிட்டாள்.

தன் மகளின் மனநிலையை மாற்ற இயலாதென்பதை உணர்ந்த சுக்கிராச்சாரியார் நேராக விருஷபர்வனிடம் சென்று நடந்தவற்றையெல்லாம் எடுத்துக்கூறி, தேவயானி விருஷபர்டனின் ஊருக்கு வர மறுத்ததையும் அதோடு, தானும் ஊரைவிட்டு வெளியேற விரும்புவதாகவும் சொன்னார். அதைக்கேட்ட அசுர மன்னன் திடுக்கிட்டு, "நான் ஒரு பாவமும் அறியாதவன். தாங்கள் என்னை விட்டுப் போனால், நான் அக்கினியில்தான் பிரவேசிக்க வேண்டும்" என்றான்.

"என் மகளுடைய துன்பத்தை என்னால் தாங்க முடியாது. அவள் எனக்கு உயிரைக்காட்டிலும் பிரியமானவள். அவளை நீ சமாதான்பபடுத்தினால் சரி. இல்லாவிடில், நானும் ஊரைவிட்டுப் பிரியவேண்டியது தடுக்க முடியாதது ஆகிவிடும்" என்றார் சுக்கிராச்சாரியார்.

உடனே விருஷபர்வன், தேவயானி இருந்த இடத்திற்கு விரைந்தான். நடந்துபோன விரும்பத்தகாத செயல்களுக்காகத்தான் மிகவும் வருந்துவதாகவும், சர்மிட்டையை அருள்கூர்ந்து மன்னித்துவிடும்படியும் வேண்டினான். இந்த நிலையில், தேவயானி விதிக்கும் எந்த நிபந்தனைகளும், தான் கட்டுப்படுவதாகவும் தெரிவித்தான்.

"யாசிப்பவன் மகள் என்று என்னைச் சொன்ன சர்மிட்டை எனக்கு வேலைக்காரியாக இருக்க வேண்டும். என் தந்தை என்னை எந்த இடத்தில் மணம் செய்துகொடுக்கிறாரோ அங்கேயும் அவள் என் பின்னே பணிப்பெண்ணாக வரவேண்டும்" என்று பிடிவாதமாகச் சொன்னாள், தேவயானி.

தேவயானியின் நிபந்தனையை ஏற்று, சர்மி டையையும் அவளுடன் ஆயிரம் பணிப்பெண்களையும் தேவயானிக்குப் பணிவிடை செய்யும் பொருட்டு அனுப்பிவைத்தான், விருஷபர்வன். தேவயானியும் சமாதானமடைந்து தன் தந்தையுடன் ஊருக்குள் மீண்டும் பிரவேசித்து இல்லம் சென்றாள்.

அசுரமன்னன், தன் மகள் சர்மி டையைத்தேவயானிக்குப் பணிப் பெண்ணாகக்கொடுக்கும்போது, சொன்ன அறிவுரை முதனூலில் கூறியுள்ளபடி மிகவும் போற்றத்தக்கவையாகும். விருஷபர்மன் சொன்னதாவது :– "ஒரு குலத்திற்காக ஒருவனை விட வேண்டும்; ஒரு கிராமத்திற்காக ஒரு குலத்தைவிட வேண்டும்; ஒரு தேசத்திற்காக ஒரு சிராமத்தை விட்டுவிட வேண்டும்; தனக்காக (தன் ஆத்மா முத்தி பெறுவதற்காக)ப் பூமியையே விட்டுவிட வேண்டும் (விஷயங்களில் பற்றுதலை விடவேண்டும்) என்பது. (ஆதாரம் : மகாபாரதச் சுருக்கம் – ஆதிபருவம் – சந்திரவங்கிசம் யயாதிக்சுருக்கம் பக்கம் 173 டாக்டர். உ.வே. சாமிநாதையர் நூல் நிலையம், சென்னை. 1984)

சில காலம் கடந்து, வேட்டையாடுதலின் பொருட்டு ஒரு நாள் கானகத்திற்கு வந்த யயாதி, அங்கே, பல சேடிமார்கள் பணிவிடை செய்ய, தேவயானி வீற்றிருந்தகைக் கண்டான். இருவருக்கும் நடைபெற்ற உரையாடலின் முடிவில் யயாதியைத்தான் மிகவும் விரும்புவதாகவும், தன்னை அவன் கட்டாயம் திருமணம் செய்துகொள்ள வேண்டுமென்றும், தேவயானி கேட்டுக் கொண்டாள்.

அதற்கு யயாதி, அரசக்குலத்தைச் சேர்ந்த அவன் அந்தணகுலத் தைச் சேர்ந்த அவளை மணம் புரிவது முறையாகாதென்றும், அத ற்கு அவள் தந்தை சுக்கிரர் உடன்படமாட்டாரென்றும் தெரிவித்தான். உடனே தேவயானி, தான் யயாதியை மணக்க விரும்புவதைத்தன் தந்தைக்கு, ஒரு பணிப்பெண் மூலம் தெரியப்படுத்தினாள்.

சுக்கிரரும் தன் மகளின் விருப்பத்திற்குத்தடை ஏதும் சொல்லாமல், தேவயானிக்கும், யயாதிக்கும் வைதீக முறைப்படித்திருமணத்தை நடத்திவைத்தார். அவர் சார்பில் மேலும் ஆயிரம் பணிப்பெண்களைத் தேவயானிக்கு வழங்கினார்.

தேவயானியை, யயாதியோடு அனுப்பிவைக்கும்போது, சுக்கிரர் யயாதியை நோக்கிச் சொன்ன அறிவுரையாவது, "அரசே! விருஷபர் வனின் மகளான சர்மிட்டையும் உன்னால் எப்போதும் கௌரவிக்கத்தக்கவள்; ஆனால் இவளை நீ சயனத்தில் கூப்பிடத்தகாது; தொடவும் தொடாதே; தேவயானையின் பிரியத்தைச் செய்து சர்மி ட்டையும் காப்பாற்று, உனக்குச் சிரேயஸ் உண்டாகக் கடவது" என்பதாகும் (ஆதாரம்: மகாபாரதச் சுருக்கம் பக்.178).

தன் மனைவி தேவயானியோடு, சன்மிட்டை மற்றும் இரண்டாயிரம் பணிப்பெண்கள் புடைசூழ, யயாதி மன்னன் தன் அரண்மனைக்குத் திரும்பினாள். தேவயானி, யயாதியின் அரண்மனையிலேயே வசிக்கலானாள். "அசோகவணிகை" என்கிற பங்காவில் தன் இருப்பிடத்தை அமைத்துக்கொண்டாள். (Source :- Puranic Encyclopaedia p. 896)

யயாதியை மணந்த சில காலங்கடந்து, தேவயானிக்கு, யது, துருவசு என்கிற இரு புதல்வர்கள் பிறந்தனர். இதைக்கண்ட, சன்மிட்டைக்குத் தாய்மை உணர்வு தூண்டப்பட்டுத் தனக்கும் பிள்ளைகள் பிறக்கவேண்டுமென்ற எண்ணம் மேலோங்கியது. அவள் யயாதிமீது காதல் கொண்டாள்.

ஒரு நாள் இரவு, அசோக மரத்தின் கீழ் சம்மிட்டை மிக்க விரக வேதனையுடன் இருந்தாள். அப்போது, அங்கு உலாவும் பொருட்டு வந்த யயாதியைப் பார்த்து, "அரசே இன்று உமது பிறந்த நாள் விழா. பறைசாற்றி எல்லோருக்கும் வேண்டியவை யாவும் வழங்கினீர்கள். எனக்கும் ஒன்று வேண்டும். இல்லையென்னாமல் கொடுத்தருள வேண்டும்" என்ன கேட்டுக்கொண்டாள். யயாதியும், "எதுவானாலும் தருகிறேன்; என்ன வேண்டுமோ கேள்" என்றான். அதற்குச் சன்மிட்டை, "எனக்கு கர்ப்பதானம் வேண்டும்" என்றாள். (ஆதாரம்: திருமுருக கிருபானந்தவாரியார் – ஸ்ரீமகாபாரதம் வசனம் – திருப்புகழமிர்தம் காரியாலயம், சென்னை – 1980 பக். 11)

அதைக்கேட்ட யயாதி அதிர்ச்சியடைந்தான். அவள் கோரிக்கை நியாயமற்றதென்றும், அவள் வேண்டுகோளை ஏற்பது எந்த விதத்திலும் தருமம் ஆகாது என்றும் பலவாறாக எடுத்து இயம்பினான். ஆனால் சன்மிட்டையின் சாதுரியமான பேச்சையும், அவள் தன் சார்பில் விளக்கிய தத்துவ வாதங்களையும் கேட்டு அவளுடைய கோரிக்கையை இறுதியில் ஏற்று அவளை மறைமுகமாக மணந்துகொண்டான் யயாதி. அதன் விளைவாக, துருஉற்பு, அநுத்ருஉற்யு, பூரு என்கிற மூன்று புதல்வர்களைச் சன்மிட்டை ஈன்றாள். (Source:- Puranic Encyclopaedia p: 897)

சன்மிட்டையின் பிள்ளைகளுக்கு யயாதியே, தந்தை என்கிற உண்மை தெரியவந்ததும், தேவயானி கடுங்கோபங்கொண்டு, அசுரலோகம் விரைந்து தந்தை சுக்கிரரிடம், யயாதி தன்னை ஏமாற்றித் தனக்குத்துரோகம் இழைத்துவிட்டதாகச் சொல்லி அரற்றினாள்.

தன் மகளை வஞ்சித்துவிட்ட யயாதியின் மேல் கடுஞ்சீற்றம் கொண்ட சுக்கிரர், யயாதிக்கு "முதுமையும் காசநோயும் வந்து வருத்தக்கடவது", என்று சாபமிட்டார். அதன் விளைவாக முதுமையும் காசநோயும் உடனடியாக ஆட்கொண்டுவிட்டன. தன் முதுநிலை குறித்து மிகவும் கலங்கிப்போன யயாதி, தான் இன்னும் இளமை இன்பத்தை முழுவதும் துய்க்கவில்லையாதலால், தனக்குச் சாப விமோசனம் வழங்குமாறு வேண்டினான்.

யயாதியின் வேண்டுகோளைச் செவிமடுத்த சுக்கிரர், யயாதியின் புதல்வர்களின் ஒருவனுக்குத்தன் முதுமையை வழங்கிவிட்டு, அவனுடைய இளமையைத்தான் பெற்றுச் சிலகாலம் இன்பசுகம் அனுபவித்து, அரசு புரிந்து, பின்னர் அந்தப் புதல்வனுக்கே இளமையை மீண்டும் வழங்கி முடி சூட்ட வேண்டும், என்று சாப விமோசனத்திற்கு வழிகோலினார்.

சுக்கிரர் சொன்னபடி, யயாதி, தன் ஐந்து புதல்வர்களையும் ஒவ்வொருவராக அமைத்து, அவர்களுள் யாராவது ஒருவன் யயாதியின் முதுமையை வாங்கிக்கொண்டு, அதற்குப்பதிலாகத்தன் இளமையைச்சில காலம் வழங்க இயலுமா என்று வினவ, அதற்குத் தேவயானியின் புதல்வர்கள் யது, துர்வசு, என்கிற இருவரும், சன்மிட்டையின் புதல்வர்கள் மூவரில் த்ருஹ்யு, அனுத்ருஹ்யு என்கிற இருவரும், யயாதியின் கோரிக்கையை ஏற்க இயலாதென்று மறுத்துவிட, சன்மிட்டையின் மூன்றாவது புதல்வன் பூரு, என்பவன் மட்டும், மனமுவந்து தன் இளமையைத்தன் தந்தையாகிய யயாதிக்கு வழங்கிட ஒப்புக்கொண்டான். தன் வேண்டுக்கோளை நிராகரித்த ஏனைய நான்கு புதல்வர்களையும் யயாதி கடுமையாகச்சபித்து விட்டான்.

யதுவை – அவன் சந்ததி அரசை அடையாமலே போகக் கடவது என்றும், துர்வசுவை – அவன் சந்ததி நாசமடைவதோடு, அவன் மிலேச்சர்களுக்கு அரசனாவான் என்றும், துருஹ்யுவை – அவன் இன்பம் நிறைவேறாதுபோய், அரசு இல்லாமல் சந்ததியோடு ஓடம் விடும்படியான கழிப்பிரதேசத்தில் போஜன் என்கிற பெயரோடு திரிய வேண்டுமென்றும், அனுத்ருஹ்யுவை – அவன் அக்நிஹோத்திரத்தை விட்டவனாய்த்திரிய, அவன் சந்ததிகள் வாலிப வயது வந்தவுடன் இறந்து போக வேண்டுமென்றும் சபித்தான்.

யதுவினிடமிருந்து யாதவர்கள் பிறந்தார்கள். துர்வசுவினிடமிருந்து யவனர்கள் பிறந்தார்கள். த்ருஹ்யுவின் புத்திரர்கள் போஜர்கள் ஆனார்கள். அனுத்ருஹ்யுவின் புத்திரர்கள் மிலேச்சர்களானார்கள்.

“பூரு”வினிடமிருந்து இளமையைப் பெற்ற யயாதி, சில காலம் இன்பம் துய்த்து, பின்னர் அவ்வின்பத்தில் பெரும் வெறுப்படைந்து, அந்தப்பூருவினுக்கே அரசோடு இளமையையும் திருப்பிக்கொடுத்துவிட்டு, துறவு மேற்கொண்டு வனத்துள் புகுந்தான்.

வனத்துள் புகுந்த யயாதி, சிலகாலம் காயையும் இலையையும் உண்டும், பிறகு அவற்றையும் விட்டு, சில காலம் காற்றை மட்டும் புசித்தும், பின்னர் தீயின் மத்தியில் சிலகாலம் நின்றும், நீரின் மத்தியின் ஒற்றைக்காலால் சிலகாலம் நின்று கொண்டு கடுந்தவம் புரிந்து, பின்னர் பிரம்ம லோகம் சென்று, அங்கு பிரம்மன் கொடுத்த தூய வரத்தால் அங்கேயே பல காலம் தங்கியிருந்த பின்னர், தேவலோகம் சென்று வாழ்ந்து வந்த காலத்தில், ஒரு நாள், இந்திரனுடன் யயாதி

ஒரு சேர வீற்றிருந்து பேசிக்கொண்டிருந்தபோது, யயாதி, முனிவர்களும் தேவர்களும் இயற்றுகின்ற தவத்தினை இகழ்ந்து, தான் செய்த தவத்தைப் பாராட்டித் தற்பெருமையுடன் புகழ்ந்து கூற, அதைக்கேட்ட அமரேசன், யயாதியை நோக்கி "மேலோர்கள் செய்த தவத்தினை உன் அகந்தையால் இகழ்ந்ததினால், உன்னுடைய தவங்களின் பயன் இன்றோடு உன்னை விட்டு நீங்கியது. ஆகையால் மேலோர்கள் வாழும் தேவ லோகத்தை விட்டுப் பூமியில் விழுக" என்று சினந்து சபித்தான்.

யயாதி, தன்னுடைய அகந்தைப் பேச்சிற்கு மிகவும் வருத்தம் தெரிவித்து, தன்னை மன்னித்து, மண் மீது விழாமல், விண்ணிலேயே நின்றிட அருள் புரியுமாறு இந்திரனை வேண்ட, அவ்வாறே இந்திரனும் அருள் வரம் நல்கிட, மாசற்ற தவத்தோர் முன்னிலையில் யயாதி அடி நிலம் படாமல் அந்தரத்திலேயே நின்றான்.

அவ்வாறு அந்தரத்திலே நின்ற யயாதியைப் பார்த்து, தவத்தோர் (வசுமான், அ டகன், பிரதர்த்தனன், சிபி என்கிறவர்கள் அரசர்களாயிருந்து பின்னர் சாதுக்களானவர்கள்), அறம், பவம் (பாவம்), சுவர்க்கும், கும்பி (நரகம்), கருவுற்பத்தி, நான்கு ஆசிரம நிலைகள், ஆகியவை பற்றி விளக்கிக் கூறும்படி வேண்ட, யயாதியும் அவற்றைத் தெளிவுபட விளம்பினான். யயாதியின் விளக்கத்தைத்கேட்ட சாதுக்கள், தங்களுக்கும் அந்த மேலான சுவர்க்கலோகம் கிடைக்குமோ என்று வினவ, அந்த நால்வர்க்கும் ககன நாடு கிடைப்பது உறுதி என்று சொன்னான்.

சிலகாலம் கடந்த பின், சாதுக்கள் நால்வரும் யயாதி மன்னவனுடன் ஒரு சேர சுவர்க்கம் அடைந்தனர்.

சுவர்க்க லோகத்தினின்றும் இந்திரனால் தள்ளப்பட்ட யயாதி வேந்தன், சாதுக்களின் சேர்க்கை கிடைத்ததனால் மீண்டும் சுவர்க்கம் அடைந்தான்.

# அடிக்குறிப்பு விளக்கம்

| | | |
|---|---|---|
| | | பக்கம் |
| 1. | மு. அருணாசலம், பதி – பிரபந்தமரபியல் (அ.கீ.சு.நூலகம், சென்னை) 1976 | 7 & 8 |
| 2. | தமிழ் இலக்கியக்கொள்கை–7 (விலாசம் – கரு. நாகராசன் உலகத் தமிழ் ஆராய்ச்சி நிறுவனம், சென்னை) 1980 | 224 & 225 |
| 3. | தமிழ் இலக்கியக் கொள்கை–2 | |
| 4. | வீரமாமுனிவர் – சதுரகராதி | 320 |
| 5. | த.இ.கொ – 7 | 225 |
| 6. | த.இ.கொ – 7 | 226 & 227 |
| 7. | கழகத்தமிழ் அகராதி (சைவ சித்தாந்த நூற்பதிப்புக்கழக வெளியீடு) 1969 | 857 |
| 8. | சதுரகராதி | 204 |
| 9. | மதுரைத்தமிழ்ப் பேரகராதி, பகுதி–2 | 606 |
| 10. | தமிழ் லெக்சிகன், தொகுதி–6 பகுதி–4 (சென்னைப்பல்கலைக்கழக வெளியீடு) 1935 | 3713 |
| 11. | த.இ.கொ – 7 | 232 |
| 12. | மேற்படி நூல் 7 | 232 |
| 13. | மேற்படி நூல் 7 | 232 |
| 14. | மேற்படி நூல் 7 | 232 |
| 15. | அண்டகோள விலாசம் (அ.கீ.சு.நூலகம்) 1954 | |
| 16. | த.இ.கொ – 7 | 223 |
| 17. | மேற்படி நூல் | 227 |
| 18. | மேற்படி நூல் | 227–229 |
| 19. | மேற்படி நூல் | 229 |
| 20. | த.இ.கொ – 7 | 231 |
| 21. | ஏ.என். பெருமாள் – தமிழ் நாடகம்–ஓர் ஆய்வு (தமிழ்ப்பதிப்பகம், சென்னை – 20) 1979 | 33 |
| 22. | த.இ.கொ – 7 | 233 |

23. மேற்படி நூல் 234

24. மேற்படி நூல் 234

25. சக்திப்பெருமாள் – தமிழ் நாடக வரலாறு (வாஞ்சிக்கோ பதிப்பகம், மதுரை) 1979 203

26. சக்திப்பெருமாள் – தமிழ் நாடக வரலாறு 206

27. ஏ.என். பெருமாள் – தமிழ் நாடகம் – ஓர் ஆய்வு 79

28. தமிழ் நாடகத்தின் தோற்றமும் வளர்ச்சியும் (அணியகம், சென்னை) 1977 113

29. த.இ.கொ – 7 235

30. த.இ.கொ – 7 240

31. மேற்படி நூல் 241

32. த.இ.கொ – 7 242

33. மேற்படி நூல் 242–248

34. மேற்படி நூல் 248

35. மேற்படி நூல் 249

36. த.இ.கொ – 7 249

37. மேற்படி நூல் 250

38. கலைக்களஞ்சியம், தொகுதி–6 (தமிழ் வளர்ச்சிக்கழகம்) 367

39. மேற்படி நூல் 367

40. மேற்படி நூல் 367

41. மேற்படி நூல் 368

42. மேற்படி நூல் 368

43. த.இ.கொ – 7 233

44. மேற்படி நூல் 255

## யயாதி விலாசம்
## நாடக உறுப்பினர்கள்

### ஆடவர்

| | | |
|---|---|---|
| யயாதி | - | நகுஷனின் மைந்தன்; அத்தினாபுரியின் வேந்தன், |
| யது<br>துருவசு | - | யயாதியின் புதல்வர்கள் (தாய் - தேவயானி) |
| துருஹ்யு<br>அனுத்ருஹ்யு<br>பூரு | - | யயாதியின் புதல்வர்கள் (தாய் - சன்மிட்டை) |
| இடபன்மன் | - | அசுர வேந்தன்; சன்மிட்டையின் தந்தை |
| சுக்கிரன் | - | அசுர குரு, தேவயானின் தந்தை |
| பிரகஸ்பதி | - | தேவ குரு |
| கச்சன் | - | பிரகஸ்பதியின் புதல்வன் |

### பெண்டிர்

| | | |
|---|---|---|
| தேவயானி | - | சுக்கிரனின் மகள்; யயாதியின் முதல் மனைவி |
| சன்மிட்டை | - | இடபன்மனின் மகள்; யயாதியின் இரண்டாவது மனைவி |

# யயாதி விலாசம்

## 1. விநாயகர் காப்பு வெண்பா

திங்கண் மரபிற்றோன்றுஞ் சீரார் யயாதியின்மேற்
றுங்க விலாசமியான் சொல்லவே – அங்கத்தை
மஞ்செனத்தரித்த வீசன் மஞ்சையற்குமுன் பயின்ற
மஞ்சனைப் பணிந்து வாழ்த்து வாம்.

## 2. சுப்பிரமணியர் அறுசீர் அடியாசிரிய விருத்தம்

நயங்கொள் புயங்கக் கேதனன் பால் நண்ணிப்
பொறுமைதனிற் சிறந்த
செயங்கொள் பஞ்ச பாண்டவர்க்குத்
திருநா டிரந்த பெருமானின்
வயங்கொண் மருகனென வுதித்து வானோர்
துயர்த்திகைத் தவிர்த்துத்
தயங்குசம ரூருறை நீபத்தாரோன்
பதுமத்தான் பணிவாம்

மஞ்சையன் – மயில்வாகனன்
மஞ்சன் – மைந்தன்
மஞ்சையற்குமுன்பயின்ற மஞ்சன் – விநாயகர்
பஞ்சபாண்டவர்க்குத் திருநாடீந்த பெருமான் – கண்ணன்
மருகன் – மருமகன்
புயங்கம் – பாம்பு
கேதனம் – கொடி
புயங்கக்கேதனன் – பாம்புக் கொடியை உடைய துரியோதனன்
நீபம் – கடம்பு
தார் – மாலை
நீபத்தாரோன் – கடம்ப மாலையை அணிந்த கந்தன்

### 3. திருமால் அறுசீர் அடியாசிரிய விருத்தம்

மால்வா ரணத்தி றுழலாமல் மன்னு மடியார்க் கருள்புரிய
மால்வா ரணத்தின் மகவெனவே வடபல் லவத்திற்றுஞ் சிறைவர்
வால்வா ரணத்த னருந்தவரு மலரிற் றோன்றுந் திசைமுகனும்
வால்வா ரணத்தன் காணரிய மாயோன் பதுமத் தாள்பணிவாம்

### 4. திருமகள் விருத்தம்

திரை புனை னடல்கள் சூழ்ந்த தின்புவி யினிற்று தித்த
இருபுனைத் துருவ னுக்கன் றினிய நற் பதவி யீந்து
வருவினை யகற்று மாயன் மன்னிய வுரத்தில் வாழ்செந்
திருவினை வணங்கி யானுஞ் சிந்தையிற் றுதிசெய் வேனே

### 5. சிவன் விருத்தம்

வெண்டும்பை வில்வமகழுடன் தரித்தாய் போற்றி
மதலையை யருந்தி வங்க வரை யுறை மகிபா யோற்றி
முதலைவாய் சிக்குஞ் சோயை மு.... வளித்தாய் போற்றி
முதலைமா முகவன் திவ்விய முனரிபொற் பதம் போற்றி

வாரணம் – கடல்
பல்லவம் – இலை
திசைமுகன் – நான்முகன்
துருவன் – துருவ நட்சத்திரம்
தும்பை – வென்றோரின் மாலை
வில்வம் – வில்வ மாலை
முளரி – தாமரை

## 6. உமையவன் எழுசீரடி ஆசிரிய விருத்தம்

நீளுல கத்தினை வாலம் மதிக்குடை நீழல் நடாத்தியுயிர்
நாளும எிக்கும் யயாதி சரித்திரம் நானு முரைத்திடவே
வேளைநு தற் கணி னாலேயெ ரித்த விநோதனிடப்பாகத்
தாளைத டத்திமை மாலவரை நற்சுதை தாளைது தித்திடுவோம்

## 7. சரஸ்வதி அறுசீரடி ஆசிரிய விருத்தம்

நிலைமையுள புலவருடை யிதயமலர்
மிசையினிலே நின்று நாளும்
நலமுடனே வரமுதவு நாமகளின்
நளினபதம் நாளு மேத்தித்
தலமுழுது மோர்குடைக் கீழ்த் தலமை
யுடனே செங்கோல் தனி ந டாத்தும்
வலமுயர் யயாதியெனு மகிபனுடைச்
சரிதமதை வழுத்துவேனே

வேளை நுதற் கணினாலே யெரித்த விநோதன் – மன்மதனை நெற்றிக்கண்ணால் எரித்த பரமசிவன்
மாலவரை நற்சுதை – மலையத்துவசன் பெற்ற மகள்
மிசை – மேலே
மகிபன் – மன்னன்
வழுத்தல் – சொல்லல்; வலம் – வலிமை; சேனை; மேல்; வெற்றி

## 8. காளி விருத்தம்

நதிமதி வடையா னோடு நடனஞ் செய்தவளே போற்றி
ததியினி லுதவு கின்ற சாமளைத் தாயே போற்றி
அதிபனான தக்கன் செய்த வருமகந் தனைய ழித்த
மதிமிகு வீர பத்திரன் மனைவியே போற்றி போற்றி

## 9. பாடினோன் விருத்தம்

சீராரு மதிமரபு நகுட னீன்ற
செம்மல் யயாதி சரிதைத் திகழும் பாரில்
பேராரும் படியிசை விலாச மாகப்
பேசினான் றகைபைய நகரில் வாழும்
ஏராருஞ் சீர்கருணர் மரபு செம்மல்
எழிற் செயமா முனி கோத்திர னிணையி லாத
வாராரு முகில் வீரா சாமி யீன்ற
வரதரா ஜனென்னுங் கவிவல் லோனே

நதிமதி சடையான் – நதியாகிய கங்கையையும், மதியாகிய சந்திர னையும் தலைமேல் தாங்கில் சிவன்
ததியினில் உதவுகின்ற – தக்க சமயத்தில் உதவுகின்ற
தக்கன் – தட்சன்
மதிமரபு – சந்திர வமிசம்; பைய நகர் – பையனூர் என்கிற நகர ம்
கருணர் – கணக்கர்

## 10. அவையடக்கம்

மன்கவியுந் தருந்தேவ யானை தன்னை
மதிமரபு நகுடனருள் யயாதி வேந்தன்
வன்கவின் செய் மன்றல்புரி சரிதை மிக்கோர்
மாநிலத்தில் வழுத்திய நல்வட நூல் தன்னை
மின்கவிஞ ரிடபாத்துக் களிறி னானு
மிகச் சிறியேன் விலாசமென வியந்து ரைத்த
புன்கவியு மென் கவியாயக் கருதி யன்பு
பொருத்துவார் புகழ் பரவு புலவர் மாதோ

## 11. மங்களம்

இராகம் : பந்துவரானி தாளம் : ஆதி தாளம்

மங்களம் மங்களம் செயசுப மங்களம் மங்களம்
அங்கண் மாதிரத்தினில் அடியார்க் கருள்விளைக்கும்
அத்திவதனருக்கும் அரிவை வல்லபைக்கும் மங்களம்...

வட பல்லவத்தினிற் கண்வளராதி மூலனுக்கும்
மரை மலரிலுதித்த வயமுறு மாதினுக்கும்
திடவிருடியார் துதிதிகழாறு முகனுக்கும்
தேவயானைக்குமெழில் சேரும் வள்ளி தனக்கும் மங்களம்...

அத்திவதனர் – யானை முகத்தையுடையவர்; வல்லபை – பார்வதி
வடபல்வத்தினில் கண்வளர் ஆதிமூலம் – திருமார் (வடபத்திரசாயி)
மரைமலர் – தாமரைமலர்
மரைமலரில் உதித்த வயமுறுமாது – இலக்குமி

நானிலத்திற் புகழும் நாவலருக்கு வாக்கும்
நற்றிறமு மருளிச் சித்தம் மகிழ்ந்து காக்கும்
தூநிலவு பாரதி சுருதியன புகழோர்க்கும்
சூலபாணி யுமைக்குஞ் செத்தினாபுரியூர்க்கும் மங்களம்...

இந்திரன் போலரசாண்ட இகல் யயாதி கோனுக்கும்
இடபன் மனு மளித்தவிகல் சன்மிட்டை மானுக்கும்
தந்தைக் கிளமை தந்த தகை தருமவானுக்கும்
தம்பியெனவே வருதகைமையிரு சூனுக்கும் மங்களம்...

## 12. விநாயகர் வருகிற விருத்தம்

சீருய ரவனியெல்லாஞ் செழித்திடச் செங்கோல் கொண்ட
பேருயர்மன் யயாதி பிறங்குள சரிதை கூற
ஒருயர் சுருதி யன்ன விலகிய பார தத்தை
மேருவி லெழுதும்பால விநாயகர் வருகின் றாரே

பாரதி – கலைமகள்
சுருதி – வேதம்

## 13. விநாயகர் வருகிற தரு

இராகம் – கல்யாணி தாளம் – ரூபகம்

பால விநாயகர் வந்தார் – ஆதி
மூல விநாயகர் வந்தார்
ஞாலமெல்லாம் புகழ் கோல வாகு வேறி
நன்மையுறும் பைய நகர் தனிற் செய்ய பால விநாயகர்...
சீரில் மிகுந்த வெண்ணீறணியீசர்க்கு செல்வமுள்ள குமாரன்
சிந்தை மகிழ்ந்து தன் தந்தை பதஞ்சுற்றி தீங்கனி வாங்கிய தீரன்
பாரினிலே யவர் வாரிசமா மலர் பதம் நம்பினோர்க் காதாரன்
பஞ்ச வதனத்தன் நெஞ்சரணம் யோற்றும் பக்தர்களுக்குபகாரன்
மிகவீர மிகுந்த நல்லங்குச பாசன்
வேள்வி நூலுக்காதி பூசை கொள் நேசன்
மாரனைத் தந்தோன் மருகன் கணேசன்
மாது சிரோமணி வல்லபை விஸ்வாஸன்

ஞாலம் – நிலம்; வாரிசம் – தாமரை
மாரன் – மன்மதன்; மாரனைத்தற்தோன் – திருமால்; திருமாலின் மருகன் – கணேசன்
வல்லபை – பார்வதி

மங்கிலைங்கர நாதன் சிந்தை
மகிழ்ந்தருள் செய்விநோதன்
மருப்பங்கய மலர்ப் பாதன்
தகைப்பண்பு பெறு நன்னீதன்

வெவ்வங்கை யகற்றிய வானவரும்

மதிமா முனிவோரும் வணங்கி நித்தந்துதி

தங்க வரையினிற் பாரதத்தைப் பதி

சந்திரனென்னவோர் வெண்மருப்பு முதி பாலவிநாயகர்...

## 14. கட்டியக்காரன் வருகிற பொது விருத்தம்

தட்டறு சுத்தவீரந் தாளினில் வணங்கப் போரில்

கிட்டியே வதைக்கும் நல்ல கீர்த்திசேர் மற்கண் டீரன்

வட்டவா ருலகை யாளுமன் யயாதியின் பொன் வாசற்

கட்டியக் காரன் மிக்க களிப்புடன் வருகின் றானே

## 15. கட்டியன் வருகிற தரு

இராகம் ; சங்கராபரணம் தாளம் : அடதாளம்

கட்டியக்காரன் வந்தான் அதிவுத்தார

கட்டியக்காரன் வந்தான்

பட்டவர்த்தனரை யதட்டி யெந்நாளுமேவும்

பணைத்த மதகளிறு போற் கனைத்துலுடனுலாவும்
கட்டியக்காரன். ..

பங்கய மலர் – தாமரை மலர்; வெண் மருப்பு – வெள்ளைத் தந்தம்
பணைத்த – பருத்த
மதகளிறு – மதயானை

சிரத்திற் பகையும் புனைந்துஇச்

செக மெலாம் ஓரடிய ளந்துமெய்

தகைபெறும் திருமாலின் கழலிணை

சித்தமதனில் நினைந்து

கரத்தில் பிரம்பெடுத்து கருதலரைக்கடுத்து

சரத்தை மார்பிற்றொடுத்து தகுந்த நீதியடுத்து

திருத்த நுதலிற்பொட்டு திகழத் திருத்தியிட்டு

பருத்த சல்லடந்தட்டி பண்பா யரையிற் கட்டி

பங்கஜமர் முகனங் கஜனைநிக

ரிங்கிவனென் புகழெங்கும் பரவமிக

இரண வரிசைகள் கிரணமருவிய

இனிய கொலுவினை புநிதிவெழில்செய கட்டியக்காரன்...

செகமெலாம் ஓரடியளந்து – வாமனனாய் அவதாரம் செய்து மகாபலிச் சக்ரவர்த்திக்கு ஓரடி நிலம் அளந்தது
கழல் – பாதம்
கருதல் – பகைவர்
சல்லடம் – குறுங்கால் சட்டை
அங்கஜன் – காமன்

## 16. கட்டியன் சொல் – கட்டியம்

நாற்றிசைகள் முழுதினும் வாத்தியந் திரைமேவு

நாளையெனவே முழங்கு

மாற்றலர்களஞ்சி நனிபோற்றி செய்தேயிரு

மருங்கினுநெருங்கிபணிய

சாற்றருங் கேள்வி மனுநூற்நெறி யமைச்சர்கள்
தருக்குடன் கூடவரவே

ஞானப்பிரகாச முளகான விருடியரெலா
நன்றாக வாசி கூற
வாகுவில் சிறந்தகனி பாகுநேர் மதுரமொழி
மங்கையர் நிருத்தஞ்செய
சந்திரவட்டக் குடையை யந்தமாய்த் தாங்கியே
தகைமையுளவரசர் சூழ
எங்கணு மிருந்து வந்திங்கு வைகினர்வர்கள்
யாவருமெச்சரிக்கை

மாற்றலர் – பகைவர்; தருக்கு – எழுச்சி
வாகு – அழகு; நிருத்தம் – நாட்டியம்

### 17. யயாதி இராஜன் வருகிற விருத்தம்

தந்தியை மறைக்குஞ்சாலி நீடித்த முதல் மருதமுஞ் சூழ்ந்த
செந்திரு மருவுமத்தினாபுரியிற் செருக்குடன் மருவிய கோமான்
சந்திர குலத்தில் வந்தவதரித்த தரியலா வணங்கிடும் யயாதி
அந்தமு மிகுந்த அரியணை மீதலமலர்ந்தரசாள வந்தனனே

வசனம்

அகோதெப்படியென்றால் ஸ்ரீமகாலட்சுமி வாசம் பொருந்திய அஸ்தினாபுரி நகரத்திலிருந்து அன்பத்தாறு தேசமும் அரசு செய்கின்ற சந்தர குல திலகராகிய யயாதி மகாராஜன் இரத்தின சிம்மாதனக் கொலுவிற்கு வருகிற விதம் காண்க.

## 18. யயாதி இராஜன் வருகிற தரு

இராகம் : மத்தியமாவதி   தாளம் : அட தாளம்

வானவர் மகிழுல்லாச மாநிலத்துதிய் பிரகாச
மகிபன் யயாதி வந்தான்
பானுவைக் கண்டலரும் பங்கய மலர்க்கண்ணன்
பாதமலரை நிதம் பணிந்திகு மிகு பண்ணன்
பாரிற் சொல்லரிச்சந்திரன் நேரிற் புகழினிலிந்திரன்

(வானவர்...)

தந்தி – ஆண் யானை; சாலி – நெல்
மகிபன் – அரசன்; பானு – கதிரவன்

மகுடமுடியில் மின்ன செவியிற் கதிர்
மருவுங்குழைகடுன்ன
நிகரிலாப் புஜ கீரிதி தகதகன்றொளிமின்ன
நெடிய மார்பினிற் சந்திர ஆரம்பளபளென்ன

நீதிக்கொரு மனுவொத்தவன்

ஓதற்குயர் கலை கற்றவன்

(வானவர்...)

இகலடையலர்வாட வேந்திழைமாத

ரியலாய் சாய்மரை போட

சுகமொழிகட் கிசைந்த தோகையர் நடமாட

தூய நன்னாவலர் தொடுத்து கவிகள் பாட

சுகுணத்தருவென கைத்தலன்

மகிழத்தினபுரி மெய்த்தலன்

(வானவர்...)

பகருமொழி நன்னேயன் குரவர்முனி

பரிவு கொண்டிடுந் தூயன்

தகைமையற்ற பொல்லா தன்மையுள்ளோர்க்கு தீயன்

தஞ்சமென்றடைந்தவர் நெஞ்சமகிழ் சகாயன்

தனிமன்மதனென சந்திரன்

முனிவெஞ்சமரினில் தந்திரன்

(வானவர்...)

இகல் – பகை
கீரிதி (கீர்த்தி) – புகழ்

### 19. இராஜன் கடவுளை வாழ்த்து விருத்தம்

மதியமும் மாரி பெய்ய மாநிலத் துயிர் செ ழிக்க
மதமிகு முனிவர் வேள்வி மறையவர் சுருதி ரீய்ாங்க
மதிவட்டக் குடை நீழ் செங்கோல் வண்மையாய்ச் செலுத்த வேணும்
மதிவத னத் தாட் செல்வி மகிழ்ணனே போற்றி போற்றி

### 20. முதல் மந்திரி இராஜனுக்குப் போற்றி விருத்தம்

நேமிசூ முலகில் வைகும் நிருபரை வென்று வாகைத்
தாமுமு மணிந்து போற்ற தக்கதா யுலக மெல்லாஞ்
சோம வெண் குடையி னீழற் றுரைத்தனஞ் செய்யுகின்ற
பூமனே யுனது கஞ்சப் பொன்னடி போற்றி போற்றி

### 21. இரண்டாவது மந்திரி இராஜனுக்குப் போற்றி விருத்தம்

ஐங்கணை மதன னென்ன அழகுள மன்னா போற்றி
தங்கமா மகுடம் பூண்ட தகைபெறு மகிபா போற்றி
கொங்கவிழ்ப் புன்னை மாலைக் குலவியப் புஜனே போற்றி
எங்களாண் டவனே யுந்த னிணையடிக் கமலம் போற்றி

சுருதி – வேதம்;
நேமி – கடல்;
கஞ்சம் – தாமரை
மகிபன் – மன்னன்

## 22. கட்டியன் எச்சரிக்கை கூறல்

வாரிதிகள் சூழுமித் தாரணியை யாள்கின்ற மகிபனே எச்சரிக்கை
பாரினி லிருக்கின்ற நேநவர்கள் வந்து பணி பாதனே எச்சரிக்கை
மாருத நிகர்த்த வய மேருவை ப ழித்த புற மன்னனே எச்சரிக்கை
காரென்ன கற்பகத் தாரெனவு மீகின்ற காதலா எச்சரிக்கை
வயமாத விசிலதிக இயலாக வைடுமணி மகுடனே எச்சரிக்கை
பஞ்சாயு தன் கழலை நெஞ்சனிலி றைஞ்சு முணர் பார்த்திபா எச்சரிக்கை
மதி மரபு தனில் வந்த அதியன கு டன் தந்த வள்ளலே எச்சரிக்கை
காக்ஷியாயத் தாக்ஷியில் லாமலர சாக்ஷி புரி கர்த்தனே வெகு பர ாக்கு

*வாரிதி* – கடல்
நேரலர் – பகைவர்
பஞ்சாயுதன் – திருமால்
மதி மரபு – சந்திர வமிசம்
நகுடன் – யயாதியின் தந்தை

### இராசன் தேச விசாரணையும் மந்திரி விடையும்

### கட்டியம்

இரா : திருமருவு புட வியிற்றிங்கள் மும்மாரியுஞ்சீருடன் பெய்கின்றதா?

மந் : தீதிலாவுந்தன் மநு நீதியால் மும்மாரி திணையில் மதியிற்பெய்யுது

இரா : மருவளருமாலையணி நிருபருங்கப்பணம் வகையுடன்றருகிறாரா?

மந் : வாச மலரணியும் புயாசலா காசளவு வையாது திறை தருகிறார்

இரா : அருமுறையவரு நித்திய கர்மம் செய்தபமிவைகளன்புடன் செய்கிறாரா?

மந் : ஐயனே மறையவர் செய்கீர்த்தியமியாவையும் ஆவாய் செய்கிறார்கள்

இரா : சுரபியுந்திறமருவுமரியுமொரு துறையினிற்துன்னிஜலமுண்கின்றதா?

மந் : தூய பசுவும் புலியுநேயமாய்ப் புனலையொரு துறையினிலிருந்துதரசே

## 23. இராஜன் மந்திரிக்குச் சொல் விருத்தம்

பொன்னென மதி மி குத்த புகழ்பெறு மமைச்சர்க் கெல்லாம்
மன்னரே கேனீ ரிங்கு மகிழுட னிருத்தஞ் செய்யும்
நன்னடை யவள் போய் நீ ண யனவேய் தோளும் வாய்ந்த
மின்னெனு மருங்கு லாரை விரைவுடன் வரச் செய் வாயே

மாரி – மழை; நிருபர் – அரசர்; கப்பணம் – கப்பம்
சுரபி – வெண்பசு; அரி – புலி; துன்னி – நெருங்கி
வேய் – மூங்கில்; நிருத்தம் – நடனம்
மருங்கல் – இடை

### வசனம்

கேளுங்கள். பிரகஸ்பதி போன்ற மதியூதிகளாகிய மந்திரிமார்களே! நமது கொலுமுன்பாக நடனஞ்செய்யும் மாதர்களை அதி சீக்கிரமாய் வரச் செய்வீர்கள் மந்திரிமார்களே

மந்திரி வசனம் : அப்படியே அழைப்பிக்கிறோம் சுவாமி

## 24. மந்திரி கட்டியனுக்குச் சொல் விருத்தம்

உழுவை போற் சீறி நிற்கும் ஓங்கல்நேர் புயமும் வாய்ந்த
பழுதறு கட்டியக் காரா பரிவுடன் விரைவிற் சென்று
வழுவிலாப் பேடை யன்னம் போல் மருவிய நடைக ளுற்ற
எழில் நடஞ் செய்யு மாத ரிக்கணம் வரச்செய் வாயே

### வசனம்

ஆரடா அடா புலிபோற் சீறி எதிரில் நிற்கும் கட்டியக்காரா. பழுதில்லாத பேடையன்னம் போல் நடையினையுடைய நடனமாதர்களை அதிசீக்கிரமா யழைத்துக்கொண்டு வாடா கட்டியக்காரா

## 25. கட்டியன் சொல் கவி

சொற்படி சென்றி யானும்
மைப்புயற் குழல்க ளுற்ற
தப்பிலா நடன மாதர்
செப்பமாய் வரச்செய் வேனே

பிரகஸ்பதி – தேவகுரு
உழுவை – புலி
ஓங்கல் – உயர்ந்த

### 26. கட்டியன் நடன மாதருக்குச் சொல் கொச்சகம்

பொன்னகரிற் றங்கியுரைப் பொற்புசது மாதரென
மன்னனெதிர் நாட்டியஞ் செய் மங்கையரே யிப்பொழுது
தன்னமையாய்த் தானழைத்தார் சரிகைதுயி லும்பணியு
மின்னவணிந் தே யினிதாய் வேகமுடன் வருவீரே

வசனம்

கேளுங்கள். அரம்பை, ஊர்வசி, திலோத்தமை, மேனகை போன்று சொல்லும்படி நடனம் செய்யும் மாதர்களே! உங்களை அதிசீக்கிர மாய் நமது மகாராஜன் அழைத்து வரும்படி உத்தரவு செய்தார். வாருங்கள் நடன மாதர்களே.

### 27. நடனமாதர் கட்டியனுக்குச் சொல் விருத்தம்

வேத்திரங் கரத்தி லேந்தி வேந்தரை வெருட்டிப் பார்க்கும்
கீர்த்திசேர் மற்கண் டீரா கிளர்மணி மகுடன் பூண்ட
பார்த்திப னழைத்தா ரென்று பரிவுட னுரைத்த தாலே
தோத்திரஞ் செய் ச பைக்கு துரிதமாய் வருகின் றோமே

வசனம்

கையிலே பிரம்பைப் பிடித்துக் கொண்டு திறைகொடுக்கும் அரசரை உலுக்கிப் பார்க்கும் கட்டியக்காரா! நமது மகாராஜன் அழைத்தாரென்று சொன்னபடியால் இதோ வருகிறோம் கட்டியக்காரா

ககனமதினிலுறு தகைசதுர் கணிகையர்

அகமதினெகிழற மகிபதி கொலுவினில்

கந்தரம் – முகில்; கதுப்பு – கூந்தல்
களபம் – கலவைச் சாந்து
வஸ்திரம் – ஆடை
அருத்தி – விருப்பம்
விஸ்வாசம் – நம்பிக்கை
பிரகாசம் – ஒளி

கதிர்கொள் துயில் தரித்து இடையினிற்

கவினொட்டியாணம் வரித்து

நுதலிற்றிலதந்தீட்டி – நூனமிலா சீமாட்டி

மதன நூல்கள் பாராட்டி – மடப்பிடி நடை காட்டி

மலருற முகழலினி விலைகியதளையொலி

அலை செறிகடலினை புலுமென சபைதனில் –

(நிருத்த...)

சுரிய வினைமுடித்து சடைப்பில்லை

துன்னவதன மேற்றொடுத்து

அரிய மணியலங்களா நிறத்தலங்க

வுரிய வடிவிலங்க வுயர ரசர் கலங்க

வுருவினிலூயர் பெறு

பெரு விரதி வெருவ

இரு செவியி னிலுள

பரு குழையசையவே

(நிருத்த...)

ஒட்டியாணம் – பெண்கள் இடையினில் அணியும் ஒருவகை அணிகலன்

சரிகை துயில் – சரிகை ஆடை
பணி – அணிகலன்
வேத்திரம் – பிரம்பு

## 28. நடனமாதர் வருகிற பொது விருத்தம்

கந்தர மெனக் கறுத்த கதுப்பிணை வாரிப் பின்னி
சுந்தரக் கச்ச ணிந்து சுடர் சடைப் பில்லை வேய்ந்து
சந்தனங் களபம் பூசி சரிகை வஸ் திரம் புனைந்து
தந்திர மாகப் பேசி தகை கணி கையர் வந் தாரே

### வசனம்

அகோதெப்படியென்றால் மேகம் போன்ற கறுத்த கூந்தலை வாரிப்பின்னி அதன்பேரில் சடைப்பில்லை தரித்து மார்பிலே சந்தனம் களப கஸ்தூரி அணிந்து முலைக்கச்சணிந்து சரிகை வஸ்திரம் பிரகாசிக்கப் புனைந்து தந்திரமாக வசனித்துக்கொண்டு நடன மாதர் வருகிற விதங்காண்க

## 29. நடனமாதர் வருகிற தரு

இராகம் : பந்துவராணி  தாளம் : ஆதி தாளம்

நிருத்தஞ் செய்மாதர் வந்தார் மநு
நெறி முழுதினு முண
ரிறையவன வையின் முன்
நிருத்தஞ்செய் மாதர் வந்தார்
அருத்தியுடனே ராஜனழைத்ததைக் கட்டியன் பேச
கருத்தினிலே விஸ்வாச களிப்பைக்கொண்டு பிரகாச

ஞாலத்திற் புகழ் நீடி யுறை வரத

ராஜன் தமிழைப் பாடி

பாவிக் குவைப் பழித்த

பாங்கு மொழி மிகுத்த

ஆலத்தயிலையொத்த அக்கமதனைப் பெற்ற

அருமரிவையரென

திரு வளருலகினின்

மரு விய தவ முனி

வராதி மகி முற

(நிருத்த...)

## 30. நடனமாதர் ராஜனுக்குச் சொல் போற்றி விருத்தம்

வரை கொளம் புயத்தா போற்றி மன்மத ரூபா போற்றி

விரை கொள் புன் னைத்தார் பூண்ட விது குல திலகா போற்றி

திரை கட னிகர்த்த சேனை செம்மலே போற்றி போற்றி

## 31. நடனமாதர் எச்சரிக்கை கூறல்

சீலாமறையோர்கள் மிக செருக்கும் வாகைதரிக்கும்

கோலா மநு நெறி மேவிய குமரா எச்சரிக்கை

மாலாமிருள் போக்கும் முனிவர ராசிகள் கூற

மேலாய புவி புரக்குந் தகை வேந்தே எச்சரிக்கை

கோலா யெ....யம் போற் புகழ்மேவும் நகுடன்றன்

பாலா மிகு லோலா பரிபாலா எச்சரிக்கை

குவை – கூட்டம்
ஆலத்தயிலை – ஆலம்இலை
அக்கம் – கண்

சேலார் விழியார் கண்மயற் செய்யுமெழின் மெய்யா
பாலாமினிதாகப் புகல் பண்பா எச்சரிக்கை
சீரார் பரிமளமேவிய தேனேந்து புன்னாகத்
தாரார் புயத்தோனே யெங்கடலைவா எச்சரிக்கை
நேராரினங்களை வென்றிசெய் நிகரில் புலால் மேவுங்
கூரார யிற்படை சேர்கரக் கோவே எச்சரிக்கை
காரார் முகிற்றிரு மேனியின் கழலைத் தினம் பணியும்
வாரா யெமை யாட்கொள மணி மகுடா எச்சரிக்கை
தாரார் மதிவட்டக் குடை தனி நீழலினிதாய்
ஏராருலகினை யாண்டிடும் இறைவா எச்சரிக்கை

32. இராஜன் நாட்டியப் பெண்களுக்குச் சொல் விருத்தம்

கழையெனப் புயமுஞ் சித்திரக் கச்சணி தனமு நீரார்
மழையெனக் குழலு முற்ற மதர்க்கண் மங் கையரே கேளீர்
தழைவுறு கொலு முன் பாக சட்டமாய்ச் சற்று நேரம்
விழைவுறு பார நாட்டியம் மேன்மையாய்ப் புரிகு வீரே

வசனம்

கேளுங்கள். மூங்கிலைப் போற்றிரண்ட தோளினையுடைய நடன மாதர்களே! நமது நவரத்தினக்கசிதமான கொலுவில் முன்னே யாவ ரும் ஆச்சரியப்படத்தக்க பரத நாட்டியம் ஆடுங்கள் பார்ப்போம் பெண்களே.

நடன மாதர் சொல் வசனம் : அப்படியே செய்கிறோம் ராஜ ப ரமேஸ்வரா

சேல் – வேல்; பரிமளம் – மிருமணம்; தார் – மாலை;
கழல் – பாதம்;
கழை – மூங்கில்; மதர்க்கண் – அழகுக்கண்

## 33. நாட்டியஞ்செய்கிற தரு:

இராகம் : பூரிகல்யாணி  தாளம் : ஆதி தாளம்

பரத நாட்டியம் பாரீர் இயல்
பனிபெறு மிளிர்மதி
நனிகுல வதிபதி
பரத நாட்டியம் பாரீர்
இரத மொழியர் சதுரேந்திழையரு நாண
இரண மருவுகொலு வினிலெவருங்காண

(பரத நாட்டியம்...)

பணைவரை நிகர் தோளா
பங்கள மலர்த் தாளா
இணையிலாக் கிளராரா
திணை புரந்திடுந்தீரா
சிவந்த மரு .....
பதங்களென

(பரத நாட்டியம்...)

விமையோர் புகழ் கெம்பீரா
செவ்வியிலுயர் மாரா
பல்லியங் கொண்டு பாடி – வெகுவிரைவிற்
பரிந்து யாவருங்கூடி – நயமுடனே

நல்லியலுடன்மிக்க – நவிலடவுடன்தக்க

சொல்லிய புகழொக்க துரைகளெல்லா மதிக்க

(பரத நாட்டியம்...)

பணை – பருத்த
திணை – குடி
பல்லியம் – இசைக்கருவி

இத்தனை விதமாய் நடனஞ் செய

திசை பெற்றொருவர் சதமாய் – என்று பரி

சுத்த முனிவர் மெத்த சோர்வு கொண்டுநத்த

எத்திசை யோருஞ் சித்தை மிச்சையுறமிகுத்த

(பரத நாட்டியம்...)

### 34. இராஜன் மந்திரிக்குச் சொல் விருத்தம்

மதிமிகு மமைச்சர் மாரீர வள முறு கொலுமுன் பாக

வித வித நடனஞ் செய்த மெல்லியர் தமக்கிப் போது

சதிருடன் சரிகைச் சேலை நவமணிப் பூணும் வேண

நிதியமு மிகவளித்து நிமிஷத்தி லனுப்பு வீரே

வசனம்

கேளுங்கள். புத்தியில் மிகுந்த மந்திரி மாரே! நமது சிம்மாசனக் கொலுவின் முன்னே விதவிதமாய் பரத நாட்டியஞ் செய்த பெண்க ளுக்குச் சரிகைச் சேலைகளும் இரத்தினாபரணங்களும் மற்றும் அவர்களுக்கு வேண்டிய பொருள்களும் கொடுத்து அனுப்புவீர் மந்திரி மார்களே

மந்திரி வசனம் : அப்படியே அனுப்புவிக்கிறோம் மகாராஜனே

### 35. மந்திரி கட்டியனுக்குச் சொல் விருத்தம்

கட்டியக் காரா கேளாய் களிப்புடன் விரைவிற் சென்று
வட்டமா மதி மு கத்து வண்மை ...... தாக
இ டமா மஞ்சுந் தூசு மினிய நற் பொருளு மீந்து
தட்டிலா வர ம னைக்குச் சதிருட னனுப்பு வாயே

வேண – வேண்டிய
மஞ்சு – ஆபரணம்
தூசு – *சீலை*
சதிர் – பெருமை

வசனம்

ஆரடா அடா கட்டியக்காரா! நீ அதி சீக்கரமாய்ப் போய் நமது மகாராஜன் கொலு முன்னே நடனஞ் செய்த – ஸ்ரீகளுக்கு வேண்டிய பொருளெல்லாம் குறைவில்லாமல் கொடுத்தனுப்பும் பிள்ளாய் கட்டியக்காரா.

### 36. கட்டியன் மந்திரிக்குச் சொல் விருத்தம்

தேவரீர் சொற்ப டிக்குச் சிறப்புடன் கொலுமுன் பாக
ஆவலாய் நடனஞ் செய்த வரிவையர் தமக்கிப் போது
தூவலர் துகிலு மிக்க சொர்ணமு மினிதாய் நல்கி
மேவிய வரம னைக்கு விரைவுட னனுப்பு வேனே

வசனம்

கேளுங்கள் மந்திரிமார்களே! நமது மகாராசன் கொலு முன்பாக நிருத்தஞ் செய்த நாட்டியப் பெண்களுக்கு தேவரீர் உத்தரவுப்படிக்கு வேண்டிய ஆடையாபரணமும் திரவியமுங் கொடுத்து அனுப்பிவைக்கிறேன் மந்திரிமார்களே.

## 37. பொது விருத்தம்

அடவுட னடனஞ் செய்த அரிவையர் சென்ற பின்பு
மடங்கலா சனத்தில் மன்னர் மன்னவன் வைகும் போது
வடதிசைத் தலைவ னொத்த வயலினிற் பயிர் செய் கின்ற
குடிகளு முழுக்கோ லேந்தி கொலுவின் முன் வருகின்றாரே

தூவர் – இறகு; துகில் – சீலை
சொர்ணம் – பொன்

### வசனம்

அகோதெப்படியென்றால், நடனமாதர் அவரவர் மனைக்குச் சென்ற பிறகு மதிமந்திரிமார்கள், தேசதேசாதிபதிகள், படைத் தலைவர்கள் சூழ யயாதி மகாராஜன் கொலுவிலிருக்கும்போது, மிருகக் கூட்டம் தாங்களிட்ட பயிரை அழித்துச் சேதப்படுத்தியதென்று சொல்லிக் கொள்ள, குடிகள் வருகிற விதங் காண்க

## 38. குடிகள் வருகிற தரு

இராகம் : கல்யாணி   தாளம் : ரூபக தாளம்

குடிகள் வந்தாரே பயிரிடும்
குடிகள் வந்தாரே
அடவியல் விலங்கடர்ந்து பயிரை
அழித்ததென்று – யயாதி மன்னர்க்கின்று
அறிக்கை செய்ய அகமகிழ்ந்து
முறுக்கு பாகை முடியிற் புனைந்து

(குடிகள்...)

கழை கதலி கமுகு செற்நெல்லு மிக்காசினியிற்

பயிரேற்றுவோர்மிக

தழையும் பூமன்னர் நிதியிரந்தாலுந் தருவோ மென்

றுண்மை சாற்றுவோர்

மழைமுகில் வண்ணன் மலரடி நாளும் வண்மையாய்த்

தொழுதேற்றுவோர்.

கழை – கரும்பு; கதலி – வாழை; கமுகு – பாக்கு; காசினி – நிலம்

பழுதிலா வட பார்த்தீபனேர் குடி

பங்கயக் கையினிற் றங்குழக் கோலமடித்

தெழுகடற் சூழியற் பொருந்தும்படி

யிடத்துதித்தவ ரினம்புகழ் கொடி

எய்திய விஸ்தாரா – மார்பினி

லியங்கு மணியாரா

மெய்த்தவ கெம்பீரா புனல்

வீறும் வயற்காரா – நிகர்

இலையிவர்க்கென் றெவரும் சொல்லிக் கொள்ள

கொலுவினிற் சென்று குறைகளைவிள்ள

(குடிகள்...)

## 39. குடிகள் இராஜனுக்குப் போற்றி விருத்தம்

தாரணி யோர்கள் போற்றுஞ் சக்ரேச மணியே போற்றி

தாரணி வேற் க ரங் கொட் ட ரிய வாக் கிரி ... போற்றி

சீரணி யிற் ற வஞ் செய் திகழிரு மயர்கள் வாழ்த்த

சீரணி நெறியின் மிக்க சிறந்தவா போற்றி போற்றி

மயர்கள் – கின்னரர்கள்

## 40. இராஜன் வேடருக்குச் சொல் விருத்தம்

பெருமைசேர் நளினச் செய்யிற் பிரியமாய்ப் பயிரைச்செய்தே
அருமைசேர் மரக்க தன் யோ லளவிலா நிதிகண் மேவி
இருமைசே ரரண் மனைக்கு ளின்பமாய் வாழு நீங்கள்
ஒருமைசேர் கொலு முன் வந்த துரைத்திடீ ருரைத்திடீரே

### வசனம்

கேளுங்கள் குடிகளே! காலங்களில் பயிர்களைச் செய்து செல்வத்தி ல் குறைவில்லாமல் வாழ்ந்திருக்கும் நீங்கள் இன்றைய தினம் மகா துயரத்துடன் கூட்டம் கூட்டமாக எனது சபா மண்டபத்திற்கு வந்த காரணமென்ன? அதை எனக்குத் தெரியச் சொல்லுங்கள் மருத நில த்தோராகிய குடிகளே

## 41. குடிகள் இராஜனுக்குச் சொல் விருத்தம்

இகற்பெறு மிறைவர்க் கெல்லா மேறெண வவத ரித்து
செகத்தையோர் குடையி லாளுந் திறலுறு மன்னா போற்றி
அகத்தில் யா முவந்து செய்த அரிய நற் பயிரை யெல்லாம்
மிகுத்த பொல் லா விலங்கு மேவி யிங் கழிக்கு தையா

மரகதன் (மரக்கதன்) – குபேரன்
இகல் – வலிமை; ஏறு – உயர்ந்த

### வசனம்

கேளும். எங்களாண்டவராகிய இராஜ பரமேஸ்வரா! யாங்கள் குடித்தனஞ்செய்கிற வாழ்வெல்லாம் பயிரிடுகிற பாக்கியமே யல்லாது வேறில்லை. ஏதோ அனர்த்த காலம்போலே காட்டிலுள்ள மிருக சாதிகளும், பக்ஷிசாதிகளும் நாங்களிட்ட பயிர்களையெல்லாம் அதஞ் செய்துப் போயிடுது. அதனாலே பயந்து சொல்ல வந்தோம் மகாராஜனே!

## 42. இராஜன் குடிகளுக்குச் சொல் விருத்தம்

கழையெடு கமுகும் வாழை கருது செஞ் சாலி யெல்லாம்
விழைவொடு பயிர் செய் கின்ற மேதகு குடிகாள் கேளீர்
உழை செயும் மவரீட் டத்து உடனருங் கானிற் சென்று
அழிவு செய் விலங்கை யெல்ா மதோகதி யாக்கு வேனே

### வசனம்

கேளுங்கள் குடிகளே! கரும்பு, கமுகு, வாழை, செந்நெல் முதலாகிய பயிர்களைச் சேதப்படுத்தும் படியாகிய து ட மிருகங்களை எல்லாம் அதோகதியாய் அடித்துப் போட வேடர்களுடன் காட்டிற்குச் சென்று வேட்டையாடுகிறேன். நீங்கள் அதற்குப் பயப்படவேண்டாம் குடிகளே!

## 43. இராஜன் சொல் கவி

சீர் பெறு கு மக்கா ளுங்கள்
ஏர் பெறு மனையிற் புக்கி
தார் பெறு பயிர்கள் செய்து
யோர் பெறும் படி வாழ் வீரே

செஞ்சாலி – செந்நெல்; உழைசெயும் – ஏவல்செய்யும்
ஈட்டம் – கூட்டம்

வசனம்

கேளுங்கள் சமயத்திலே யாதொரு குறைவில்லாத குடிகளே! நீங்கள் உங்களிருப்பிடமாகிய மனைக்குச் சென்று மிகுந்த பயிர்களைச் செய்து வாழ்ந்திருங்கள் குடிகளே!

### 44. இராஜன் மந்திரிக்குச் சொல் விருத்தம்

புத்தியிற் புதனைப் போன்ற புகழ்பெறு மந்திரி மாரே
மெத்தவு மிருகக் கூட்டம் விளை பயிர் ரீவர் க ளைந்து
சுத்தமா ய ழிக்கு தென்று தொழுவர்க ளுரைத்தார் நம்மை
நத்திய வேட ரீட்டம் நலமுடன் வரச்செய் வாயே

வசனம்

கேளும். புத்தியில் புதனைப்போன்ற மந்திரி மாரே! நம்முடைய ந ாட்டிலுள்ள பயிரையெல்லாம் மிருகங்கள் சின்னா பின்னமாய்ச் சே தப்படுத்து தென்று குடிகள் முறையிட்டார்கள். ஆதலால் அவர்கள் துயரந்தீர் காட்டில் சென்று விலங்குகள் பறவைகளை வேட்டையாட வேணும். வேட்டைக்காரரை அதி சீக்கிரமாய் வரச் செய்வீர் மந்திரிமாரே

### 45. மந்திரி காட்டியக்காரனுக்குச் சொல் விருத்தம்

வல்லிய மெனவே நிற்கும் வயமிகு கட்டியக் காரா
மல்லிய லினிற் சி றந்த மறவாயில் விரைவிற் சென்று
மெல்லியர் மயல் கொள் ரூப வேந்தனு மழைத்தா ரென்று
சொல்லிய வெயினர் தம்மை சுருக்கினி லழைத்து வாராய்

தொழுவர் – மருதநிலமாக்கள்
நத்திய – விரும்பிய; எயினர் – வேடர்

வசனம்

ஆரடா அடா! வீரப்புலிபோல் சீறி எதிரில் நிற்கும் கட்டியக்காரா! பராக்கிரமத்திலே மிகுந்த வேடர்களிடத்திற்குச் சீக்கிரமாய்ப்போய் நமது ஆண்டவராகிய யயாதி மகாராஜன் வேட்டையாட வேண்டியத்திற்காக அழைத்து வரச் சொன்னரென்று வேடர்களை அதிசீக்கரமாய் அழைத்துக் கொண்டு வாடா கட்டியக்காரா!

46. கட்டியக்காரன் மந்திரிகளுக்குச் சொல் கவி

கரையில் சீ ரினரே நீங்க
ளுரை செயும் படிக்கி யானும்
வரைபுய மறவர் தம்மை
விரைவினில் வரச் செய் வேனே

வசனம்

கேளுங்கள் மந்திரி மார்களே! தேவரீர் உத்தாரப்படிக்கு வேட்டைக்காரர்களை அதி சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வருகிறேன் சுவாமி.

47. கட்டியக்காரன் வேடர்களுக்குச் சொல் விருத்தம்

ஆகுலக் கடல் சூழ் புவிக்குளி யாவருக்கு மு யர்ந்த மன்
வாகை பெற்ற வு தார மெய்ச் சுக வாழ்வு பெற்ற ய யாதியும்
நாகமுற்ற வ னாந்திரத்தினில் நண்ணி வேட்டையு மாடிட
வேகமுற்ற செந் நாய் வலைக் கரு விகளுடன் வர வுரைசெய்தார்

வரைபுயம் – மலைபோன்ற தோள் உத்தாரப்படிக்கு (உத்தரவுப் படிக்கு)
ஆகுலம் – ஆரவாரம்; உதாரம் – மேன்மை

### வசனம்

ஆரடா அடா வேடர்களே! நமது ஆண்டவராகிய யயாதி மகாரா ஜன் வன வேட்டை ஆடப்போக வேண்டுமாம். உங்களை அதிசீக்கர மான இருப்புவலை, வேட்டை நாய், வில், அம்பு முதலிய ஆயுதங்களுடன் அழைத்துக் கொண்டு வரச் சொன்னார். வாருங்களப்பா இலை நிலத் தலைவர்களே.

வேடர் சொல் வசனம் : அப்படியே வருகிறோம் கட்டியக்காரா.

### 48. வேடர் வருகிற பொது விருத்தம்

நாடிவயற் செறி கூழை மிருகத்திர ணாச மியற்றியதென்
றீடில வலிப்புலி போலுயர் கட்டிய னேகி யுரைத்திடவே
நீடிமற் கதை மூரி சிலைக் கொட னேக கணைகளுடன்
வீடில கிளர்த்த வி ராச சபைத் தனில் வேடுவருற்றனரே

### வசனம்

அகோதப்படியென்றால், வயல்களில் பயிர்களை எல்லாம் மிருகக் கூட்டங்கள் சின்னாபின்னமாய் அழித்துப்போடுகிறதென்று கட்டியக் காரன் சொன்ன மாத்திரத்தில் வேட்டைக்காரர்கள், வில்–அம்பு–வாள்–வேல்–ஈட்டி–எறி ஈட்டி–இருப்பு வலை முதலாகிய பல ஆயுதத்துடன் மகாராஜன் கொலுவுக்கு வருகிற விதம் காண்க.

கூழை – பயிரை; மிருகத்திரன் – மிருகக் கூட்டம்

## 49. வேடர்கள் வருகிற தரு:

இராகம் – செந்தோடி  தாளம் – மட்டயம்
வேடர் நாங்களே – ஐயே மலை

வில்லியர் நாங்களே

தோடவிழ் புன்னைத் தொடை புனை மன்னன்

சொற்படி நடக்கும்

மறபரைக் கடக்கும்

(வேடர்...)

பாணியில் வில்லம்புமெடுப்போம். மானைப்

பார்க்கில் வடிகணை தொடுப்போம். யாரும்

நாணவே யாமலகுவெடுப்போம். மெய்யில்

நாறுந்துகிலினையுடுப்போம். பா

வாணர் சொலுங்கவி

காதிற் கேளா மூட

மாந்தர்களை வாட்டும்

தீந்தோமென்றே யாட்டும்

(வேடர்...)

கொக்குடனே கானிற் செல்லுவோம் – சென்று

குரூர விலங்கினை செல்லுவோம் – வெகு

பக்குவமா யெஞ்சொல் சொல்லுவோம் – முள்ளம்

பன்றியையும் பற்றிக் கொல்லுவோம் – செடி

புக்குடும்பு முயல்

மிக்கவுந் கண்டிடிற்

பொருந்திருப்புவலை

திரிந்து காட்டிங் கொலை

(வேடர்...)

வாகுவல்லயமெறியீட்டி தோளில்

வலந்தருந் தூணியை மாட்டி – குடிகள்

ஆகுலத்தையின்றேயோட்டி – விலங்கை

அதஞ்செய் வோமென்று கைநீட்டி – மிக

வேகமாகப் பா

யுழுவை யளியத்தை

வேட்டை யாட வல்ல

காட்டில் வாழு நல்ல

(வேடர்...)

### 50. வேடர்கள் இராஜனுக்குப் போற்றி விருத்தம்

கனைகழற் புனையும் வீரர் கருதலர் மன்னர் மன்னர்

அனுதினம் வணங்கிப் போற்ற அரசு செய் தலைவா போற்றி

வனமுவாப் புடைசூழ் வைப்பில் மாற்றல ருயிரை வாட்டும்

சினவடி வேற்கை கொண்ட செம்மலே போற்றி போற்றி

#### வசனம்

சரணம். சரணம். மகாராஜனே!

## 51. வேடர்கள் இராஜனுக்குச் சொல் விருத்தம்

வெஞ்சரத்தினின் மேவலோரினம் வெருவியோடி யொளிக்கவே
நஞ்சரத்தினை யெய்து வென்றிகொள் நாதனின்பத மே சரண்
செஞ்சரத்தினை புனையுமார்பனே செப்பினாவதை மற்குழு
குஞ்சரத்தினி லாளி புக்கிய கொள்கையாமென வெல்லுவோம்

வாகுவலயம் – (வாகுவல்லயம்) = தோள்அணி; ஆகுலம் – துன்பம்
உழுவை – புலி; உளியம் – கரடி
கருதலர் – பகைவர்; வெஞ்சரம் – போர்; மேவலர் – பகைவர்
நஞ்சரம் – அம்பு; குஞ்சரம் – யானை; யாளி – சிங்கம்

வசனம்

சரணம். சரணம். இராஜ பரமேசுவரா! எங்களை இவ்விடத்தில் அழைப்பித்த சேதி இன்னதென்று தெரியச் சொன்னால் இப்போதே எங்கள் சேனைத்திரளுடனே பெரிய யானைக் கூட்டங்களில் சிங்கம் புகுந்தாப்போல் நிமிஷ நேரத்தில் அதஞ்செ ய்து வெற்றி கொண்டு வருகிறோம் சுவாமி.

## 52. இராஜன் வேடருக்குச் சொல் விருத்தம்

புகலுநம் முலகிற் செய்த பொருந்துபைங் கூழை யெல்லாம்
இகலுறு விலங்கி னங்க ளெய்தியு மழிப்ப தாலே
முகில் கடு ரிஞ்சுஞ் சோலை முதிர்ந்தகா னகத்திற் சென்று
மகிழுடன் வேட்டை யாடி வருகுவோம் வருகு வீரே

வசனம்

ஆரடா வேட்டைக்காரர்களே! நம்முடைய நாட்டில் விலங்கினங்களானது அதிகரித்துப் பயிர்களை அழித்துப் போடுகிறதாம், ஆதலால் இந்தப்பொழுதே கானகத்தில் போய் மிருகங்களைச் சின்னா பின்னமாக வேட்டையாடி வருவோம் வாருங்கள் பாலை நிலத் தலைவர்களே!

## 53. இராஜன் வேட்டைக்குப் போகிற தரு

இராகம் : அடாணா  தாளம் : ஆதி தாளம்

வனவேட்டை யாடுவோம் வாரீர்

வங்கை மிகுந்த மிருகங்கள னைத்தையும்

வனவேட்டை யாடுவோம் வாரீர்

கனவேற் கருவி கொண்டு – மனவேகமாய்ச் செல்லும்

கருது மானைக் களைந்து விருது பெற்று முனைந்து

(வனவேட்டை...)

தனுவைக் கையினிலெடுத்

தழைந்த சாலியை – விழைந்து காலிசெய்

சகுந்தங்களையுமடித்து

மநுவினெறி முறைமைகளுமுகலாமல்

மருத நிலத்தோர்க்குள்ள வருத்தமினிமேல் விள்ள

(வனவேட்டை...)

அடல் வராகத்தை யெய்து

அவை சென்னியிற்பட்டு

புவியில் விழுமட்டு

மஸ்திரமாரியாய்ப் பெய்து

தொடருமடங்கலைக் கடிகளுடன் வென்று

(வனவேட்டை...)

தொகுத்த மதகரியை மிகுத்தகுயவரியைத்

திளையடுத்து

கவ்வு நாய்களைக் கூவி. நவ்வி மீதினிலேவி

கடிய வுசிப்பி விடுத்து

இகலினுடனெண்கு இனத்தைச் சினத்துடன்

.. ஈட்டிகைகொண்டு வாட்டி நாட்டில் நம் கீர்த்தி நாட்டி

(வனவேட்டை...)

### யயாதி சொல் வசனம்

ஆரடா அடா வேலைக்காரர்களே! நாம் காட்டிலே வந்து சேர்ந்தோம். இனிமேல் ஆலஸ்யஞ் செய்யாமல் வெகு ஜாக்கிரதையாக வேட்டையாடுங்கள் வேடர்களே!

தனு – வில்
சாலி – நெல்பயிர்; சகுந்தம் – பறவை
மருதநிலம் – வயலும் வயல் சார்ந்த இடமும்
வராகம் – பன்றி
சென்னி – தலை
அஸ்திரமாரி – அம்புமழை
மதகரி – மதயானை
நவ்வி – மான்குட்டி
எண்கு – கரடி
ஆலஸ்யம் – தாமதம்

### 54. முதல் வேடன் இரண்டாவது வேடனுக்குச் சொல் விருத்தம்

இராகம் : மோகனம்

குகையினிலிருந்து சிங்கக்குழுவு கெர்ச்சிக் குதையே

நகமிகு வேங்கை வெற்பை நாடியே யோடுதையே

பகரும்வான் கோழிவக்கா பதுங்கியே யோடுவதையே

வகையுள முயல்கள் நம்மை நோக்கி

வாடுறு.....ங்கியிதோ

ஓடுறுடையே

நீடுஞ்செடி மறையை நாடியோடுமுயல்

..ராடிலர் நம்மைக் கண்டோட மனதில் – வாடுறு

## 55. 2–வது வேடன் முதல் வேடனுக்குச்சொல் கந்தார்த்தம்

இராகம் : மத்தியமாவதி

மதம் பொழிந்திடகரி யிதோ வோடுது பாராய்

துதிசெய் தோகையுஞ் சேவலுங் கூறு நேராய்

நிதம் பதுங்கிய சம்பவை வெளவுவம் வாராய்

முதிர்ந்த நவ்வியும் நம்புனைப்பாத்திதோ

முளிக் குனுடையே மனதுதத்

தளிக் குறுடையே

துளிக்கு மொழியர் கண்களிக்கும்படி செய்யுழை

அளிக்கு காட்பெருஞ் செடியிலொளிக்கு முன்பிடியிதோமுனிக்கது

கரி – யானை
சம்பு – நரி
முதிர்ந்த நவ்வி – முதிர்ந்தபெண்மான்

### 56. முதல்வேடன் 2–வது வேடனுக்குச் சொல் விருத்தம்

பல்லவ மிகு தழைத்த கானத்திலேனங்கள்
சொல்லு தற்கரி தாகவே யுறைவதாலுங்கள்
வில்லினிற் பெரு நாணியை விரைவினிற் பிதிந்து
மல்லினிற் பெரும் பகழி கண் மழையெனச் சொரிந்து
வலையைக் கட்டி வதையடா மிருகமெல்லாந்
தலைக் காட்டாமற் சிதையடா
கொலையென் றெண்ணாமலே கொடுமானின முற்றிலும்
தலை நிலம் விழ வெய்து தலை வனஞ் சுற்றிலும்

(வலையை...)

### 57. 2–வது வேடன் முதல் வேடனுக்குச் சொல் கந்தார்த்தம்

சீர் பொருந்திய தேசத்தினுறு குடியிழை
தார் பொருந்திய தழைந்த பைங்கூழினை யழித்த
வார் பொருந்திய வுரோம மாருளியத்தினாவி
ஏர் பொருந்திய நமனகாமேவிடக் கூவி
இரண்டாம் பெடுத்து விட்டார் நாணியைப் பூட்டி
திரண்டம் பெடுத்து விட்டார்
மிரண்டு விலங்கு பெரு வெற்பி லொளிக்கு முன்னஞ்
சுருண்டு விழவே பாரிற் சுகிர்தமுடனே யின்னம்

(இரண்டாம் பெடுத்து...)

பல்லவம் – கிளை; கொப்பு
ஏனம் – பன்றி
கூழ் – பயிர்
உளியம் – கரடி

### கட்டியன் வசனம்

இவ்விதமாக வேடர் கூட்டங்கள் வலைகளைக் கட்டியும் அம்பினாலெய்துப் மிருகங்களை எல்லாம் அதோகதியாய் அடித்துத் துரத்திவிட்டு வேட்டைக்காரர்கள் யயாதி மஹாராஜனுக்குச் சொல்லுகிற விதம் காண்க.

### 58. வேடர் சொல் திரு

இராகம் : சங்கராபரணம் தாளம் : ஆதி தாளம்

ஆடினோமையே – வனவேட்டை
ஆடினோமையே
ஈடிலாத.....மேவிய பின்னே
எங்கும் புகழ் பெறுந்துங்க விற்பன்னனே

(ஆடினோமையே...)

கனத்த விருப்பு வலைதலையெங்குங் காதலுடன் கட்டிமான்
இனத்தை துரத்தி சினத்தினுடனே இகல்வாளால் வெட்டி
தனத்தகு மரகதம் போற்பொங்கிய
சமயத்தினிலுயர்ந்தின்புற்றே தங்கிய
பனிச் செய்யினிற் பைங்கூழை யிழைத்திட
பாசவுழவர்க்கு நேசந்தழைத்திட

(ஆடினோமையே...)

மாயமுடனொரிலக்கு கொண்டு பாயும் வல்லயத்தை வாட்டி
பாயமுடையோ ரென்றோதிடவே எங்கள் பண்புவீரங்காட்டி
தீயகொடுங் கேழலாவியைக் குடித்து
செகத்திற் கோர் துயரிலை யென்றடித்து
மேயு முயல் நரியுடும்பையுங்கண்டு மிக்க மகிழுடன் சிக்கத்தினிற் கொண்டு

(ஆடினோமையே...)

மத்தகவத்தியை சீயத்திரளினை

பண்மையாய் சிதைத்து வளம்

மெத்த பயிரையழித்த வுளியத்தை

விரைவினில் வதைத்து

அத்திரசத்திர மிகுத்திடவெடுத்து

ஆண்மையுடன் மழைமாரியோற்றொடுத்து

சித்திரவத்தத்தினிலே வளைந்து

சிங்கமுதன் மிருகங்களைக் களைந்து

(ஆடினோமையே...)

வல்லயம் – எறியீட்டி; மத்தகம் – யானை; சீயம் – சிங்கம்
கேழல் – பன்றி
உளியம் – கரடி

### 59. வேடர்கள் யயாதிக்குச் சொல் கவி

தோட்டவிழ் மன்றற் றோடலை சேர்மார்பா

காட்டினில் வாழுங் கடு விலங் கினத்தை

வேட்டைக ளாடி வெற்றியும் பெற்றோம்

மேட்டெழில் நகர மேவுவோம் வாரீர்

#### வசனம்

கேளும். வெற்றிமாலையணிந்த மகாராஜனே! இந்த வனத்திலிருந்த மிருகக் கூட்டங்களை எல்லாம் கால்வேறு, தலைவேறு, கண்டம் வேறு, முண்டம் வேறு வேட்டை ஆடினோம். இனிமேல் மிருக பயம் இல்லை. நமது அஸ்தினாபுரம் போகலாம் இராஜ பரமேசுவரா!

## 60. தேவயானை வருகிற பொது விருத்தம்

தாரணியோர் புகழ் மேவும் யயாதிவேந்தன் தந்திரமார்

மந்திரிவே டுவரோடேகி

சீரணியின் மான் வேட்டை தனிலயர்ந்து செழும்பொதும்

பரிடை சார்ந்து வைகும் போது

நீரணியும் விமலனருண் மந்திரத்தை நிலைமையுடனே

யுணர்ந்த சுக்கிர னீன்ற

வாரணியு முலைத் தேவயானை சேடி மாதருட னவ்வனத்தில்
வருகின் றாளே

பொதும்பர் – இளமரச்சோலை
சேடி – தோழி

### வசனம்

அகோதெப்படி என்றால் இந்தப் பிரகாரமாக யயாதி மகாராஜன் வேடர்களுடனே ஆரணியத்திற் சென்று வேட்டையாடி மிகுந்த ஆயாசத்தோடு பூஞ்சோலையினிழலில் இறங்கி இளைப்பாறிக் கொண்டிருக்கும் போது சுக்கிரபகவான் குமாரத்தியாகிய தேவயானை, சன்மிட்ட முதலாகிய ஆயிரத்தொரு தாதிகள் சூழ பூங்காவனத்திற்கு வேடிக்கையாக வருகிற விதம் காண்க

## 61. தேவயானை வருகிற தரு

இராகம் : தோடி   தாளம் : ஆதிதாளம்

தேவயானையும் வந்தாள்
செய்யவளெனக் கதித்த
தையலெனவே யுதித்த
தேவயானையும் வந்தாள்
பாவை சன்மிட்டை முதற்
பாங்கியாயிரவரும்
பந்தமாகவே வந்தடி தாழ்ந்திட
நந்தவனத்தினில் விந்தையாய் சேர்ந்திட

(தேவயானையும்...)

கருதுங் கண்ணாடியொத்த கன்னம் வளருமிளங்
கென்றுரை மிடறுந் தென்னம் – குரும்மையொத்து
பருதுணை தனமும் பேடையன்னம் போவே நாளும்
பயிலுகின்ற நடையுஞ் சின்னம் சிறுத்த நுதல்
பொருதுஞ் சிலையை யொக்கும் – புகன்றிடுமெட்டுத்திக்கும்
விருது நீருயர் சேர்க்கும் விழைவு தனையளிக்கும்
வெஞ்சரமொத்திடு நஞ்சு விழிக்கயில்
கஞ்ச மலர்க்களு மஞ்சு தனக்குயில்

(தேவயானையும்...)

மஞ்சினைப் பழித்த கருங்கேசம் தனிற்றரித்த
மல்லிகை முல்லை செண்பக வாசம் எங்குமெறிக்க
செஞ்சுறு புனித – வாரீசம் மென்மலர்களைச்
செகுத்த செய்யகர வுல்லாசம் மிகச் சிறந்த

மிஞ்சிடாதபிடி மேவிய யிடை துடி

நெஞ்ச மகிழுங்கடி நிலை பெறு நவ்வியடி

நேயமிகும் பசுவே யென மன்புய

தூயமிகுந்து வா – வாயெனு நன்னய

(தேவயானையும்...)

தாளிற்றண்டை கலகலென்ன – மெய்யினிற்றுயில்

சரிகை பளபளென்னு மன்ன மருங்கினில்

நீளொளி ரத்னாபரணமின்ன சிருட்டி செய்வேதன்

நேரிழை யிவளாரோ வென்றுன்ன வளமிகுந்த

கோளியிலை தனை குலவிய வயிற்றினை

வேளும் புகழும் புனை மேயிருக்குஞ்சினை

வீறு வராலென மீறிய கான்மிக

கூறரி முகமென தேறிய நன்னக

(தேவயானையும்...)

62. தேவயானை சன்மி டை முதலாகிய தாதிகளுக்குச் சொல்

கொச்சகம்

நோக்குமுறு மாதர் புகழ் நுண்ணிடையும் வம்பீறுகுஞ்

சேக்கை பெறு மங்கையெனுஞ் சேடியர்க ளேநாமும்

ஆக்கமுறு பூஞ்சுரத்தி லன்புடன் பொற் கந்துகமும்

ஊக்கமுட னே யெடுத்தே யொண்மையுட னாடுவமே

பூஞ்சரம் – பூங்காவனம்
கந்துகம் – பந்து

வசனம்

கேளுங்கள். சிறுத்த இடையும் கச்சணித்த தனபாரத்தையுமுடைய தாதிகளே! நாம் இந்த அழகிய பூங்காவனத்திலே வேடிக்கையாகச் சற்று நேரம் பொற் பந்து எடுத்து விளையாடலாம் வாருங்கள் என் அருமைச் சகிமர்களே!

தோழி வசனம்: அப்படியே ஆடுவோம் எங்கள் நாயகியாகிய தேவயானையே!

## 63. பந்தாடுகிற தரு

இராகம் : பந்துவராளி தாளம் : அட தாளம்

ஆடுவோம் வாரீர் கந்துகமெடுத்

தாடுவோம் வாரீர்

ஆடுந்தில்லை யம்பல வாணனளித்த வொற்றைக்

கோடு கணபதியைக் கொண்டு மனசில் சற்றே

(ஆடுவோம் வாரீர்...)

உம ... விவைகடிந்து வமையில்லா தூரும்

வம்புசெறி வனத்தில் வண்மையா யனைவோரும்

(ஆடுவோம் வாரீர்...)

இளந்தென்றலு நமக் கிளைப்பாற்ற வருகுது

வளமிகும் பந்தாட மனக்காதல் பெருகுது

(ஆடுவோம் வாரீர்...)

சூதுபொய் களவென்று சொல்லப் படுந்திருகில்

லாத பாங்கியர்களே மலயத்தரு வருகில்

(ஆடுவோம் வாரீர்...)

சாதகமாகவே தருக்குடனே எடுத்து

தீதில்லாமலெறியச் சிக்கெனவே பிடித்து

(ஆடுவோம் வாரீர்...)

சாற்றுமொழி கட்டுமோர்

தடையுரைத்திடாப் பாங்கி

ஏற்ற கூட்டமே யீங்

கிச்சையுடனே ஓங்கி

(ஆடுவோம் வாரீர்...)

64. தேவயானை யயாதியைப் பார்த்துச் சொல் பத்தியம்

ஆரணப்போதனோ வயிராணி நாதனோ வழகினின்

மிகுந்தயிவ்வரிய புருஷன்

நீரணியு நமனோ நிகரிற் கடம்பனோ நேயமுடனெதிர்

தோன்று நிமல புருஷன்

ஆரணச் சோமனோ பொருவிலாக் காமனோ பொற்

புலவ வெதிர் தோன்று புண்ணிய புருஷன்

சீரணி ... நிகழ் குவலை தாரனோ சித்திரம் போல்

தோன்று திவ்விய புருஷன்

திருகு – குற்றம்

ஆரணப்போதன் – திருமால்; அயிராணி நாதன் – இந்திராணியின் கணவனாகிய இந்திரன்

நீரணியுநமன் – சிவபெருமான்; கடம்பன் – முருகன்

சோமன் – சந்திரன்; காமன் – மன்மதன்

ஏர் கொண்ட கதிர்கண்ணி யேந்தல் மிக்க

பேர் கொண்ட யடைசூழ பெருமையுடனே

வார் கொண்ட சோலையில் வைகுமாரத்

தார் கொண்ட மரர்ப சற்புருஷனாரோ

*65. தேவயானை யயாதியைப் பார்த்து தோழிக்குச் சொல் கொச்சகம்*

மாகனோ மாதிரத்தில் வயங்கிய கனோச்சியின்

போகனோ வச்சுதனோ .... பார்வதியின்

பாகனோ செவ்வேளோ பரமேட்டியோ ரதியின்

மோகனோ யாவனோ யிம்முதிர் வனத்தில் வந்தவரே

வசனம்

கேளுங்கள். தோழிமார்களே! இதோ பூஞ்சோலையின் நிழலில் இருக்கின்ற புருஷன் தேவனோ? ஆகாயத்தில் சஞ்சரிக்கின்ற இயக்கனோ? இந்திராணியின் போகத்தையுடைய தேவேந்திரனோ மகா விட்ணுவோ? அழகோர் வடிவமாகிய பார்வதியின் பாகராகிய பரமசிவனோ? சுப்பிரமணியனோ? உலகமெல்லாம் சிருட்டி செய்யா நின்ற பிரம தேவனோ? ரதியின் மோகனாகிய மன்மதனோ? இவருடைய அதிரூப லாவண்ணியத்தையும், ரத்தினகசிதமான முடியில் பிரகாசத்தையும் என்னென்று சொல்லுவேன் தோழிமார்கள்!

மாகன் – இயக்கன்; கனோச்சியின் போகன் – தேவேந்திரன்
அச்சுதன் – மகாவிட்ணு; பார்வதியின் பாகன் – பரமசிவன்;
செவ்வேள் – சுப்பிரமணியன்; பரமேட்டி – பிரம்மதேவன்;
ரதியின் மோகன் – மன்மதன்

## 66. தேவயானை யயாதியைப் பார்த்துச் சொல் தரு

இராகம் : பந்துவராளி  தாளம் : ஆதி தாளம்

திகழ்பெற்ற நவரத் ... சித்திர முடியுற்ற
செக்கரத்த ரிவராரோ – காண் நான் செய்த
நிகரற்ற தவப் பேறோ
இகலுற்ற படைவீரர் – மகிழுற்றுபுடை சுற்ற
இணையிற் பல தருவும் – பணை யொத்திவருமிந்த
திணைந்த தடவியினில் கணியுட்ட பன்னனெ

(திகழ்பெற்ற...)

குவலயத்தினின மிதனு விரபரவிய விருகுழை
கடங்கிய செவியும் சிலைக்
கோதிலாத நுதலுமீதியல் சேர் மதியங் குலவியமுகச் சவியும்
இவர் வினையளிக்கு நவமதனுமொளிக்கு
மிங்கிதமொழி நயமு மெவருமதி
செய்முகனு கமல நயனமுடனே முதிர் திகழா
துன்னுஞ்சிலம்பெனவே மன்னுமிருபுயமுந்துங்க
விசாலவுரமும் எழில்ல
துத்த முங்கன்னல் முறித்தருந்துயர் வேழத்
துதிக்கையோல் நீண்ட கரமும்
பன்னுஞ் சரிகைத் துகில் மன்னும் படியுடுத்த
பாங்கும் பூவையரின் மேங்குங் களிற்றினைப் போல
ஒங்கு நடையுடனே யீங்குமகிழ்ந்து வந்த

(திகழ்பெற்ற...)

முகச்சுவி – முகப்பொலிவு

பொற்பு நாசியும் வளை விற்புருவமு மின்னற்

புகழுமொளிசேர் தற்தமும் இயல்

பொருந்திய சானுமிகு – திருந்திய தொடைப்பற்றும்

புனித பாதார விந்தமும்

சற்புருஷர்மகிழும் – சொற் பொறையுந் தவள

தந்தியனென் பல – ருந்துதி புரிந்திடும்

அந்தமுடனேதட – முந்தகை சிறந்திடும்

(திகழ்பெற்ற...)

## 67. பொது விருத்தம்

திருநிகர் தேவ யானைச் செல்வி பந் தாடிப் பின்பு

குருசிலைக் கண்டு மையற் கொண்டவண் ணிருக்கும் போது

தருகர யயாதி யிந்த தையன்மார் களைக் கண் ணுற்ற

பெருகு தன் சேனைக் கெலாம் பெட்புட னுரை செய்வானே

பொற்பு – பொலிவு
சானு – முழந்தாள்
பெட்பு – பெருமை
குருசில் (குரிசில்) – அரசன்

### வசனம்

அகோதெப்படி என்றால் பந்தாடிக் கொண்டிருந்த தேவயானை சமீபத்திலே சேனா சமுத்திரஞ்சூழ வீற்றிருக்கின்ற யயாதி மகாராஜனைக் கண்டு ஆசை கொண்டு இருக்க, யயாதி மகாராஜன் தேவயானை முதலானவர்களைக்கண்டு தனது சேனைக்குச் சொல்லுகிற விதம் காண்க.

### 68. யயாதி சேனைகளுக்குச் சொல் விருத்தம்

வீரிய முடனே கான விலங்கை வெல் லெயின ரேநற்
சீரிய வமைச்ச மாரே சேரினத் தோரே கேளீர்
தாரியல் குழலார் தம்மை சவியுட னின்னா ரென்று
வாரிய லுடன றிந்து வருகு வே னிருந்தி டீரே

வசனம்

கேளுங்கள். மிருகக் கூட்டங்களை வென்ற வேடக் கூட்டங்களே! வரு காரியங்களைச் சொல்லு மந்திரமார்களே! பந்து செனங்களே! அதோ பந்தாடியிருக்கிற ஸ்ரீ களிடத்திற்குச் சென்று அவர்கள் இன்னாரென்று தெரிந்துகொண்டு வருகிறேன். நீங்கள் இருங்கள். எனது அன்புள்ளவர்களே.

### 69. யயாதி சொல் கொச்சகம்

செற்திருவோ பணி மகளோ திசை முகத்தோ நாவினில் வாழ்
அந்தமிகு சரஸ்வதியோ அயிராணி யோ ரதியோ
கற்திருவ மங்கையோ கண்ணுதலின் காதலியோ
சிந்தையினி ... ரென்றச் சேயிழையறி குவேனே

செந்திரு – மகாலட்சுமி; பணி மகள் (பணி – நாகம்) = நாக கன்னிகை; அயிராணி – இந்திராணி; கண்ணுதலின் காதலி (நெற்றிக்கண்ணனாகிய சிவபெருமானின் காதலி) – பார்வதி

வசனம்

ஆ!! ஆ!! ஆ!! இப்பேர்க்கொத்த அழகுடையவள் ஆருடைய புத்திரியோ? செந்திருவாகிய மகாலக்ஷிமியோ? பணிமகளாகிய நாக கன்னியோ? திசை முகத்தோனாகிய பிரம தேவனுடைய நாவினில் வாழும் அழகையுடைய

சரஸ்வதியோ? அயிராணி என்று சொல்லும் படியாகிய தேவ இந்திராணியோ? அழகிற் சிறந்த ரதியோ? அந்தரத்தில் சஞ்சரிக்கிற கந்தருவ ஸ்த்ரீயோ? கண்ணுதலின் காதலியாகிய பார்வதா தேவியோ? என் மனதில் இன்னாரென்று இந்த மாதர்களை அறிகுவேனே. ஆ! ஆ! இவர்களுடைய பூரணச் சந்திர விம்பத்தின் அழகை என்னவென்று சொல்லுவேன் ஆ!! ஆ!!

### 70. யயாதி சொல் சீச பத்தியம்

பூரணச் சந்திரனை நேரென்னமாமுகப் பொன்னனை
யாயிருந்த பூவையாரோ
காரினி மின்னிற சீரிய பாரிசாதக் கொடிகண்டு நாணிடை
யுளக்கன்னியாரோ
வேரியஞ்சொரியுமலர் தாரணிக்குங் கூந்தல் மேவிய
படிவமுள மெல்லியாரோ
பாரினிலியம்பு மெழின் மாரன் மௌலியை வென்ற
பங்கயசுவர்க்கமுள பாவையாரோ
பஞ்சவர்ணக்கிளிபோற் பயிலுகின்ற
செஞ்சொலுள வனிதைபாற் சென்று மகிழ்வாய்க்
கஞ்சமாதினையனைய கன்னிநீ யாரென்
றஞ்சிடாதிவரை யானறிகுவேனே

## 71. யயாதி சொல் கொச்சகம்

ஓதிமத்தினைப்பழித்த வுத்தமியே ரத்தினமே
தாதிகன னேகருந்தன் தாளில் வண ங்கிப்போற்ற
சோதி மிகு பூங்காவிற் றுலங்கு மணிப் பூணணிந்து
மேதினியோர் மையலுற்ற மேவினவள் நீ யாரோ

வசனம்

கேளுங்கள், அன்னங்கள் நாணும் நடையுடைய பெண்ணமுதமே! திரளான தாதிக் கூட்டங்கள் சூழ் ஆபரணாங்கிருதத்துடனே பூலோகத்தா ரெல்லாரும் கண்டு அதிசயிக்க இந்தப் பூங்காவனத்தில் வந்திருக்கின்ற நீ யார்? உன் பேரென்ன? சொல்வாய் மயில் போன்ற சாயலையுடைய கன்னிகையே.

## 72. யயாதி தேவயானையைப் பார்த்துச் சொல் தரு

இராகம் : சாமராகம் தாளம் : அட தாளம்

மயிலே மடமாங்குயிலே
எழில்சேர்
இயலோதிமநேர்
ஓயிலார் நடையாய் (மயிலே...)

சூல் கொண்டலை நேர்பால் கொள்ளக
வேல் கெண்டைவாள் போல் கண்களும் வாய
(மயிலே...)
திருநே ரெழிலாயிர மாதர்கள் நின்
னருகே யுறவே மருபூம்பொழில் நண்
(மயிலே...)
நீயார் நினையீய் தாய் தந்தையுமார்
காயமா மதிபோல (மயிலே...)

வாயமா முதசும் புறழ் முலையாய்

விசும்பு மினிடையாய்ப்

புஜம் பூரித்திடவே நிசமெனக் குரையாய்

(மயிலே...)

ஒதிமம் – அன்னம்
விசும்பு – ஆகாயம்

### 73. தேவயானை யயாதிக்குச் சொல் கொச்சகம்

ஆரென்று கேட்குமெனை அவனிபுரக் குந்தலைவா

பாரென்று நனி திகழும் பார்க்கவன்ற வத்தில்வருங்

காரென்று வண் குழாள் காவனத்தில் விந்தையதாய்

மேரென்று முலைப்பாங்கி மெல்லியுடன் வந்தனனே

வசனம்

கேளும். என்னை யாரென்று கேட்ட இராஜ கண்டீரவா! இந்த பூ ரேகமெல்லாம் புகழும்படியான சுக்கிரபகவான் பெற்ற பெண் என்பேர் தேவயானை என்று சொல்லுவார்கள். நான் இந்தப் பூங்காவனத்தில் வேடிக்கையாக எனது தாதிக் கூட்டங்களுடன் சற்று நேரம் பந்து விளையாடுவோமென்று வந்தேன் மகாராஜனே!

### 74. யயாதி தேவயானைக்குச் சொல் விருத்தம்

வீரிட்டுப் போர் செய் கின்ற வேழ மத் தகத்தை யொத்த

வாரிட்டு வளர் த னத்தாய் மருங்கிற் செல் வியைப் போல்
வைக்கும்

ஈரெட்டு திசைக ளெல்லா மியலுட ......

காரெட்டு மதி மு கத்திவ் வேந்திழை யாரோ சொல்வாய்

அவனி – உலகம்
பார்க்கவன் – சுக்கிரன்

### வசனம்

கேளும். ஆனை மத்தகத்தைப் போன்ற தனபாரத்தையுடைய தேவயானையே! உன் பக்கத்தில் உலகமெல்லாம் விலை கொள்ளும் அழகையுடைய மகா லக்ஷிமியைப் போலிருக்கிற பதினாறு கலைகளும் நிறைந்த பூரணச் சந்திரனைப்போன்ற முகார விந்தத்தையுடைய பெண் யார்? அதைத் தெரியச் சொல்வாய் பெண்ணே!

### 75. தேவயானை யயாதிக்குச் சொல் விருத்தம்

சகஸ்திர விதழ்கள் சூழ தாமரை நடுவில் மேவும்
செகஸ்திர வாழ்வ ளிக்கும் செல்வியைப் போல் சிறந்த
சகஸ்திரப் பாங்கி சூழென் றன்னரு கினிலி ருக்கும்
புகற்றிர விடபன் பெற்ற பூவையா ளுணர்கு வீரே

### வசனம்

கேளும். மகாராஜனே! ஆயிரம் இதழ்களையுடைய தாமரை மலரினிலிருந்து உலகங்களில் ஸ்திரமான செல்வங்களைக் கொடுக்கும் மகாலட்சுமி போலே மிகுந்த ஆயிரந்தாதிமார்கள் சூழ என்னருகினிலிருக்கின்றவள் இடபன்மராஜன் பெற்ற பெண் சன்மி டை என்று சொல்லுவார்கள் இராஜ பரமேசுவரா!

சகஸ்திரம் (சகஸ்ரம்) – ஆயிரம்
செகஸ்திரம் (செகம் – ஜெகம் = உலகம்; ஸ்திரம் – நிலையான) = உலகில் நிலையான வாழ்வளிக்கும்)
இடபன்மன் – அசுரர்களின் வேந்தன் (சன்மிட்டையின் தந்தை)

### 76. யயாதி தேவயானைக்குச் சொல் விருத்தம்

விடத்தினைப் பழித்த நாட்ட மெல்லியர்க் கரசே கேளாய்
குடத்தினைப் பழித்த கொங்கை கோதையா யிரவரோடு
படத்தினைப் பழித்த வல்குல் பைந்தொடி யையு முனக்கு
திடத்தொழில் புரியத் தந்த சேதியை யுரை செய்வாயே

வசனம்

கேளாய். ஆலம்போல் கறுத்த கண்ணினை யுடைய தேவயானையே ஆயிரந் தாதிகளுடனே இந்த சன்மி டையை இவள் பிதாவாகிய இடபன்ம ராஜன் உன்னிடம் பணிவிடை செய்யும்படி உனக்குக் கொடுத்த காரணத்தை எனக்கு விபரமாய்த் தெரியச் சொல்லுவாய் பெண்ணே!

விடம் – நஞ்சு
படம் – பாம்பின் படம்

### 77. தேவயானை யயாதிக்குச் சொல் கவி

வேரிய மொழு கும் விரைமர்த்தா ...
போரினில் வென்றி செய் ...
பாரினில் சிறந்த படிவத்தில் மாரா
வையகத் தினிற் சொல் வரைகளு நாணும்
செய்ய மா முலை யித் தெரிவை சன்மிட்டை
பையவே யெனக்குப் பாங்கியாய்ப் பணிசெய
தையலார் வந்ததைச் சாற்றுவன் கேளும்
மன்னுமோர் நிலமாள மகிழிட பன்பன்

றன்றவ மதனாற் றரணியி லுதித்தாள்

சன்மிட்டை என்று சாற்றினர் பெயரும்

இன்பொடு புவி யிலிருந்து போல் வளர்ந்து

பேதை பெதுமபைப் பிரியமாய்ச் சென்று

காதலார் மங்கை கடி பருவமுமாய்

தாதிக ளாயிரந் தன்னுடன் சூழ

நீதியிலிருந்கு நெடும் பொழு தினிலே

ஒர் தின மிவரு ண்மையதாக

நீரில் கிரீடிக்க நெஞ்சினில் நினைந்து

வார் குழ லாயிர மங்கை சே டியிருஞ்

சீருட னிவட்கு திருவடி தொழுவே

வேரியம் – தேன்
பைய – மெல்ல; பாங்கி – தோழி; தையலர் – மகளிர்
சாற்றுதல் – உரைத்தல்; தரணி – பூமி
கிரீடை – விளையாட்டு

சிந்தையு மகிழ்ந்து சீக்கிரஞ் செல்லும்

விந்தையான் பார்த்து மேவவே யெண்ணி

சுந்தரி களினிடம் துரிதமாய்ச் சென்றிக்

கந்தரு வரவர் குழற்கா ரிகையோடு

புனற்றடா கத்தைப் புக்கியே துகிலகன்

தனைய விழ்த் தந்த தடக்கரை மேல்வைத் (து)

அனமிறங் குவபோலப் பினிலிறங்கி

இனமுடன் கிரீடை யியாவருஞ் செய்ய

அவரவ ரொருயிட மவிழ்த்து வைத்திட்ட

புவி விலை கொள்ளும் பொன்மயத் துகிலைப்

பவனனு மடிக்க பட்டாடை யொன்றாய்க்
குவிய யா வரும் கொப்பெனச் சென்று
...ரவர் வகையுடன் புனைய

அருகினி விருக்கு மரிவை சன் மிட்டை
கரமதி லென்று கில் கடிதில் நேரிட
துரிதமா யிடையிற் சொகு சுடன் புனைய
ஆசையில் லாம லயர்வொடி யானும்

வாடியே யழ விம் மங்கைசன் மிட்டை
நாடியே யென்னை நான் புனைந் திருந்த
ஈடிலா தோங்கு மிலகு பொற் றுகிலை
புனையெடுத் தென்று புகலவே கொள்ளும்
மனமிக வருந்தியான் மர்மமாய் நிற்க
வனிதைசன் மி டை யென் மா முக நோக்கி
வுனதற்ப வாடையை யுவந்து தரித்தேன்
காசினி முழுதுங் கவர் விலை எந்தன்
தூசினை நீயும் சொகுசுடன் புனைய
கூசி யழுவது கோதையே தகுமோ
ஆசை சேர் சுக்கிர னருஞ்சுதை யேயென்
றோத வியானு முவந்து சீஷர்கள்
மீதினிற் றரித்த மிகும் விலை யுயர்ந்த
தீதி லா துகில் செருக்குடன் குருவும்
நீதியாயப் புனைவனோ நிகழத் தென்றெண

காசினி – பூமி
தூசி – ஆடை; சொகுசு – நேர்த்தி
சுதை – மகள்

உரைத்ததைக் கேட்டிவ ளுருத்திரங் கொண்டெனைக்
கருத்துயர் பாங்கியால் கிணற்றினிற் றள்ளி
சிரித்திந்த சேயிழைச் சேடிய ருடனே
பெருத்த தன் மனைப் பிரியமாய்ச் சென்றான்
சென்றபின் கேணியிற் றேம்பியே வருந்த
வென்றிவே லோய் நீ வேட்டையுமாடி
அன்று வந் திடும் போ தழுமொலி கேட்டு
என்றனை யெடுத்து விட் டேகின பின்பு
கூவல் கரையினிற் கோவென் றிருக்க
மாவல னொருவ னவ் வழியினிற் சென்றான்
ஆவலி னோடு நா னவன்றனை யழைத்துப்
பாவலர் புகழும் யீர்க்கவன் றனக்கு
நடந்ததைச் சொல்ல நவின்ற – கேட்டு
தடந்திகழ்ப் புகருடன் சாற்றியே சென்றான்

உருத்திரம் – பெருஞ்சினம்
கூவல் – கிணறு
மாவலன் – குதிரைப் பாகன்

தொடர்தீ வினையைத் தொலைக்கு மென் தந்தை
திடந்திகழ் என்பால் சீக்கிரம் வந்து
என்னிரு கட்புன லினிமையாய்த் துடைத்து
தன்னிலை யறியாத் தாமத குணத்தால்
உன்னை யித் துன்ப மொண்மையாய் செய்தார்
இன்னம் பொறுப்பா யென்றுரைத் துப்பின்

நகரினுக் கேக மங்கையே வாவென்
றிகலுட னுரைக்க இனியந்த மூதூர்
புக மன திலை யென புகன்றன்ன வருந்தி
செகம் புக ழெந்தை யென் றிருமுக நோக்கி
விழை தவப் பெண்ணே வேள்வியா யிரங்கள்
வழுவு த லின்றி அகமுடன் செய்வரில்
செழியுநற் பொறையூஞ் செப்பிடு மிதார்த்த
மொழியுடை யோர்கள் முதல்வர்க ளென்று

இதார்த்தம் (எதார்த்தம்) – உண்மை

சகல வே தாகம சாஸ்திரங் களிலும்
புகல் கிறத்தனாற் பொன்னனை மாதே
முகிணகை யார்கள் மூர்க்க புத்தியினால்
மகிழுடன் செய்ததை மனதிலுன் னாதே
என்று நீ திகளை யெடுத்துரைத் திட்டார்
அன்று நா னதையும் அடவுடன் தடுத்தேன்
வென்றி சே ரெந்தை வெள்ளி என் பவரும்
துன ... வனத்திற் சொகுசுடன் செல்வோம்
வருகு வா யென்று வழுத்தவே யானும்
திருகில் என் தந்தையுஞ் செழிப்பூங் காவில்
இருந்திடும் பொழுதினிச் சன் மிட்டையை
வருந்தியே பெற்ற மன...
அறிந்துள நொந்திவ் வரிவையை வைது
செறிந்த அவ் வனத்தில் சீக்கிரம் வந்து

முகிழ் நகை – அரும்பு நகை
மூர்க்க புத்தி – மூட புத்தி; வெள்ளி – சுக்கிரன் (அசுரகுரு)

சிறந்தயென் தந்தை திருவடி வணங்கி
அறிவிலா யென்பெண் அன்பிரியச் செய்ததைக்
குற்ற மென் றுன்னி கொப்பென...
நற்றவர்க் குயர்வோ நாதனின் னருளால்
வெற்றியாஞ் சுரரை வென்று சம்பத்தைப்
பற்றி யிருத்தலுன் பார்வையல் லாது
வேறெனக் காதரம் விதியிலை யென்று
பே ... கழலினை பேணின னெந்தையை
தேறுநற் கலைகள்தெரி பிதா வெனக்கு
தேறுதல் சொல்லில் செம்மலுன் னகரம்
வரத்தடை யிலை யென மதிபனும் கேட்டு
சிரத்தினால் வணக்கஞ் செய்தெனை யிடபன்
வருீத்தமா யோதும் வார்த்தைக்கி யானு
முருத்தியே மர்மமா யுரைத் திடா திருந்தேன்
கண்டதைத் தாயே கருத்தின் படியே
ஒண்டொடி தன்னை யுண்மையாய் நீசொற்
தண்டனை யின்றே தடையின்றி செய்வேன்
எண்டிசை புகழ் பதிக் கெய்துவா யென்று
பலவி சேஷநிப் பாவையைப் பெற்ற
இலகுசேர் பெண்ணெனன் றெண்ணாமற் சொலும்
மமை கேட்டிவள் பிதாவையா னோக்கி
தலமைசே ருனது நேரிழை யாளை

*அவளிட தாதியர் யாவரையும்*

தவறிற் பணிசெயத் தருகுவே னென்றால்

கவினுறுஞ் சிகரி காவல் பதிக்கு

உவகையாய் வருவே னுறுதிசொல் லென்று

சொன்னதைக் கேட்டித் தோகையை யீந்த

மன்னனா காயம் வையக மறிய

உன்னிட பணிசெய வுவந்(தே) தந்தேனென்

*றன்னிலை சத்திய மன்புடன் செய்தார்*

செய்தபின் பதிக்கு சீக்கிரஞ் சென்றேன்

வெய்யவேற் கொண்ட வேந்தனு மிவளைத்

தையலார் பாங்கி சகஸ்திர வரையும்

ஐயனே பணி செய வன்றளித் தனனே

### 78. தேவயானை யயாதிக்குச் சொல் விருத்தம்

*பணிகள்செய வகித்தமுத லாக வேந்தே*

பரிவுடனே இவளுமிவள் பாங்கி யான

மணிகள்செய வளர்ந்த நெடு வார்க்கி யங் கொள்

மங்கையரா யிரவர்பணி வணங்கிச் செய்ய

கணிகள்செய வேசிறப்புற்றே இருந்தேன்

ககனமளா வியபொழிலின் கயமு மிக்க

அணிகள்செய விருக்கு மலர்த் தடமும் பார்த்திங்

*கழகியபந் தாட வந்தோ மறிகு விரே*

ககனம் – ஆகாயம்
பொழில் – சோலை
கயம் – குளம்

வசனம்

கேளும். இராஜ பரமேசுவா! இடபன்மாராஜன் பணிவிடை செய்யக் கொடுத்த நாள் முதல் இந்த சன்மிட்டை முதலாகிய ஆயிரத்தொரு தாதிகளும் சதா காலமும் எனக்கு தொழும்பு செய்யும்படியான மிகுந்த சிறப்புடனே இருந்தேன். ஆகாசமளாவிய வனத்தின் பெருமையும் தாமரைத் தடாகத்தின் அழகையும் பார்த்து இவ்விடத்தில் பந்து விளையாடவேணுமென்கிற அபேக்ஷையினால் இன்றையத் தினம் இவ்விடத்திற்கு வந்தேன் மகாராஜனே.

### 79. தேவயானை யயாதிக்குச் சொல் விருத்தம்

கந்தர மெனவே யீயுங் கரதலத் தோனே துய்ய
சுந்தர நகுட னீன்ற துரைகள் ரத்தினமே கேளும்
கந்தமா முமது திவ்விய சயிலநேர் புயத்தைப்புல்
சிந்தையிற் தினமும் நானே தெய்வத்தை தொழுகின் றேனே

வசனம்

கேளும். இராஜ பரமேசுவரா! நான் உம்மை விவாகம் செய்து கொண்டு அழகிய வில்லைப்போல் திரண்ட உமது புயங்களை என் இருகைகளினால் தழுவி (மன்மத) யோகபோக்கியமானது அனுபவிக்கவேணுமென்று (சிந்தையில் என்) இட்ட தெய்வங்களை (யெல்லாம் வேண்டி பிரார்த்தனை) செய்துகொண்டிருக்கிறேனே.

அபேக்ஷை – விருப்பம்
சயிலம் – மலை

## 80. தேவயானை யயாதிக்கு சொல் தரு

தகைமையுடனே யிந்த அகில முழுதினுங் காக்கும்

மகிபனே யென் மொழியை மகிழ்வுடனே கேளும்;

கருது கலைக் கியானமுஞ் சொல்லருமை பெறு யெப்

பாவமதிலும் அயர்தந்திர விஞ்சைதனிலும்

அறிவினிலும் அழகினிலும் பொறையினிலும் புகழினிலும்

தரையினிலே யெனக்கு நிகர் நெறிமாதருண்டோ?

முன்னமொரு தினம் வனத்திற் சென்று விலங்கின் முழவை

வென்றுமிக அயர்வுடனே அன்று வரும்போது

கிணற்றிலழுதிருந்த யென்கையினைப் பிடித்துத் தூக்கு மன்றே

மணவனீரே வேறோர் கணவரையும் விரும்பேன் –

பதுமமலர் விழியுடைய அதிபனே யென்னையும் நீர்

வதுவை செய்து மருவயிதுததி கருணைபுரிவாய்

மணவன் – மணவாளன்
வதுவை – திருமணம்
இதுததி – இது தக்க சமயம்

## 81. யயாதி தேவயானைக்குச் சொல் விருத்தம்

... மணஞ் செய் யென்று பரிவுட னெனைக் கேழ்க்கின்ற

கன்னியே வுலகை யாளும் காவலற் கரசன் பிரம்ம

... மரபில் வந்த மாதையும் வதுவை செய்ய

நன்னெறி முறைமை யல்ல நானதற் கிசைந்தி டேனே

### வசனம்

கேளாய். தேவயானையே! கடல் சூழ்ந்த உலகமெல்லாம் ஓர் குடையிாளுகின்ற ராஜாதி ராஜனாகிய க்ஷத்திரிய குலத்திலுதித்த நான் நிலைபெற்ற பிரம்ம குலத்தினுதித்த பெண்ணாகிய உன்னை ஆசையோடு மணஞ்செய்து மருவுவது நீதி மார்க்கமல்ல. ஆதலால் நான் அதற்கிசைந்து மணஞ் செய்யேன் பெண்ணே.

### 82. யயாதிக்கும் தேவயானைக்கும் தருக்கம்

இராகம் : கேதார கவுளம் தாளம் : அட தாளம்

மணஞ் செய்வது மநு நீதியா செய்யில்
மன்னற்கிது பிரக்கியாதியா
இணையில்லாத புகழ் பிரம்ம குலத்துதித்த
ஏந்திழையார்களை யியல் க்ஷத்திரிய குல...

### 83. தேவயானை சொல் தரு

மணஞ் செய்வதா லென்ன தீதுஅதை
வழுத்திட வேண்டுமிப்போது
திணையெல்லலாம் புரக்குஞ் க்ஷத்திரிய திலகன் கொற்ற
திகழும் பிரம குலத் தெரிவையர்களை யுற்ற

(மணஞ்செய்வதாலென்ன...)

## 84. யயாதி சொல் திரு

செப்புவேன் கேள் மடமானே அதைத்

தீரமுடனே யரன்றானே

தப்பில் பிரம்ம குலத்தர் தாழ்குல மாதை (மணஞ்)

சார் முறையவர்க் கல்லால் தலைவர்க்காகுமோ

(குணஞ்)
(செப்புவேன்...)

திணை – குடிகள்

## 85. தேவயானை சொல் தரு

நம்பியிருந்த யானுய்யும்படி

நலமுடனே மணஞ் செய்யும்

விம்மும் மறையோர்க் கல்லால்

(வேந்தர்க்கடாதென்றே)

விளம்பாமலே மிகஉள மகிழ்வா யன்றே

(நம்பியிருந்த...)

## 86. யயாதி சொல் தரு

தடவனமே சொல்வன் கேளாய் – பூவிற்

சந்திராதித்தருதித் தனாளாய்

நடவா முறைமையினை நடத்தென்றுரைக்கின்றாய்

ஞாயமோ கலிகாலமாய் மனங்கரைக்ககிறாய்

(தடவனமே...)

அடாது – தகாது; விளம்புதல் – சொல்லுதல்
ஆதித்தன் – சூரியன்

## 87. தேவயானை சொல் தரு

உந்தனையே பிரானென்றே நான்
உளத்தில் நினைத்தேனே யன்றே
சந்தேகங் கொள்ளாமற் தற்காத்தருள வேணும்
நாஷ்டீகமமர் நோயை மீட்டு மதனும் நாணும்

(உந்தனையே...)

## 88. யயாதி சொல் தரு

இப்படி சொல்வது மேன்மையோ – நான்
இசைந்திடில் நற்புகழாண்மையோ
தப்பிதமென் நெஞ்சிய சற்றெண்ணாமல் நீயே
தகை மணஞ்செய்யென்று தானின் றுரைக்கிறாயே

(இப்படி...)

## 89. தேவயானை சொல் தரு

துதிசெய்யவே யுலகாளு மன்னர்
தோன்றலேயென் சொல்லைக் கேளும்
சதிசெய்யாமலே மன்றல் தருக்குடனே புரிந்து
சரச விழைவு தரத்தயை செயவேணும் பரிந்து

(துதிசெய்யவே...)

## 90. யயாதி தேவயானைக்குச் சொல் விருத்தம்

திணையில் வருணாசிரமத் தரந்தப்பாமல் தினமும்
வினவிப்புவி காத்திடு மேந்தல்யான்
இணையில் சுருதியிலுறு மார்க்கத்தை நீக்கி இயலுறு
முன்றன் கரத்தைப் பற்றலாமோ
பணையமரும் பிரம குலத்துதித்து வீறும் பைந்தொடி
யாள்நீயிந்த நினைவை யெண்ணல்
திணையமரு நன்னெறியோ அழகோ நன்றாய்
செப்புவாய் பெண்ணரசே யொப்புவாயே

### வசனம்

கேளாய். தேவயானையே! உலகத்திலே அந்தந்த வருணாசிரம தருமம் ஒரு காலும் பிசகாமல் பலப்பல விதமாக நன்றாய் விசா ரித்துத் தெரிந்து கொண்டு ராச்சிய பரிபாலனஞ் செய்யப்பட்ட பூலோகத்துக்கெல்லாம் ராஜனாகவும் நானிருந்து, ஒப்பில்லாத வேதமார்க்கந்தப்பி உன்னுடைய கையைத் தொடுவேனோ? நீ நல் ல பிரம்ம வங்கிஷத்தில் பிறந்தவள். தரும நீதி தப்பி இந்த யோசனை எண்ணுகிறது உனக்கு ஒழுக்குமோ? நல்ல மார்க்கமோ? அழகோ? சொல்லுவாய் பெண்ணே!

திணை – பூமி
பணை – பெருமை
வங்கிஷம் – வமிசம்

### 91. தேவயானை யயாதிக்குச் சொல் விருத்தம்

இசைந்திடே னென்றுரைத்த இயல்மிகு மன்னர் மன்னா
திசையிரு நான்கும் போற்றுந் திரமுள யெந்தை யென்னை
வசையறு முந்தனுக்கு மகிழ்வுடன் தருவே னென்றால்
நிசமுடன் வதுவை யிந்த நிமிஷத்திற் செய்கு வீரா

வசனம்

கேளும். என்னைக் கலியாணம் செய்து கொள்ள சம்மதிக்கேனென்று சொன்ன மகாராஜனே! என்னுடைய தந்தையாகிய சுக்கிரபகவானானவர் சந்தோஷப்பட்டு உமக்கு என்னைத் தாராதத்தம் செய்து விவாகம் பண்ணிக் கொடுக்கிறேனென்று சம்மதித்தால் நீர் என்னைக் கலியாணம் செய்து கொள்ளுகிறீரா இராஜ கண்டீரவா!

### 92. யயாதி தேவயானைக்குச் சொல் விருத்தம்

மறுவிலாச் சுருதி ஞானம் மநுநீதி சாதிபேதம்
பொறுமைநற் கலைகள் தர்மம் போதவே யுணர்ந்த சுக்கிரன்
இருதய மகிழ்ந்து யென்னை இக்ஷணம் மணஞ் செய்யென்றால்
மறைமுறை இதுதா னென்று மகிழ்ந்துன்னை மணஞ்செய் வேனே

திசை இரு நான்கு – எட்டுத்திசை
மறுவிலா – குற்றமில்லாத
சுருதி – வேதம்
இக்ஷணம் – இக்கணம்

## 93. தேவயானை தாதிகளுக்குச் சொல் விருத்தம்

தேங்கிளங் குரும்பை போல திரண்டரு தனத்தைப்பெற்ற
பாங்கியே யெனது தந்தை பாலினிற் கடிது சென்று
பாங்கென வேபேசும் புத்திரி தேவ யானை
சாங்கமா யழைத்தா னென்று சாற்றியே யழைத்து வாரீர்

### வசனம்

கேளும். தென்னங்குரும்பை போன்ற தன பாரத்தையுடைய சகிகளே எனது தந்தையாகிய சுக்கிரபகவானிடத்திற்குச் சென்று உமது புத்திரியாகிய தேவயானை அழைத்து வரச் சொன்னாளென்று சொல்லி அழைத்து வாருங்கள் சகிகளே!

## 94. தாதிகள் தேவயானைக்குச் சொல் கவி

விண்ணொளிர் மின் போல்
நுண்ணிடை வாய்ந்த
பெண்மணி தந்தைபால்
நண்ணியே யழைப்போம்

சாங்கமாய் – பணிவாய்

### 95. தோழிகள் சுக்கிரபகவானுக்குச் சொல் விருத்தம்

வானவம் மதிச் சூ டீசன் வழங்கு மந் திர மு ணர்ந்த
ஞான ஆ சிரியே யுந்தன் நளின மா மலர்த்தாள் போற்றி
மோனமா யிருந்தே யாதி மூர்த்தியை யறிய வல்ல
தீனத யாளா வுந்தன் திருவடி போற்றி போற்றி

வசனம்

மூன்றாம் பிறைச் சந்திரனை சடையிற்றரித்த பரமசிவனது அமிருத சஞ்சீவி மந்திரங்கற்ற குருநாதனே! உமது பாதாரவிந்தமே சரணம். மவுனமாக இருந்து அரிதான தவங்களைச் செய்து கர்த்தனை அறியவல்லவனாகிய தயாள குணனே சரணம். சரணம். ஐயனே!

### 96. சுக்கிரன் சொல் கவி

போற்றி யென் றுரைத்தப் புனிதமு மிகுந்த
சேற்றிதழ் மதுமத் திருவத னத்தாய்
நாற்றிசை புகழெனை நாடியே வந்ததை
ஆற்றுலுற் தெளிவா யறைந்திடு வாயே

மதி சூடீசன் – பிறைச்சந்திரனைச் சடையில் சூடிய பரமசிவன்
நளின மலர் – தாமரை மலர்

## 97. தாதிகள் சுக்கிராச்சாரியை அழைத்தல் விருத்தம்

பொருந்திழை மின்னோ வென்று புகன்றிடு நுசுப்பு ...
திருந்திழை தேவ யானை தேவரீர் தமையிப் போது
அருந்தழைத் தருக்கன் சோலை அமர்ந்தபூங் காவி டத்தில்
விருந்தழைந் திட்டா ளன்பின் றெய்தியே வருகு வீரே

### வசனம்

கேளும். வேதவித்தகராகிய சுக்கிராசாரியரே! சரணம். உமது தபோவனத்திலுதித்தயெங்கள் நாயகியாகிய தேவயானையம்மாள் பூங்காவனத்திற்கு அதிக சீக்கிரமாக அழைத்துக்கொண்டு வரச் சொன்னாள். வரவேணும் கர்த்தனே!

## 98. சுக்கிராச்சாரி வனத்திற்கு வருகிற பொது விருத்தம்

நினைத்திடு முன் வசமும்... நேசமாய்ச் செய்யுந் தூய
மனத்துள சீஷந் திவ்விய மலரடி வணங்கிப் போற்ற
வனத்தினைத் தரித்தோன் றாளை வண்மையாய்ப் பணிந்தி றைஞ்சி
கனத்தினை புகழுஞ் சுக்கிரன் களிப்புடன் வருகின் றாரே

நுசப்பு – இடை
சீஷர் – சீடர்

## 99. சுக்கிராச்சாரி வருகிற தரு

இராகம் : மோகனம் தாளம் : அடதாளம்

துங்கமற் திரங்கற்ற

சுங்கனென்று பேர்பெற்ற

சுக்கிராசாரி நானே

புங்கந்தனிற் கதித்த பிரம குலத்துதித்த சங்கையில்

லார் துதித்த தகை வலியும்

பதித்த தக்கவனிவனென இக்குவலயமதில் மிக்க

வியற்து மதிக்க தவத்தர்கள்

தனதடியினிற் சீஷர் மனமகிழ்ந்து பணிய அனைவரு

மிவரின் மேல் இனிமை யுறத்திணிய

(துங்க...)

ஆதியற்தமு நடுவாகும் பரத்தைக் கண்டே யனுதினம்

நமஸ்க்கரிப்பேன் இந்த அண்டரண்ட பகிரெண்டமெல்லாம்

பிரண்டாலும் நிஷடையிலிருப்பேன்

நீதியுடைய யெந்தன் பாதமலர் துதிக்கும் நிருதரை யாதரிப்

பேன்மிக்க

நெஞ்சமுவந்து பொல்லா வஞ்சகமரவரை நீறு நீறாயெரிப்பேன்

காதலுடனே பெரு

மாதவஞ்செய்துஞ்சம் கடிந்தவர்களு நிதம்பணிந்திடத்

துதிமிஞ்சும்

புங்கம் – அம்பு
கதித்தல் – விரைதல்
சங்கை – அச்சம்
குவலயம் – பூமி
நிருதர் – அரக்கர்
அமரவர் – தேவர்
நி டை – தியானம்

மாதிர மீதுறை பீதகனுமஞ்சும் – வலிமை பெற்றேனென்று

சகலரும் புகழ விஞ்சும்

வயிரவத்தன் மனமகிழ்ந்தனுப்பச் சிறந்து மயில் நென்ன

வருமாண கயனு...

மத்தகவத்தியுரிந்த சிவத்தை நினைத்து தவத்தை இழைத்தினி

பெற்றிடு மந்திர முரைத்திடுநேயன்

நாளுங் – கந்தறு நற்றவ தூயன்

வெகு – தந்திரமதிற்புகழ்மாயன் சரணடைந்தவர்க்

கருளாஞ்சகாயன்

பெற்ற மகளும் அழைத்தாளென்று இகுளையர் வந்துரைக்க

தகைகளுடனே மலர் முகின்னத்தினிலே தக்க

(துங்கமந்திரங்கற்ற...)

மாதிரம் – வான்; விஞ்சும் – மிகும்
பீதகன் – தேவகுரு (பிரகஸ்பதி)
அயிரவத்தன் – இந்திரன்
கயன் – கச்சன் (பிரகஸ்கபதியின் மகன்)
கந்தறு – பற்று அழித்த

## 100. தேவயானை போற்றி விருத்தம்

வானவ ரொடுங்கமிருத சஞ்சீவி மந்திரமகிழ்வுடனுணர்ந்து
தானவர் குழவைக் கார்த்திரட்சிக்கும் கதிப்பெறுயெந்தையே சர ணம்
தேனெனு மொழியாளாகிய யென்னைத் திருவுளமிகு மகிழ்வெய்தி
மானிலந் தன்னிலளித்துக் கார்த்தருளும் மறைபயில் முதல்வனே
சரணம்

### வசனம்

சரீணம். சரணம். யென்னையளித்துக் காத்தருளும் தந்தையே சரணம்.

## 101. சுக்கிரன் பெண்ணாகிய தேவயானையை வாழ்த்து விருத்தம்

திங்கள்சேர் வதனா வாழி தேன்மொழி யாளே வாழி
பங்கமில் லனமே வாழி பாவையர்க் கரசே வாழி
துங்கமாங் குணத்தாய் வாழி தூயன்ன மளித்தாய் வாழி
இங்கித மயிலே வாழி யென்றவச் சுதையே வாழி

வானவர் – தேவர்
தானவர் – அசுரர்
கார்த்திரட்சிக்கும் (காத்து இரட்சிக்கும்)

## 102. சுக்கிரன் பெண்ணாகிய தேவயானைக்குச் சொல் விருத்தம்

கன்னலைக் கடிந்த சொல்லும் கழையெனத் திரண்ட தோளும்
மின்னல்போல் நுண்ம ருங்கும் விளங்குமென் புதல்வி யேகேள்
என்னை யின் னிமிஷந் தன்னில் யீங்கழைத் திட்ட சேதி
குன்னமில் லாம லிப்போ கொப்பென வுரைசெய் வாயே!

வசனம்

கேளாய். யெனது தபோ பலத்தினாலுதித்த தேவயானையே! இப்போது இந்தப் பூங்காவனத்திற்கு யென்னை வரவழைத்ததை உன் மனதில் ஒளியாமல் தெரியச் சொல்லுவாயம்மா.

103. தேவயானை தன் தந்தையாகிய சுக்கிரனுக்குச் சொல் விருத்தம்

பெண்மையினா லுயர்ந்த யென்னை யளித்த கோவே
பேதையான் கூவலில் வீழ்ந்தலற நீதித்
தண்மையினா லுயர்ந்தயயா தியுமங்கே யதிச ரோரு
கமலமலர்க் கரந்தொட்டெ டுத்தா ரன்றே
ஒண்மையினா லுயர்ந்தகயன் சாபத்தா லும்உ ளத்தில்
யயாதியைப்புணர உகந்ததாலும்
வண்மையினா லுயர்ந்தயெனை யவர்க்களித்து மகிழ்
கொள்வீ ரினியசெகப் புகழ்கொள் வீரே

கன்னல் – கரும்பு
கழை – மூங்கில்
மருங்கு – இடை
குன்னம் – நிந்தை
கூவலில் – கிணற்றில்

வசனம்

கேளும். என்னைப் பெற்ற தந்தையே! சரணம். சரணம். ஆதியிலே சன்மி டையானவள் தாதிகளைவிட்டு என்னைக் கிணத்திலே தள்ளிய போது, அந்தக் கிணத்தில் வருத்தத்துடன் புலம்பிக் கொண்டிருந்த தருணத்தில், இந்த யயாதி மகாராஜன் அன்றையத் தினம் வேட்டை

மார்க்கம் போய் வந்து கிணத்திலே அலறி அழுகின்றயென் கையைப்பிடித்து எடுத்ததினாலும், பிரகஸ்பதியினுடைய குமாரனான கயன் சொல்லிய சாபத்தினாலும், எனக்கு இவரையே சேரவேணுமென்று இருக்கிற ஆசையினாலும், என்னுடைய கற்பு வியர்த்தமாய்ப் போகாமல் கிருபா கடாஷம் வைத்து என்னை இந்த மகாராஜனுக்கே விவாகம் செய்து கொடுக்கவேணும் தந்தையே.

மாறகம் (மார்க்கம்)
வியர்த்தம் – வீணாக

### 104. சுக்கிரன் தேவயானைக்குச் சொல் விருத்தம்

விம்பவா யால் வி ளம்பும் மெல்லிய மொழியாய் சந்திர
விம்பவாய் வதனீ நீயும் எண்ணிய படிக்கி யானும்
அம்பரஞ் சூழ்பூ வாளும் ஆண்மைமன் னவனுக் கின்றே
அம்பரத் தோர்து திக்க அருமணஞ் செய்கு வேனே

வசனம்

கேளும். கோவ்வைக்கனி போல் சிவந்த வாயினையுடைய தேவயானையே உனது மனோாவீ டப்படிக்கி இந்த யயாதி மகாராஜனுக்கே தேவாக்களும் மதிக்கத்தக்கதாய் மகா சந்தோஷத்துடனே தாரா தத்தம் செய்து நான் மணம் செய்து கொடுக்கிறேன் பெண்ணமுதமே.

### 105. சுக்கிராச்சாரி யயாதிக்கு வாழ்த்து விருத்தம்

மலர்க்கண் வாரிதிகள் சூழ்ந்த வையகந் தனில்ரூ பத்தில்
மலர்க்கணை மதன னென்ன வடிவுள மன்னா வாழி
கக்கமில் லாம லிந்த காசினி யாண்டுஞ்ச...
கலகலைக் கியான மோர்ந்த காவலா வாழி வாழி

வசனம்

வாழி! வாழி! யயாதி மகாராஜனே

விம்பம் - கொவ்வை
அம்பரம் - கடல்
அம்பரத்தோர் - வானவர்
மனோபீ டப்படிக்கி (மனவிருப்பப்படிக்கு)

## 106. இராஜன் போற்றி விருத்தம்

நான் மறை முழுது ணர்ந்த ஞானஆ சிரியே போற்றி
வான்படர் சுரரை வெல்லும் வள்ளலே போற்றி போற்றி
தேன்விரைப் பொழிலில் கர்த்தன் சேவடி நினைக்கும் தேவே
கான்செறி நினது திவ்விய கழலினை போற்றி போற்றி

## 107. சுக்கிராச்சாரி யயாதிக்குச் சொல் விருத்தம்

சாகரஞ்சூழ் புவிக்குட் டரியவ ரினத்தை வாட்டி
வாகையே வியய யாதி மன்னனே சொல்லக் கேளாய்
தோகைநோ யெனது புத்திரி தூயநன் வதுவை செய்து
மாகன சீரும் பெற்று மகிழ்ந்து வாழ்ந் திருந்தி டாயே

வசனம்

கேளும் யயாதிராஜனே! மயிலைப் போன்ற சாயலுடைய எனது புத்திரியாகிய தேவயானைய்ய மகிழ்ச்சியுடனே கலியாணம் செய்து கொண்டு மிகுந்த போக போக்கியங்களை அனுபவித்து வாழ்ந்திருப்பாய் மகாராஜனே

சுரர் – தேவர்
சாகரம் – கடல்; தோகை – மயில்
வதுவை – திருமணம்

### 108. யயாதி சுக்கிரனுக்குச் சொல் விருத்தம்

வாழுமென் றெனையு ரைத்த மாமறை யோனே போற்றி
தாழுமிக் குலத்தன் மேலாந் தகைபெறு குலத்து மாதை
மாழையாய் மணமே செய்ய வையத்தில் வழக்க முண்டோ
யேழைமீ தினிலே அன்புயி ருத்தியே யுரைத் திடீரே

#### வசனம்

கேளும். கலியாணம் செய்து மருவி வாழும் என்று சொன்ன சுக்கிராச்சாரியரே! சரணம். சரணம். தாழ்மையான குலத்திலே உதித்தவர்கள் மேன்மையான குலத்திலே உதித்த ஸ்ரீகளை விவாகம் செய்கிறது இந்த உலகத்திலே வழக்குமுண்டோ? அதை எனக்குத் தெரியச் சொல்ல வேண்டும் சுக்கிராச்சாரியரே.

### 109. சுக்கிரன் யயாதிக்குச் சொல் விருத்தம்

வழக்குமு முண்டோ வென்று மகிழ்ந்தெனைக் கேட்ட வேந்தே
விழைக்கொடு தாழ்ந்தோர் மேலோர் மெல்லியை மணந்த தில்லை
தழைத்தநற் புகழ்சேர் பொன்னின் தனையனும் வெகுண்டு முன்பு
இழைத்தசா பத்தா லுன்னை யெழில் மணஞ் செய்யச் சொன்னேன்

மாழையாய் – அழகாய்
விழை – விருப்பம்
பொன்னின் தனையன் – பிரகஸ்பதியின் புதல்வன் (கச்சன்)

வசனம்

தாழ்ந்த குலத்திலே பிறந்தவர்கள் உயர்ந்த குலத்திலே பிறந்த ஸ்ரீகளை விவாகம் செய்கிற பழக்கமுண்டோ என்று கேட்ட யயாதிராஜனே! உலகத்திலே இது வரைக்கும் தாழ்ந்த குலத்திலே பிறந்தவர் உயர்ந்த குலத்திலே பிறந்த பெண்ணை விவாகம் செய்வதில்லை. அப்படி இருந்தபோதிலும் கீர்த்திப் பிரதாபனான பிரகஸ்பதி பகவான் குமாரன் கயன் என்பவன் இவன் பேரில் கோபித்துச் செய்த சாபத்தினாலே பிராமணன் இவளைக் கயிலாணம் செய்யத்தகாது. ஆதலால் உன்னைக் கலியாணம் செய்யச் சொன்னேன் மகாராஜனே.

## 110. யயாதி சுக்கிரனுக்குச் சொல் விருத்தம்

உயர்குண பூசு ரர்க்குள் ளூறு மண மாகா தென்று
கயன்... காபஞ் சொன்ன காரணந் தனையெ னக்கு
தயவுட னாதி யோடந் தமும் தடை யில்லா மற்றான்
வியலுடன் சொன்னா லிந்த மெல்லியை மணஞ்செய் வேனே

வியலுடன் – விரிவுடன்

வசனம்

கேளும் சுக்கிராச்சாரியரே! பிரகஸ்பதி பகவான் குமாரன் கயனிட்ட சாபத்தினாலே உன்னை விவாகம் செய்யச் சொன்னேன் என்று சொல்லுகிறீர்; அதுவும் சரியே. அந்தக் கயனுடைய சாபம் உமது குமாரத்தியாகிய தேவயானைக்கு வந்த காரணத்தை எனக்கு ஆதியோடு அந்தமாகச் சொன்னீரேயாகில் யாதொரு தடையுமில்லாமல் நான் விவாகம் செய்து கொள்ளுகிறேன் சுவாமி.

## 111. சுக்கிராச்சாரி யயாதிக்குச் சொல் அகவல்

இராகம் : மத்தியமாவதி

திணையொரு குடையில் செருக்குட னாளும்
இணையிலாப் புகழ்சேர் இறைவர்ச ளரசே
கணைவிழிச் சுதைக்குக் கயனிட்ட சாபம்
அணுகிய சேதி அறைகுவன் கேளாய்
நிருதர் தேவர்க்கும் நெடும்பகை யதனால்
இருவரும் பொருதி யிராக்கதர் மடிந்தால்
மிருதசஞ் சீவி விஞ்சையைக் கொண்டு
திறமுட னெனது சீஷரைப் புரப்பேன்
இப்படி யிருப்பதாய் இமையவர் குழுவும்
செப்பி யச்சியின் செம்மலுங் கூடி
ஒப்பிலா வவர் குரு உயர்பதம் போற்றி
அப்பனே அரக்கர்கள் அமர்செய் வாரார்
வந்தவ ருடனே வனசமர்ப் புரிய
சொந்தமாய் அசுரத் தொகுதிகள் மடிந்தால்
பந்தமா யவர்குரு பாங்குட னமிருத
மந்திர மதினால் மகிழ்ந்தெழுப் புகிறார்
ஆதலா லவர்திரள் அணி மிகுத் திடவே
போதவே யமரம் புரிகுச ரதனால்
தீதிலா நமது சேனை பின்னிடுது

பாதக வசுரால் படமுடி யாதென
தேவர்கள் முதலாந் திகழ்பெறு கோனும்
ஆவலாய்க் குருவுடன் அறைந்தவர் மைந்தன்
தாவிய புகழ்க்கயன் றனக்கித முரைத்தேன்
சேவடி தொழுது தினம் பணி செய்ய
மந்திரம் கற்று வருகுவா யென்று
விந்தை யா யனுப்ப வேள் கயன் விரைந்து
சிந்து சூழுலகில் சீருடன் நண்ணி
வந்தனு தின மு மலர்க்கழல் பணிந்து
தேசிக னேயுன் திருவடித் தொ ழும்பை
நேசமாய்ச் செய்ய நினைந்து வந் தேன் என்
றாசிலர்க் கயனு மறைந்திடக் கேட்டு
யோசியா மலேயா னுண்மையென் றறிந்து
எந்தனா சிரமத் திருவென வுரைத்தேன்
சிந்தையு மகிழ்ந்தச் சிறுவனு மிருக்க
அந்தநா ளினிலிவ் வரிவையு மவனும்
விந்தைசிநே கிதராய் மேவியே யிருந்தார்
கயினுமெந் தனுக்குக் காதலாய் வேணும்
இயல்பெறு சமித்துஇலை குசை கொணர்ந்து
நயமுட னெனக்கு நகுவுடன் றருவான்
பயமிலா மல்இனும் பகர்பணி இயாவையும்

குறைவொன் றிலாமற் கொப்பெனச் செய்து
உறைவதை யசுரர் உணர்ந்தஅச் சுதனும்
அறையுமந் திரத்தை அபகரித் திடனம்
இறையகத் திருக்கிறானென் றவர் உன்னி
வெய்யதா னவர்கள் விரைவுடன் கொல்ல
பையவே பதுங்கிப் பாங்குட னிருக்க
துய்யநற் கயனும் சொகுசுட னாளும்
கொய சமுத் துகளைக் கொணர்ந்திட வேண்டி
வருவதைக் கண்டு வழியினிற் பதுங்கி
இருந்திடுந் தகுவர்க ளிகலுடன் பிடித்து
திறுகிலாச் சிறுவனைச் செகுத்தவர் போனார்
விரைவுட னேவரும் வியல் கயன் பரிதி
குடதிசை முழுகி குடங்கா வராததால்
திடமயில் நிகர்இத் தேவ யானையும்
பெடவெழிற் சினேகப் பிள்ளையைக் காணா
தடவுடனென்முன் னலறியே யுரைக்க
உரைத்ததைக் கேட்டு உயர்ஞான திருட்டி
திருத்தமாய் ராக்கத் தீயர் வதைத்துத்
தரணியிற் புதைத்த தன்மையை யறிந்து
விரைவுட னமிருத விஞ்சையா லெடுப்ப
வந்தென் பதத்தில் வணங்கிய கயனும்

சிந்தையு மகிழ்வாய்ச் சீருடனிருந் தான்
அந்தமா மென்ற னாசிர மந்தனில்
பந்த மாங்கயன் பண்புட னிருக்க
அரக்கர்கள் கண்டு அகமது பொறாமல்
தருக்குட னெவ்விதத் தாவது கயனை
நருக்கிட வெள்ளி நற்கடத் தொளித்தே
இருப்பதை யறியா யேந்தலு மவ்வழி
செலச் சமூதத்திற்குத் தீயர்கள் கண்டு
வலிவுடன் செகுத்து மத்தியபா னத்தில்
நலமுட நித்தனை நாள் கொடுப் பதுபோல
இலகுடன் சேர்த்தி ராக்கத ரளித்தார்
இவ்வஞ் சகத்தை யெண்ணா வடியேன்
வொவ்விய வதனை வுவப்புட னருந்தி
அவ்விய மின்றி யகத்தினிலிருந்தேன்
தேவர்கள் வணங்குஞ் செம்மலே பொழுது
அத்தமித் துங்கய னகம்வ ராததால்
சித்த நொந்திச் சிறுவியு மென்முன்
கத்தியே யழுது கயன்வர விலையென்
றுத்தர முரைக்க வுன்னிய கயனை
ஞான திருட்டையில் நலமுட னேநீண்
மானிலத் தெங்கும் வலியுடன் பார்த்தேன்
யினமிற் கயனு மெங்குமி லாததால்

பானஞ் செய்ததைப் பாங்குட னுன்னி
நூலைமுள யெனது தததைத ...
மானலக் கயனென் வயிற்றினிலி
தானவர் செய்த சதியிதென்ற ...
ஆனசஞ் சீவியை அவனுக்கு (ரைத்து)

வயற்றைக் கிழித்து வந்துபின் யான்
பயிலுவிஞ் சையினால் பரிந்தெனை யெழுப்பி
இயலுடன் றொழும்பெனக் கிட்டமாய்ச் செய்து
நயமுடன் சிறிது நாளிங் கிருந்து
புரிமுகத் தன்னகர் புக்கிட யெண்ணி
திரமுள யென்னிடஞ் செலவிடை பெற்று
தெரிவையா மிந்த தேவயா னையினிடம்
பிரிவுடன் வந்து பாவையே தமியேன்
புக்க பொன் னகரம் புகழ்ந்த
றக்கயன் சொலயிவ் விரிவையும்
இக்குவலயத்தில் இயலுடனு
தக்கமணஞ் செயத் தானினைந்து
உன்னை மணஞ்செய வுவப்புட னிருந்த
யென்னைநீ மோச மிப்படி செய்து

பொன்னக ராம்உன் புரமதிற் கேக
தன்னகத் தினலே தாளெண் ணலாமோ
வன்னியாய நீயும் மணமின் றிருக்கிறாய்
கன்னிகை யானுங் களித்திருப் பதினால்
யென்னை யின் னி மிஷத் தெந்தையு மறிய
மன்னும்நீ திப்படி மணந்தனைச் செய்து
சுகமனு பவிக்கலாம் சொல்லு
புகவேண்டாமெனப் பூவையும்
இகலுறு கயனவ் வெரிமொழி
புகலவுங் கதிர் முகன் புழுவென
அனியாய மாயிவ் வடாத சொல் கூறல்
றனி யா யுலகிற் றருமமு மாமோ
கனிவாயுன்தந்தையால் கற்ற மந் திரத்தால்
இனியான் புகரும் யெனக்கு தையதால்
தங்கைநீ யென்று சாற்றிடு முறையாம்
மங்கையே யிப்படி வழுத்துவ தழகோ
சங்கையில் லாமற் சதிருட னிருயான்
பொங்கமாய்ப் பொன்னகர் புகவிடை தாவெனச்
சொல்வே கயனும் துயர
மெல்லியு மனுப்ப விசைந்திட
அல்லவிக் கயனிவ ளனுப்பிட
மெல்லவே நினைத்து விரைவுட

கண்டவிப் பெண்ணுங் கடுஞ்சினத் துடனே
அண்டியெந் தையி நிடத் தடவுடன் பெற்ற
பண்டுள மந்திரம் பலிக்காமற் போக
மிண்டுசா பம்சொல் வேள்கயன் வெகுண்டு
செப்புநின் மணஞ் செய்யலா காதெனத்
தப்பித மின்றியான் தருமமா யுரைக்க
மெய்ப்புகழ் மந்திரம் வியர்த்தமாய்க் கடவதென்
றிப்படி சபிப்ப தேதெனக் கயனும்
இம்மட மாதினை இயலுட னோக்கி
செம்மையா யுயர்குலஞ் சீருட னுதித்தும்
விம்முமா னிலமாள் வேந்தர்க ளுன்னை
அம்பல மணஞ்செய் தணைகுவா யென்று
குருமகன் சாபங் கோபமாய்ச் செய்தான்
திருநிகர் காத்துத் தலைவனே யிவளை
திருமறையோர்மணஞ் செய்திடக் கூடா
தருமணஞ் செய்துநீ அமர்ந்து வாழ் வாயே

### 112. யயாதி சுக்கிரனுக்குச் சொல் கவி

தெருண்மிகு முனிவர்கள் தேவர்கள் புகழும்
அருண்மிகு முமதெண் ணப்படி நடக்க
ஒரு தடை யுண்டோ வுமதுபுத் திரியை
திருமண மெனக்குச் செய்திடு வீரே

## 113. சுக்கிரன் யயாதிக்குத் தாராதத்தஞ்செய்து கொடுக்கிற அகவல்

இராகம் : மோகனம்

கன்னற் செய்யினிற் கதித்ததி வீறும்
மன்னற் செய்யாண் மேவிய அஸ்த்தினா
புரியினில் வாழும் புரவலர்க் கோவே
பரிவுட னெனது பாவையை யுனக்கு
மனைவியாயத் தந்தேன் மகிழ்வுடன் பெற்று
இணை பிரி யாமல் இன்பமும் நுகரும்
சன்மி டை முதலாம் சகஸ்திரப் பாங்கியர்க்
கின்பமாம் உண்ணும் இழைகளும் பொருளும்
தருவதே யல்லால் சகஸ்திரத் தொருவர்
பரிவதைத் துறந்துப் பாக்கிய வானாய்
மரகதனைப் போல வாழ்வினிற் சிறந்து
திரமுடன் சீவியாய்ச் சீருடன் வாழ்வீர்

கன்னல் – கரும்பு; செய் – வயல்
மன்னல் – உயர்ச்சி; செய்யாள் – செல்வம்
மரகதன் – குபேரன்
சீவியாய் (சிரஞ்சீவியாய்) நெடுங்காலம் நிலைத்து வாழ்தல்

## 114. பொது விருத்தம்

சுக்கிர னுரைத்த வாய்மைத் தொன்மறை யாக வெண்ணி
இக்குநேர் மொழியா ளான இயல்தேவ யானை தன்னை
தக்கநன் மணமே செய்து தலைவனுந் தன்ன கர்க்கு
பக்கமே மனதி லுன்னி பூவையோ டுரைசெய் வானே

வசனம்

அகோதெப்படியென்றால் யயாதி மகாராஜன் சுக்கிராசாரியார் சொல்லிய மொழிகளை வேதமந்திரமாக எண்ணிக்கொண்டு கரும்பைப்போன்ற இனிமையான வசனத்தையுடைய தேவயானையைக் கலியாணஞ் செய்து தன்னகரமாகிய அஸ்தினாபுரத்திற்குப்போக தேவயானைக்குச் சொல்லுகிற விதம் காண்க

115. யயாதி தேவ யானைக்குச் சொல் விருத்தம்

மங்கைநல் லாளே கேளாய் வளமைசேர்ந் திலங்குங் கோமான்
தங்குமென் னகரினுக்குச் சதிருடன் போக வேணும்
பொங்கமா யுனது பாங்கி பூவையா யிரத்தோ ரோடு
மங்களச் சேனை சூழ மானகர் போவோம் வாராய்

வசனம்

கேளும் பெண்ணே! தேவயானையே! சிகர கோபுரங்கள் அழகுசெய்யா நின்ற நமது அஸ்தினாபுரிப்பட்டணத்திற்குப்போக வேணுமாகையால் உனது தாதிக் கூட்டங்களுடனே வாராய் எனது இன்னரசியாகிய தேவயானையே.

## 116. யயாதி சொல் தரு

இராகம் : தோடி   தாளம் : ஆதி தாளம்

அத்தினாபுரிக் கேகுவோம்

அலை கடலென வெங்கும்

கலை மறைகள் முழங்கும்

அத்தினா புரிக்கேகுவோம்

சித்திரவில்லோரை வென்ற சுத்தவீரரே பந்து

செனங்களே நரமனை

வோருமன முவந்து

(அத்தினாபுரிக்கேகுவோம்...)

கானத்திருக்கும் பொல்லாக்கடு விலங்கினை மாய்ந்து

கருதும் மருத நிலக் காவலர் துயர் தீர்த்து

வானளாவு பொழில ல னவகையோசனை ஏற்று

வந்த விடத்திலொரு மாது நண்ணினதேற்று

(அத்தினாபுரிக்கேகுவோம்...)

வேட்டைக்குப் புறப்பட்ட வேளையின் பலனிந்த

மேதினி தன்னிலே வேதமுழுதுணர்ந்த

தாட்டீக முள ஞானத் தலைவன் சுக்கிரன் தந்த

தனையைத் தத்தஞ் செய்து நானளித்தரைந்த

(அத்தினாபுரிக்கேகுவோம்...)

வெற்றி வலிமையுறு வெவ்வல்லியமும் கோவும்

மெலியும் பகையில் லாமலினிமையுடனுலாவும்

குற்றமற்ற யெழிற் கொம்மை மஞ்சையளாவும்
கொற்றமுடையரென்று குபேரனாவல் மேவும்

(அத்தினாபுரிக்கேகுவோம்...)

### 117. பொது விருத்தம்

தருக்குறு தேவ யானை சன்மிட்டை முதலாம் பாங்கி
மருக்குழல் மடவா வேராடு வண்மைசே ரும்ய யாதி
பெருக்கமாஞ் சேனை சூழ பிறங்கத்தினாபு ரத்தில்
செருக்குடன் தன்ம னைக்குட் சீருட னண்ணி னானே

#### வசனம்

அகோதெப்படியென்றால் மகா சந்தோஷத்துடனே தேவயானை சன்மி டை முதலாகிய ஆயிரத்தொரு தாதிகளும் சேனா சமுத்திரமும் பந்துவும் சூழ்ந்து வரும்படி யயாதி மகாராஜன் தனது அரண்மனைக்கு வந்துசேர்ந்தார். மேல் நடந்தது காண்க.

### 118. தேவயானை சன்மி டைக்குச் சொல் விருத்தம்

பந்தினைப் பொருதுஞ் சேர்க்கை பாவைசன் மிட்டையேநீ
சந்தன வனத்திற் செய்த சதிரரண் மனையில் மேவி
சிந்தனை யொன்றி ல்லாமற் சிறப்புட னிருந்து கொண்டு
வந்தனு தினந்தொ ழும்பு மகிழ்வுடன் செய்கு வாயே

## வசனம்

கேளாய். எனது பாங்கியாகிய சன்மிட்டையே! எனது மன்னவனாகிய யயாதி மகாராஜன் சந்தனப் பூங்காவனத்திற் கட்டிவைத்த நவரத்தின கசிதமாகிய அரண்மனையில் இருந்து கொண்டு நாள்தோறும் என்னிடத்திற்கு வந்து பணிவிடைகளில் யாதொரு குறைவும் இல்லாமல் செய்து சுகமாயிருப்பாய் பெண்ணே.

## பொது கட்டியன் வசனம்

அகோதெப்படியென்றால் சன்மிட்டையானவள் சந்தனப் பூங்காவனத்தில் அரண்மனையிலிருந்து கொண்டு தினந்தோறும் தேவயானைக்குப் பணிவிடை செய்து கொண்டிருந்தாள். யயாதி மகாராஜன் தேவயானையுடனே மன்மத லீலா விநோதங்களைச் செய்து அயது, துறவசுவெனும் இரண்டு புத்திரரைப் பெற்று இராஜ்ஜிய பரிபாலனம் செய்து வருங்காலத்தில், சன்மிட்டை என்னும் தாதிப் பெண்ணானவள் சந்தனப்பூங்காவனத்தில் வந்தனாள்–முதல் யயாதி மகாராஜனைச் சேர வேணுமென்கிற விருப்பத்தினால் மன்மதன், தென்றல், சந்திரன், சமுத்திரம், கிள்ளை, குயில் இதுகளால் மெலிந்து விரகாக்கினி மீறி வருத்தப்படுகிற விதம் காண்க.

## 119. சன்மிட்டை தாதிகளுக்குச் சொல் விருத்தம்

இராகம் : கெண்டா

அருமலர்க் கணைகள் கொண்ட அங்கஜன் செய்யும் போரிற்
பெருகிய வறிவி ழந்து பேதையாய்த் தவித்து வாடி
இருமனை தனிலி ருக்கு மெந்தனைப் போலே மாதர்
மருவுவ ரோவிப் பாரில் மகிழ்ணணில் லாமற் றானே

வசனம்

கேளும். எனதன்புள்ள தோழிமார்களே! அரிதாகிய புட்ப பாணங்களைக் கொண்ட மன்மதன் என்பேரில் செய்த யுத்தத்தினாலே பெரிதாகிய புத்திகளெல்லாம் இழந்து பேதையாகிய மனத்துடன் உழன்று பரிதவித்து இந்த அரண்மனையிலிருக்கின்ற என்னைப்போலே பூலோகத்திலே ஸ்ரீ ஜாதிகள் புருஷன் இல்லாமல் மிகுந்த விரக தாபத்துடனே வருத்தப்பட்டுக்கொண்டு இருப்பார்களுமுண்டோ? எனது சகிமார்களே!

120. சன்மிட்டை விரகதாபப்படுகிற தரு

இராகம் : தோடி (அல்லது) காம்போதி   தாளம் : ஆதி தாளம்

விரகலாகிரி மீறுதே

எனதுளம தனிலதிக

விரகலாகிரி மீறுதே

சுரக்குயமிரண்டும் கனத்ததிகம் வீறுதே

கருதுங்காம மதனாலுரகபடஞ் சீறுதே

(விரகலாகிரி...)

உடலிரண்டுயிரொன்றாய் எனக்கமர்ந்த

ஒண்டொடிமாரே நன்றாய்

நமலையுடனே பஞ்ச நறுமலர்க்கணைவிடும்

கலைதனிற் சிறந்த பாவி மன்மதன் கொடும்

(விரகலாகிரி...)

எஞ்செய்வேன் மடமானே தேகவெம்மை

மிஞ்சுதென் செய்வேன்

பஞ்சணை மீதினிற் படுக்க சகிக்கிலை

கஞ்ச முகையை யுறழக் கணசேக்கைப் பசலை

(விரகலாகிரி...)

நிலவையப்புறம் போகவே சொல்வீரெந்தன்

நெஞ்சஞ்தளர்வுக்காகவே

கலவை சாந்தமணிந்த காயமிக நோகுதே

யுலவை வீசவே நெட்டுயிர்ப்பதிகமாகுதே

(விரகலாகிரி...)

மாரக்கணை மெ...குதே காமங் கொளந்தன்

... மிகவும் பிரமிக்குதே

அலைகடல்களுமிதோ அதிருதேயென்ன பொய்யோ

கலக்கமுறவ வந்தி காளிதோ கூவுதையோ

(விரகலாகிரி...)

இளந்தென்றலும் வீசுதே கீரங்களிதோ

இனிடையுடனே பேசுதே

தளர்ந்தவென் மீதினிற்றயை யில்லாமற் பகை

யுளந்த ... கொண்ட மதனொண்மையாய் செய் வகை

(விரகலாகிரி...)

### 121. சன்மிட்டை சொல் விருத்தம்

ஆசைநோ யினைவி ளைக்கு மங்கஜன் பழியினாலும்

வீசுவெம் மதியி னாலும் மெலிந்தவென் ஆக மீதிற்

பேசுமிக் குழவித் தென்றறற் பிரளய காலம் போலே

மோசடி யாக வந்து மோதுதென் செய்கு வேனே

வசனம்

ஆ தெய்வமே! காம விகாரத்தைத் தருகின்ற மன்மதனிட மலர்க்கணையினாலும் விஷாக்கினிபோலே காய்கின்ற சந்திரனாலும் எனது தேகமெல்லாம் மெலிந்து சோர்வு அடைந்து இருப்பதைக் கண்டும் இளஞ் தென்றலானது என்பேரிற் பகைகொண்டு வந்து மோதுகின்றதே என்ன செய்வேன் தெய்வமே!

## 122. சன்மிட்டை சொல் தரு

இராகம் : செந்தோடி தாளம் : மட்டயம்

தென்றலிப்படி வீசுவதென்ன சூதோ
வெண்திங்கள் செய்சதிக்கிது என்மேற் பகையேதோ
மன்றலம் பென்மேற் பாயவே யுளம்
வாடும் வேளையிற் சாடுமிவ்விளம்

(தென்றலிப்படி...)

சந்திரன் கனலாயெரித்திட நொந்து – நான்
தவித்திருப்பதைச் சற்றெண்ணாது விரிந்து
வந்து தேகத்தை வருத்துதென் செய்வேன்
வையத்திலிப்படி யெத்தனை நாள் தொய்வேன்

(தென்றலிப்படி...)

பெண்கள் மீதினிலழலாய் வீசுவதறமோ அன்றிப்
பெருமையோ வனப்போ வுனக்கு நற்றிறமோ
வண்கள் நெடிய நாணியாய்க்கொண்ட

மதனுக்குச் சகாயமாய்ப் பிரசண்ட

(தென்றலிப்படி...)

பவனனிற்றென்றற் பவனை மிக குளிர்ந்த தென்று

பகுக்கும் வசனம் பழுதடைய யான் தளர்ந்த

விவரம தனைக் கண்டும் வல்லிய

மிகுதியனையமேவு மெல்லிய

(தென்றலிப்படி...)

*அழல் – நெருப்பு; வனப்பு – அழகு; பிரசண்டம் – கடுமை; பவனன் காற்று*

### 123. சன்மிட்டை சொல் கந்தார்த்தம்

இராகம் : மத்தியமாவதி

வேதமார் திறந்குறு முனிவைகியப் பொதிய

சீதமார் தட மாதிரத்தினலிருந்தினிய

பேதையாகிய யென்றனுக்காவலு மலியப்

போதவே யிளந்தென்றலுந் தேகங்கள் மெலியப்

பொருதுதென் செய்வேன் உயிரை வவ்வ

கருதுதென்செய்வேன்

பெருகு மழலை மொண்டு பிரியமில்லாமலே

உருகமெயிலே வீசுயுவந்து நில்லாமலே

(பொருது...)

## 124. சன்மிட்டை சொல் கந்தார்த்தம்

இராகம் : மத்தியமாவதி

கழையெனு மூரிவில்ல பிடித்து நாணேற்றி
விழைவுடன் மருமலர்ப்பகழிகள் தூற்றி
மழையிருட் களிறெனக் கொண்டவன் காய
புழையதாய்ப் போன மெய்யினில் தென்றல் பாய
பொறுக்கிலேன் மானே என்றனாசை
மறக்கிலேன் தேனே
சிறக்குமிளம் வயிற செருக்குடனேசுதே
வெறுப்பில்லாமற் கிள்ளை வீரமாய் பேசுதே

(பொறுக்கிலேன்...)

## 125. சன்மிட்டை சொல் கந்தார்த்தம்

இராகம் : மத்தியமாவதி

பாதகா பாவையரென்றிடிற் பசாசுகள் கூட
மேதகா மனமிரங்குமென்பார்களே மூடா
ஆதலாலதுகளை நினையாமலே நண்பறு
மூதனாய் தேசிகள் மனைவியைச் சேர்குரு
துரோகியே போடா – மாதர்களின்மேல்
விரோதஞ் செயவோடா
உரோகிணி மீதிலுவப்பு கொள்ள மெத்த
உரோக முடலிலுறையச் சாபம் பெற்ற

(துரோகியே...)

## 126. சன்மிட்டை சொல் கந்தார்த்தம்

இராகம் : மத்தியமாவதி

இமிர் வண்டினை நாணெனப் பூட்டி சேணாட்டு

அமர் செய்ததிவெனறிகள் பெறுமதன் மூட்டு

மமர்நோயினிலயர்வது நினைந்திடாமற் பல

எமனென்னிட கொடுமையாயெண்ணிரு கலைநில

வெறிக்குதென் செய்வேன் – உயிரைமிக

மறிக்குதென் செய்வேன்

பொறைக்குவலயத்தினிற் பெண்பழியிதுவென்று

பொறுத்தி ... கனல்போலே கொளுத்தியின்று

## 127. சன்மிட்டை சொல் சீசபத்தியம்

இராகம் : புன்னாகவராளி

அரவ பூஷணனிடமமர்ந்து வைகுவதி ...

வாகினாயோ

தரும நிறை நீரினுடன் மருவியு – மதனறன்மை ....

மார்தான் செய்பவமோ

காவுதனைக் கொண்டென்ன துயருறச் செய்வதுங்

காசினியிலே யுனக்கழகதாமோ

இரவினிற் பெண் தோஷமென்று சற்றெண்ணாதெரிப்பது

முந்தனுக்கிணையில் திறமோ

சந்தமார் நின் குலத் தலைவன் மீதில்

பந்தமாய நின் கதிர்ப்பண்பு காட்டி

எந்தனைப் புல்க செய்தாலினிமையாய் சொல்

அந்த மாயப் பெருமையை யடைகுவாயே

அரவ பூஷணன் – பாம்பை ஆபரணமாக அணிந்த சிவபெருமான்

## 128. சன்மிட்டை சொல் விருத்தம்

கழைமுறிக் கயமெனக் கங்குல் கொண்டவன்

தழைமலர்ச் சாந்தொடுத் தாவல் தந்திட

விழைவெனும் புணரியில் வீழு மீதில்வெவ்

வழலெனக் கொளுத்துமம் புலிலயை வைவனே

## 129. சன்மிட்டை சொல் சந்திர தூஷணை

இராகம் : முகாரி

சந்திரா வுனக்கு தரித்த நாமத்தில்

சுந்தரத் தண்சுடர் சூழ்கதிர் என்று

விளம்புவ தகன்று வெஞ்சுடர்க் கிரணனென்

றளவிலா துரைக்கவு மாச்சடா பாவி

தேவர்கள் கடைந்த திருப்பாற் கடலில்

மூவரும் வெருவ முன்னுத்த தொலி செயப்

பேசரும் விடத்துடன் பிறந்ததா லன்றோ

ஆசையில் ... கிறாய்

*மதியினிற் றானே வளர்வுந் தேய்வும்*

விதியுனக் கிருக்க வெங்கனல் போலே

காய்வதைப் பார்த்தால் காசினிதன்னில்

தேய்விலாவு வுருவாய்த் தினமு மிருந்தால்

வரவர அனலு மலிந்ததி கமதாய்ப்

புருஷனை யகன்ற பூவையர் தங்கள்

மெய்யெலாம் வேக விரைவுடன் கொளுத்தி

மைய லாளக மங்கைய ருயிரை

அபகரி யென்றையனு மறிந்து

சுபகார மாதர் தூய நற் றவத்தால்

வளர்வுந் தேய்வும் வசமா யுன்றனுக்

களவுடனே விதித்தார் பாவி

... மேலவரென்றும்

*கூர்வாளி ... வழன்று*

வருத்த முற்ற என் மனத்துயர் தீரத்

*திருத்த மாகவே சீக்கிரம் போடா*

### 130. பொது கவி

இவ்வித மாய்ச் சன்மிட்டை
நவ்வியும் வாடும் வேளை
செவ்வி யயாதி ராஜன்
அவ்வனம் வருகின் றானே

### 131. யயாதி ராஜன் சந்தன வனத்திற்கு வருகிற பொது விருத்தம்

செண்பக நாக சோகு செழித்தமா தவிமா சூதம்
வண்மைசேர் கடுக்கை முல்லை வாட்சிபா திரிவ ருக்கை
நண்ணுந்சந் தனக்கா விற்கு நரபதி யயாதி கல்லில்
தண்மதி யினிலு லாவத் தருக்குடன் வருகின் றானே

வசனம்

அகோதெப்படியென்றால் செண்பகம், புன்னை, அசோகு, குருக்கத்தி, மா, கொன்றை, முல்லை, இருவாட்சி, பாதிரி, பலா, சந்தனம் இது முதலாகிய விருட்சங்கள் நெருங்கிய சந்தனப் பூங்காவனத்திற்கு யயாதி மகாராஜன் பூரணசந்திரிகை வேளையில் வேடிக்கையாக உலாவுகிறதற்கு வருகிற விதம் காண்க:

## 132. யயாதிராஜன் சந்தன வனத்திற்கு வருகிற தரு

இராகம் : சாவேரி   தாளம் : அடதாளம்

அரசர்க்கரசர் புகழ்
உரசத்திய நெறிதிகழ்
அண்ணல் யயாதி வந்தான்
சரசத்திலிணையற்ற மதனொத்தவெழில்பெற்ற
தலைவனாமதி மரபுவதிபதி
கலைவலார் துதிசெய் சற்குண நிதி

(அரசர்க்கரசர்...)

சிரத்திற்றரித்திருக்குமகுடத்தினொளி கண்டு
தினகரனுங் கொண்டாட
திருத்தோளினிற்றுன்னும் பருத்தபுஜ கீர்த்தி கண்டு
பகைவருளம் வாட
திரைத்தண் புவியையொத்த வுரத்தி லாரத்தைக்கண்ட
திருநிகர் மாதர்களுந்தேட
வருத்துங் கலியகற்றுங் கரத்தைக் கண்டந்தரம் வயங்...
குலந்துதித்தோட
அருத்தியுடன் பஞ்ச அக்கினி நடுவில் நிற்க
அஞ்சிடா மனவருந்தவர்களாசீர்வதிக்க
கருத்தினுண்மையைக் கலைமதிசேய் மதிக்க
காவலர்களுனிமாவலுடன் மதிக்க
காசினியாளுமொய்யாரன் செறி
தேசினிலுயரும் வசீரன்

கந்தறு மந்திரர் தந்திரரிந்திரர்

வந்து நெருங்கி புகழ்ந்திடு – சுந்திரன்

வளமுற்று யர்ககனத்தினை அளவுக்கடி

பொழிலிற்புனை

(அரசர்க்கரசர்...)–

133. சன்மிட்டை யயாதியிடம் வருகிற பொது விருத்தம்

சந்தனப் பூங்கா விற்குள் தகைபெறு மன்னன் பூர்ணச்

சந்திரிகை வேளை தன்னிற் றனித்துவந் துலவும் போது

சுந்தர மாரன் போரிற் சோர்ந்தசன் மிட்டை வேந்தன்

வந்ததை யறிந்தே யாங்கு மகிழுடன் வருகின் றாளே

வசனம்

அகோதெப்படியென்றால், யயாதி மகாராஜன் சந்தனப் பூங்கா வனத்தில் பூரண சந்திரிகை வேளையில் வந்து வேடிக்கையாக உலாத்திக் கொண்டிருக்கும்போது மன்மத யுத்தத்திலே மெலிந்து வருத்தப்பட்ட சன்மிட்டையானவள் யயாதி மகாராஜன் வந்தாரென்று அறிந்து அவரிடத்திற்கு வருகிற விதங்காண்க:

134. சன்மிட்டை வருகிற தரு

இராகம் : பந்து வரானி தாளம் : ஆதி தாளம்

தெரிவை சன்மிட்டை வந்தாள்

நற்–கரருகினை விலைபெறுமழகிய மலை

தெரிவை சன் மிட்டை வந்தாள்

திருநிறை யிடபன்மன் செய்தவத்தால் மிகுந்த
செருக்குள்ள தரணியிற் றருக்குடனேகந்த
மருவும்போது களவிழ் வளமுறு மரவிந்த
மலரிலுதித்த திருமாதெனவே பிறந்த

(தெரிவை...)

எண்டிசையோர் மகிழுந் தொண்டைக் கனிவாயினில்
இயம்புமிங்கித மொழியும்
எழுதினது போலப் பழுதிலாப் புருவமும்
இணையயிற்போன்ற விழியும்
*அண்டருங் கண்டிடிலதிக மையல் மீற*
அழகின் மிகுந்த மாதென் றனங்கனிரதி கூற
விண்ணின் மின்னலென நுடங்கிடைகளும் வீற
விளங்கு முகத்திற்கு வெண்மதிவொளி மாற

(தெரிவை...)

கறுத்த மெல்லிய கூந்தலும்
காம்புறழுகுவவுத்தோள் – ஓங்குமெய்யையுங் கண்டாற்
காதல் கொள்ளுவரேந்தலும்
பகரவரிய வொயிலெகின் நாணு நடையும்
பண்புபெறு மரம்பைத் தண்டை வெலுந் தொடையும்
அகலல் குலுக்குப் பன்னகப் படமு மிடையும்
அழியக் கரமதில் கல்கலெனத் தொடியும்

(தெரிவை...)

பாவலர் சொலும் வடமாவரையென வோங்கி
பருத்தயோதரமும்

பழுமரமிலையென வெழின்மிகு சடரமும்

பங்கய மலர்க்கரமும்

மேவுந் கன்னத்திற்கு கண்ணாடிகள் தோற்கும்

விரை செண்பக மலரினை வென்றிசெய் மூக்கும்

தாவும் பிறை சிலையைத் தனி நுதலே தாக்கும்

தாளிற்றண்டை சிலம்பு தரங்கமெனவே யார்க்கும்

(தெரிவை...)

### 135. சன்மிட்டை யயாதிக்கு போற்றி சீச பத்தியம்

காசினியை யோர்குடையில் நேசமுட னாள்கின்ற
காவலா யுன்றனி ணை கழல்கள் போற்றி
காமரதி புகழெழிற் பூமனேநின் செழிய கஞ்ச
மலரஞ்சுமிரு கழல்கள் போற்றி
கற்பகக் கோவு மிக ழற்புதப் போகமுறு காமனே யுனது
கழலிணைகள் போற்றி
கருதல ... வென்று வய மருவலர்த் தெரியல் புனை
கர்த்தனே யுன்றனுயர் கழல்கள் போற்றி

கருந்தடக் க டல் சூழ முலகு ளோர்க்கு
வருந்துயர கத்திமநு நீதி யோடு
திருந்தவர சாட்சிபுரி செம்ம லேறே
பொருந்திய வனப்பு பொன்னடிகள் போற்றி

### 136. சன்மிட்டைக்கு யயாதி வாழ்த்து கவி

போற்றியென் றுரைத்த பூவையே வாழி
ஆற்றல் சேர்மா தரசியே வாழி
தோற்றரு மருங்கு தோகையே வாழி
சாற்றரு மிடபன்மன் தனையே வாழி

### 137. சன்மிட்டை யயாதி ராஜனுக்குச் சொல் விருத்தம்

விற்பொழிச் சந்திர வட்ட வெண்குடை வோர்நி ழற்குள்
மற்பொழில் யாவுங் காக்கும் மாட்சிமன் னவரே கேளும்
கற்பெழி லினின்மி குந்த கன்னிகை யான என்னை
பொற்பொழி வியும ளாவும் பொழிலினிற் சேரு வீரே

வசனம்

கேளும். உலகமெல்லாம் ஓர் குடை நிழலில் ஆள்கின்ற மகாராஜனை! பதிவிரதா தருமத்திலும் ரூப லாவண்யத்திலும் அறிவினிலும் சிறந்த அடியாள் பேரில் கிருபை செய்து, இந்தப் பூங்காவனத்தில் என்னுடைய காம விகாரந் தீரும் படிக்குச் சேர்ந்தணைய வேணும் இறாஜ பரமேஸ்வரா!

### 138. யயாதி ராஜன் சன்மிட்டைக்குச் சொல் விருத்தம்

குரை செறி பரவை சூழு மிந் நாட்டிற்
கூறுமைம் புலமையும் வாட்டி
வரை செறி ... வணங்குமா மேலோர்
வழுத்திய காதல் மூன்றினிலும்
புரை செறி பரத்தை விழைவினை மிகவும்
புன்மையென் றிகழ்ந்திருப் பதினால்
மரை செறி வதனப் பூவையே யுன்னை
வனத்தினிற் புணருவ தழகோ

*குரை – ஆரவாரம்; வரை – மலை*
*பரவை – கடல்; வழுத்திய – சொல்லிய*
*புரை – குற்றம்*
*மரை – தாமரை*

வசனம்

கேளாய் சன்மிட்டையே! கடன் சூழ்ந்த உலகத்தில் மெய், வாய், கண், மூக்கு என்று சொல்லப்பட்ட ஐம்புலனையும் அடக்கி மேலான பரத்தை வணங்கும் பெரியோர் சொல்லிய மூவாசையிலும் குற்றமே ஒரு வடிவமாக வந்த பரத்தையருடைய ஆசையை மிகவும் புன்மை என்று இகழ்ந்து சொல்லி இருப்பதினால் உன்பேரில் நான் ஆசை கொண்டு இந்தப் பூங்காவனத்தில் உன்னை மருவி அணைவது அழகோ? தருமமோ? நீதியோ சொல்வாய் பெண்ணே!

139. சன்மிட்டை யயாதிக்குச் சொல் ஐம்பை தரு

தெவ்வரினங்களை மண்ணிற ... விழவே தாக்கும்
நவ்வி நோக்கியர் மயல்லகொள் செவ்வியுள மன்னா
முன்னமொரு நாளறிவு புன்மையினாலிந்த ...
மின்னடையாருக் கடிமை துன்னி

தாதியாகினனல்லாற் பூதலத்தி லெனக்குநிக
ரொத்த வொரு மாதருண்டோ சீதானோ மகிப
தூவியன்ன நடையை வென்ற தேவயானையினுடனே
ஆவலுடனே நீருமேவி மனமகிழ்ந்து
எந்தனைப் பாராமுகமாயிச்சிந்தை தனிலெண்ணுவது
முந்தனுக்குத் தருமமோ மொழிந்திடுவிர் மன்னா
தருக்குடனே யுமதுபெரு வரைக்குநிகர் புயந்தழுவ

விருப்பமிகக் கொண்டு வந்தேன் செருக்குடனே யிந்த
சாந்த வனத்தி லென்னைச் சேர்ந்துமிக மனமு மகிழ
கூர்ந்திடவே செய்தால் நற்பாந்த முட்டனுமது
இத்தலத்திற் குறைவில் மெத்தவுங் கற்பிலுயர்
பத்தினியதாகுவன் யான் சித்த மகிழ்வீரே

பாந்தம் – இணக்கம்

### 140. யயாதி சொல் விருத்தம்

கொங்கலர்த் தொடை புணைந்த கோதை சன் மி டை யென்னும்
மங்கையே யுலகை யெல்லாம் வண்மையா யரசு செய்வோன்
பாங்கிலா நீதி தப்பி கனியிதழ் விழைவே னானால்
எங்குமென் கீர்த்தி நைந்து எனைமிக விகழு வாரே

### வசனம்

கேளும். வாசனை பொருந்திய மலர் மாலையணிந்த அளகபாரத்தையுடைய சன்மிட்டையே! பூலோகமெல்லாம் ஒரு குடையிலாளப்பட்ட சக்ரேஸ்வர னாகிய நான் மநு நீதி தப்பி உன்னையணைந்து சிவந்த அதரபானம் பண்ணுவதற்கு விரும்புவேளேயானால் உலகம் எங்கும் எனது சிர்த்திப்பிரதாபம் நீங்கி என்னை நகைப்பார்களே பெண்ணே.

அளகம் – கூந்தல்

## 141. சன்மிட்டைக்கும் யயாதிக்கும் தர்க்கம்

இராகம் : கல்யாணி

சன்மிட்டை

மணிமுடியரசர்கள் கோவே – மலர்

வனத்திலே என் மோகந்

தனைத் தீர்க்குந்தேவே

(மணிமுடி...)

மாரனு மென் மீதினிற் சீறி – மரு

மலர்க் கணையைச் சரமாரி – யாக

வருஷித்திட மையல் மீறி – நான்

மருவ வந்தேனுமைக் கோரி – வெகு

வராமுடனே நீர்

வலிவாகப் புல்லியென்

கோரந்தனை நீக்குங்

குவலயத்தைக் காக்கும்

(மணிமுடி...)

## 142. யயாதி ராஜன் சன்மிட்டைக்குச் சொல் தரு

மாதரசே யுனைச் சேர்ந்து – நான்

மருகேன் மிகமகிழ்

தருகேன் களி கூர்ந்து

மாதரசே யுனைச் சேர்ந்து

மறைகண் முழுதுணர் வெள்ளி முன்னே

வழுத்திய வாய்மையைத் தள்ளி – தான

வரின் மங்கையான வாய்க்கொள்ளி யான

மங்கையைச் சேர்ந்திடிற்றுள்ளி – நனி

நிறைகிற சீலமும்

பொறைகளும் புக்கிடும்

நீதியிதே சொன்னேன்

காதலினை யுன்னேன்

(மாதரசே...)

வெள்ளி – சுக்கிரன்
*சீலம்* – நல்லொழுக்கம்

### 143. சன்மிட்டை யயாதிக்குச் சொல் தரு

பிரம குலத்திலுதித்து – வீறும்

பிராமணராவினினத்து – மற்ற

பேருயிர் போகுமிடத்து – மொவ்வி

புருஷன் மணஞ்செய்கணத்து – மிக்க

தருமமுடன் சொன்ன

சொற்றவரினாலும்

தாழ்வொன்றிலை என்று

சாற்றுவதாலின்று

(மணி...)

### 144. சன்மிட்டைக்கு யயாதி சொல் தரு

இப்படிச் சொல்வதோ ஞாயம் – மகிழ்ந்
திசைவதோ மன்னர்க்கு தூயம் – வீணாய்
ஏன் பல வுரைக்கிறாய் நேயம் – சேர்
எண்ணில் வருமே அபாயம் – அதனால்
மைப்படியுங் கருவாட்டங் கண்ணியே
மர்மமில்லாமலே மையலு நண்ணியே

(மாதரசே...)

### 145. சன்மிட்டை யயாதிக்குச் சொல் தரு

ஆதாரமின்றி வந்தேனே – வலிய
அணைபென்றுரைத்தேனே நானே – செய்த
அருந்தவமென்றெண்ணிக் கோனே – நீரும்
அணையாமல் நிற்பதுந்தானே வந்த
சீதாதேவிதனைக்
காலாலுதைத்திட்ட
செய்கையைப் போலாச்சே
வையத்திற் சொல் ஏச்சே

(மணி...)

### 146. யயாதி சன்மிட்டைக்குச் சொல் தரு

மன்னனிடபன்மன் பெற்ற – மட
மங்கையே ... லங்கங்கற்ற – பொல்லா
வஞ்சியர்சேர வெனையேற்ற – இங்கு
வந்தவளே போ ... ற்ற – முறு
மின்னிலத்திலுறை
மன்னர்களாதி
நோக்கிலிசை யேகும்
வாக்கில் வசையாகும்

(மாதரரே...)

### 147. சன்மிட்டை யயாதிக்குச் சொல் தரு

அலர் மலர் விரைவினிற் கண்டு – மிக
அகமகிழ்வு கொள்ளும் வண்டு – போல
அதிபனின் வரவுளங் கொண்டு – உம்மை
அணைய வந்தேன் மலர்ச் செண்டு – நிகர்
முலைகளழுந்தவே மலைநேர் புயத்தினால்
முதமுடன் புல்குவீர் மதன் பகை வெல்குவீர்

(மணி...)

### 148. யயாதி சன்மிட்டைக்குச் சொல் தரு

புல்குவீரென்று நியோதும் – அந்த
புன்மைக்குள்ளாகே எனப்போதும் – பெரும்
புடவியிலுன்னைப் போல மாதும் – சற்றும்
புகல்வரோ யிப்படிவாதும் – முன்னோர்
சொல்லு நாணமடம்
அச்சம் பயிர்ப் பென்னும்
நல்ல நீதி நீக்கி
புல்ல நினைவுன்னும்

(மாதரரே...)

முதம் – உவகை
புல்குதல் – தழுவுதல்
புன்மை – சிறுமை
புடவி – உலகம்

### 149. சன்மிட்டை யயாதிக்குச் சொல் கட்டளைக் கலிப்பா

விஞ்சு சீருடனே யிருப்பாருக்கு வீறு வாழ்வை
யுண்டாக்குதன்மேதகு
செஞ்சுநற்குரவர் கடனென்றலோ – செப்பும் வாய்மையிலும்

புகழில்லையே

நெஞ்சிரங்கிய வேழையை மிக்கவே – நேசமாக

விரட்சித்திடிலுமக்

கெஞ்சலிற்றுதியும் வனப்பாண்மையு – மெய்துதற்கொரு

மாசிலையேந்தலே

வசனம்

கேளும் மகாராஜனே! மிகுந்த சிறப்புடனேயிருக்கிற பேர்களுக்கு இட்டமான வாழ்வு உண்டாக்குகிறது பெரியோர்களுக்குக் கடமை என்று சொல்லுவதிலும் கீர்த்தியில்லை. தளர்ந்த மனதுடைய ஏழையாகிய என்னை மேன்மை பெறத்தக்கதாய் கிருபை செய்து இரட்சித்தீரேயாகில் உமக்கு குறைவில்லாத கீர்த்தியும், அழகும், பராக்கிரமும் சிறப்பு கிடைக்கிறதற்கு யாதொரு குற்றமுமில்லை மகாராஜனே.

150. யயாதி சொல் விருத்தம்

இராகம் : முகாரி

அரிவைநீ சொன்ன சொற்கேட் டனலிடு மெழுகு போல

உருகுது சிந்தை சுக்கிர னுயர் பெண்ணை வதுவை செய்து

தருகும் போ தினிதாய்ச் சொன்ன தனி மொழி மறக்க மாட்டே

மருகுழ லாளே யுன்றன் வாழ்மனைக் கெய்து வாயே

வசனம்

கேளாய் சன்மிட்டையே! நீ சொன்ன சொல்லைக்கேட்டு என் மனது அக்கினியில் விழுந்த மெழுகுபோலே உருகுது. ஆதியிலே சுக்கிர பகவான் தேவயானையை எனக்குக் கலியாணஞ்செய்து கொடுத்தபோது, உனது தாதிகளாகிய ஆயிரம் பேரையும் உன்னையுங் காண்பித்து இவர்களுக்கு ஆடையாபரணம், போசனம் இதுகள் நடத்துகிறதல்லாமல் இவர்களுடைய போகம் அனுபவிக்கக்கூடாதென்று சொல்லியிருக்கிறார். ஆதலால் அவருடைய வாய்மையைக் கடந்து உன்னைச் சேருகிறது தருமமல்ல. உனது அரண்மனை போய்ச்சேருவாய் பெண்ணே.

151. சன்மிட்டை சொல் கொச்சகம்

எவ்வளவு நீதியெடுத் தியம்பிடினும் ஓர் மனதாய்ச்
செவ்வையல வென்று மிக செப்புகிறா ரென்ன செய்வேன்
கவ்வையிலு யர்ந்தயெனைக் காக்கா திருந்திடிற்பின்
வெவ்விரகந் தனில் வீணாய் மெலிந்தே வருந்துவேனே

வசனம்

ஆ தெய்வமே! எத்தனை நீதி மார்க்கங்களை எடுத்துச் சொல்லியும் ஒரே மனதாய் உன்னைச் சேருகிறது நன்மையல்லவென்று சொல்லுகிறாரே. துன்பத்திலேயுழலுகிற என்னைக் காப்பாத்தாமலிருந்தால் கொடிதான விரகாக்கினியிலே எத்தனை நாளைக்கு இப்படி வருத்தப்படுவேன் தெய்வமே!

### 152. சன்மிட்டை புலம்பல் தரு

இராகம் : கௌளிபந்து   தாளம் : ஆதி தாளம்

மந்தரமனைய சுந்தரயயாதியெனும் மன்னனைப்
புணரயானுந் தெய்வமே
வாதுகளனேகமாயான் நீதமொடு சொல்லியதை மனதிற்
கொள்ளாமலையோ தெய்வமே
கந்தறு குவலயத்திலெந்தனை நகைப்பரென்று கடந்து
விளம்பினாரே தெய்வமே
காவலனெனும் யயாதிக் காவலைத் தாரதுனக்கு கடும்
பகை புரிந்தேனோ தெய்வமே
ஏதமிற்றேவயானையின் காதலரை யான் புணர்ந்தம்
மிறைவிக் கிணையாகவே தெய்வமே
எண்ணிவாதித்ததிற்பல னண்ணிடாமலே விழற்கிறைத்தாற்
போலாகினேனே தெய்வமே

மாதவத்திலே சிறந்த தீதறு குரவர்களை வசை
சொன்னேனே வீணாகத் தெய்வமே
வந்தியென்று கந்தமலர் கொந்தளக சுந்தரிகள் வசை
சொல்ல விதித்தாயோ தெய்வமே
தாதுறு மலர்க்கணை யென்மீதினலனேகம் வந்து தாக்கிறதே

யென்செய்வேன் தெய்வமே

சந்திரன் கிரணம் வீசிவந்தனலாய் காய்கிறானே

தையலாளென்செய்வேன் தெய்வமே

தாதியாய்ப்பணி செய்துய்ய ஆதியிப் பிரமதேவன்

தலையிலெழுதினானோதெய்வமே

தற்பரனடி துதிக்கு நற் புகழ் வரதராஜன்

தமிழுக்ககமகிழுற தெய்வமே

## 153. யயாதி சன்மிட்டைக்குச் சொல் விருத்தம்

ஒண்மைசேர் பொருளுங் கல்வி யொதுங்குங்கா லத்தில் வேறு

வண்மைசேர் முயைார் மீதில் மையலுங் கொள்வா ரென்று

திண்மை சேர்ந் திருந்த அவ்வை செப்பிய படியால் யானும்

வண்மைசேர் குழலா யுன்னை மேவிடேன் மனை புல்கு வாயே

### வசனம்

கேளும் சன்மிட்டையே! அறிவு, பொருள், கல்வி இவைகளெல்லாம் தன்னைவிட்டு நீங்கிப்போகிற காலத்தில் தன் மனைவியை விட்டுப் பிறன் மனைவிகளின் பேரில் ஆசை வைப்பார்களென்று அவ்வை சொல்லியிருக்கிறபடியால் நான் உன்னைச் சேரேன். உனது அரண் மனைக்குப்போய் சேருவாய் பெண்ணே.

## 154. சன்மிட்டைக்கும் யயாதிக்கும் தர்க்கம்

*இராகம் : சங்கரா பரணம்   தாளம் : அட தாளம்*

அரண்மனை போவென்ற முரண்பெறு மதிபனே
அணைந்திட லுமக்கென்ன கோது – என்னைப்
புணர்ந்திடா திருக்கத்த காது
திரண்ட புயங்களிரண்டினாலுமென்னை
சேர்ந்து தழுகுவீர் மன்னா

## 155. யயாதி சொல்

தழுகுவீரென்று நி பழுதுலாவச் சொல்லும்
சங்கதிக் குட்பட மாட்டேன் – உன்னைச்
செங்கையினாற்றொட மாட்டேன் சற்றும்
வழுவுதலிற் பாகுமொழியினாளே யிந்த
வார்த்தை யியம்பாதே பெண்ணே

கோது – குற்றம்

## 156. சன்மிட்டை சொல் தரு

இயம்பாதே யென்று நீர் நயம்பெறவே பேசி
யெழிலாயுபாயமாய்க் கூட்டி – பூம்
பொழிலினிலே வழிகாட்டி – உந்தன்
வயமிகு மாண்மனையியலுடன் போமென்று
வழுத்தாமலிருப்பின்மையல் தீருமே

### 157. யயாதி சொல்ஷ

மையல் தீரு மென்று தையலே நீ சொல்லும்

வார்த்தைப்படி நடக்கேனான் மெய்

பார்த்தீபர் நகைக்கக் கெடுக்கேனே – எந்தனை

துய்யவாரிச மலர்க்கையினாற் புல்லியுன்

துணையிள முலைப் போகம் வேண்டேன்

பார்த்தியர் – வேந்தர்
துய்ய – பரிசுத்த
வாரிசும் – தாமரை

### 158. சன்மிட்டை சொல் தரு

இளமுலைப் பேகம் வளமுடன் வேண்டேனென்

றியம்பாதீர் மன்னர்கோ மானே – நின்மேல்

மயாகினேன் மட நானே – என் மேல்

பிளிர்முடி மதன் கணை யளியுடன் எய்கிறான்

மோகத்தைத் தீரும் என் கோவே

### 159. யயாதி சொல் தரு

மோகத்தை தீரென்றன் பாகச் சொல் பெண்ணே யென்

மொய் குழலி லாட்குத்தாதி – உன்னைச்

சையோகஞ் செய்யிற் பிரக்கியாதி கெட்டு

வாகைமாலை சூடனேக ராஜர்களும்

வசை சொல்லுவாரெனைப் பூமேலே

### 160. சன்மிட்டை சொல் தரு

வசை சொல்லுவாரென்று – இசைவாயுரைக்கிறீர்
மன்னனிடபன் மனிட்டை – செய்து
வண்ணமாய்ப்பெற்ற சன்மிட்டை இந்த
திசையிரு நான்கிலும் அசைவிலாப் புகழ் பெற்ற
தெரிவையர்க்கரசியும் நானே

### 161. யயாதி சொல் தரு

அரசியானாலுமென்மின் – அரசிக்கு பாங்கியாய்
அடிமை வேலைகளை நீ செய்கிறாய் – இங்கு
கடிதினிலே வந்து நைகிறாய் – கூடி
சரசஞ் செய்வேனென்று திறமுடன் சிந்தையில்
சற்று நினைக்க வேண்டாம் பெண்ணே

### 162. சன்மிட்டை யயாதிக்குச் சொல் விருத்தம்

நினைத்திட வேண்டா மென்ற நிருபர்க ளரசே மிக்க
சினத்துட னேயுரைத்து சேர்ந்தணை யாமற் றள்ளி
மனைத்தனிற் போகு வாய் வெம் மங்கையே யென்றா லெந்தன்

தனித்த வெவ் விரகந் தன்னைச் சகித்திட லாமோ சொல்வீர்

வசனம்

கேளும். மருவியணைவேனென்று சற்றும் நினைக்க வேண்டாமென்ற ராஜபரமேஸ்வரா! என்னைச் சேர்ந்தணைத்து விரகத்தைத் தீராமல் தள்ளிவிட்டு உனது அரண்மனைக்குப் போவேன்று கோபத்தோடு சொன்னால் என்னிட விரகத்தை எப்படிச் சகிப்பேன் மகாராஜனே.

## 163. சன்மிட்டை யயாதிக்குச் சொல் தரு

இராகம் : காம்போதி தாளம் : ஆதி தாளம்

சகிக்கயெந்தனால் வசமோ கழை
தனுவுந் கிள்ளைத் துரகம்
எனுங்கொள் வேள்செய் விரகம்
சகிக்க எந்தனால் வசமோ –
அரிக்கின்ற முடிவைகும் அவனிபுகழ் பிரக்கியாதா
அனங்கனென்ன வனப்பமரு நன்னெறி போதா

(சகிக்க...)

அனல் மதியுமெறிக்குதே – எந்தனகத்தில்

ஆசை அதிகரிக்குதே
புனல் செறியுந்தரங்கப் புணரியார்ப்பரிக்குதே

பொருவிலா மழை மதகரியிருள் நெருக்குதே

(சகிக்க...)

வேயச் சிலைதனை நாட்டுறான் சுரும்பென்னும்

வியல்பெறு நாண் பூட்டுறான்

காயமலர்க்கணைவிட்டு – காயமதை வாட்டுறான்

காமாக்கினையை மிக – கருத்துடன் மூட்டுறான்

(சகிக்க...)

விரை மலருங் கருகுதே

செய்யவாயில்தாது – தேன்களும் பெருகுதே

செப்பரிய மையல் மெத்தவே தருகுதே

(சகிக்க...)

### 164. சன்மிட்டை யயாதிக்குச் சொல் விருத்தம்

தடவரைபோற் றிரண்ட புய வேந்தே பண்டு தானவனு

மூர்வசியைக் கவர்ந்த போதம்

மடந்தை யபயம் மபய மென்றே வருந்தி யலறீடு

தொனியும் மரபில் வந்த

அடல் மிகுந்த புரூர வெனுமண்ணல் கேட்டே யன்ற

சுரன் றனை வாங்கி யணங்கை மீட்டான்

புடவிபுக ழும்மரபில் வந்த நீரும் புல்குவீ ரெந்தனை

யாட்கொள்ளு வீரே

அபயம் – அடைக்கலம்

அடல் – வலிமை

புடவி – அகில

வசனம்

கேளும் மகாராஜனே! முன்னாளையிலே ஒரு அசுரன் தேவலோகத் திற் புகுந்து ஊர்வசியைச் சிறையெடுத்துக் கொண்டு போகும்போ து ஊர்வசியானவள் அலறி அழுது அபயம் அபயம் அபயம் என்று முறையிட அந்த சத்தமானது உமது குலத்திலே யுதித்த புரூர மகாராஜன் கேட்டு, அந்தக் கொடிய இராக்ஷதனை செயித்து ஊர்வசியைச் சிறைமீட்டுக் காப்பாத்தினார். அந்த குலலத்திலே வந்த நீர் அது போல, மன்மதன் செய்த கொடூரமான உயித்தியத்திலே மெலிந்து அலறிப்புலம்பி உமது பாதார விந்தமே அடைக்கலமென்று வந்த என்னை மருவி இன்ப சுகம் தந்து இரட்சிக்க வேண்டும் மகாராஜனே.

## 165. சன்மிட்டை யயாதிக்குச் சொல் விருத்தம்

அக்கினியை மொண்டுமிட லம்புலியு மெரிக்க வெழி லனங்கன் போரில்

மிக்கமலர்ப் பகழியினால் எய்யச்ச ரீரமெலா மெலிந்து வாடி

தக்கவுந்தன் பாதமதிற் றஞ்ச மென்று வந்தடைந்தேன் தயவு செய்து

சொக்கு மெந்தன் துயர் தீராது துரப்பு நு நன் னெறி தானோ சுகுண வேந்தே

வசனம்

கேளும். இராஜ பரமேஸ்வரா! அக்கினியை மொண்டு கொடிதான சந்திரன் வீசவும். மன்மதன் உயிர்த்தியத்தில் முல்லை, அசோகு, முளரி, மாம்பூ, நீலம் என்னும் மலர்க்கணைகளாலெய்யவும், சரீரமெல்லாமெலிந்து வாடி,

உம்முடைய சரணார விந்தத்தில் அடைக்கலமென்று வந்தடைந்தேன். கிருமை செய்து என்னைச் சேர்ந்தணைந்து காம விவகாரத் துயரத்தைத் தீராமல் தள்ளிவிடுவது நீதிமார்க்கமோ சற்குணத்தையுடைய மகாராஜனே

அம்புலி – சந்திரன்
பகழி – அம்பு
துரப்பு – துரத்துதல்

### 166. யயாதிராஜன் சொல் விருத்தம்

எத்தனை நெறிக டன்னை யெடுத்துரைத் தாலுந் தாதி
அத்தனை யுந்த டுத்தே அறநெறி பகரு கின்றாள்
கத்தனே யடியார் நெஞ்சக் கருத்தக லாதி ருக்கும்
நத்தனே யிவ்வி திக்கு நானென்ன செய்கு வேனே

வசனம்

அரிகரி வாசுதேவா! நான் எத்தனை நீதி மார்க்கங்களை எடுத்துப் போதித்து சேரப்போகாதென்று சொன்ன போதிலும் அதற்கெல்லாம் தகுந்த தரும சாஸ்திரங்கள் சொல்லித்தடுத்துவிட்டு என்னைச் சேர வேணும் என்று ஒரே பிடியாய்ப்பிடித்துச் சொல்லுகிறாளே. இந்த விதிக்கு நான் என்ன செய்வேன் அடியார்களிடத்தில் நீங்காதிருக்கும் நாராயணமூர்த்தி!

## 167. யயாதிராஜன் மகா விஷ்ணுவை நினைத்து இரங்கல் தரு

இராகம் : முகாரி                                                    தாளம் : அடதாளம்

நாற்றிசைப் புகழுமாதி – மூர்த்தியெனவே திகழும் – நாரணா
பரிபூரணா – பொல்லா
நஞ்சுறு பாந்தளின மீதிற் – றுஞ்சிடுமநந்த வைகுந்த – நாரணா
பரிபூரணா – இந்த
நாள் சனியால் சந்திரிகை – வேளையினில் விந்தையதாய் – நாரணா
பரிபூரணா – இங்கு
நானயர்ந்திடவோயிந்த – கானுயர் வனத்திலே – நாரணா
பரிபூரணா – விரைவில்
நண்ணினேனிப்படி யாமென் றெண்ணிலேனுளத்தினில்யான்
நாரணா பரிபூரணா – வந்த
நாழிகைதனிலே யிந்த தோழி சன்மிட்டை யுணர்ந்து
நாரணா பரிபூரணா – மிக்க
நலிவுடனே வந்த என்னை வலியுடன் புண ரென்றாளே
நாரணா பரிபூரணா – ஐந்து
நறுமலர்ப் பகழியோன் வெஞ்சரமதில் மெலிந்து வாடி
நாரணா பரிபூரணா – உந்தன்
நளின பாதத்திற் புகுந்தேன் தளர் விடாமற்காரென்றால்
நாரணா பரிபூரணா – வெகு
நாட்டமுடன் காருமென்று கேட்டிடுமேழையர் தம்மை
நாரணா பரிபூரணா பொல்லா

நாயகன் சுக்கிரன் சொன்ன வாய்மையை யிகழ்ந்து யானும்

நாரணா பரிபூரணா – பிற

நங்கை சன்மி டை யுடனே பொங்கமாய்க் கலந்தணைந்தால்

நாரணா பரிபூரணா – துய்ய

நடலையாய்த தள்ளுவது மிப் புடவியதிலழகோ வென்றாள்

நாரணா பரிபூரணா – ஞான

நற்றவர் புகழுஞ் சுக்கிரன் மெத்தவுஞ் சினங் கொள்வாரே

நாரணா பரிபூரணா – மருள்

நவ்விநோக்கியாள் துயரை எவ்விதமகற்றுவேன் யான்

நாரணா பரிபூரணா – நாளும்

நலமிகுஞ்சீர் கருணர் குலதிலகனும் பணி பொற்பாத

நாரணா பரிபூரணா

பொங்கமாய் – மகிழ்ச்சியால்
நடலை – வஞ்சனை
புடவி – பூமி
நவ்வி – மருண்டமான்நோக்கு

## 168. சன்மிட்டை யயாதிக்குச் சொல் விருத்தம்

இராகம் : கெண்டா

நாரணா வென்று நீரும் நாடிநொந் திரங்கி நின்றால்
கோரமாங் காமத் திற்கு கோதை நா னென்ன செய்வேன்
பூரண மாக யானும் புகழ்பெறக் கிருபை வைத்து
மார வே ளினைப் ப ழித்த மகவினைப் பெறச் செய்வீரே

## வசனம்

கேளும் இராஜபரமேஸ்வரா! நீர் ஸ்ரீமன்னாராயண மூர்த்தியைக் குறித்து வருத்தப்பட்டுக் கொண்டிருந்தால், என்னை வருத்தப்படுத்துகிற காம விவகாரத்துக்கு என்ன செய்வேன். அடியாள் பேரில் பூரணமான கிருபா கடாக்ஷம் வைத்து மன்மதனைப்போன்ற ஒரு புத்திரனைப் பெறும்படி தயவு செய்யவேணும் மகாராஜனே.

கிருபாகடாக்ஷம் – அருட்பார்வை

## 169. சன்மிட்டை யயாதிக்குச் சொல் விருத்தம்

இரப்பவர்க டுயர்தீர்க்கப் பஞ்சதாரு மினியவொரு வடிவு
கொண்டு வந்தாற் போல
புரப்பதற்கா யவதரித்து துன்ப நீக்கும் புரவலனே யுமது
திரு வடிகள் போற்றி
விருப்பமுட னே கருப்ப தானப் பிச்சை வேண்டியும தடி
யிலமைக் கலம் பு குந்தேன்
தரைப் புகழ யெந்தனுக்கோர் கருப்பதா னந்தருகுவிர்
தடையின்றி புரிகுவீரே

## வசனம்

கேளும் இராஜ பரமேஸ்வரா! இரந்து உண்கின்ற தரித்திரர்களுக்குத் துயர் தீரத்தக்கதாக கற்பகத்தரு, காமதேனு, சங்கநிதி, பதுமநிதி, சிந்தாமணி என்று சொல்லும் படியாகிய பஞ்ச தருவும் ஒரு ரூபமெடுத்து வந்தாற்போல, உலகத்திலே அவதரித்த யாவருக்கும் வருத்தமகற்றும் அரசனே! சரணம்.

சரணம். ஆசையுடனே ஒரு கர்ப்பதானப் பிச்சை தரவேணும் என்று உமது பாதாரவிந்தத்தில் அடைக்கலமாக வந்தேன். அடியாள் பேரில் கிருபா கடாக்ஷம் வைத்து ஒரு புத்திரதானம் கொடுத்து இரட்சிக்கவேணும் மகாராஜனே!

புரவலன் – காப்போன்

### கட்டியன் வசனம்

இந்தப் பிரகாரமாக யயாதி மகாராஜன் சன்மிட்டையைச் சேர்ந்தனைகிறது தருமம் அல்லவென்று பல பல நீதி மார்க்கங்களெல்லாம் சொல்லியும் கேளாமல் சன்மிட்டையானவள் தர்க்கஞ் செய்து ஒரு கர்ப்பதான பிச்சை தரவேணுமென்று இரந்தேன். கொடுக்கமாட்டேனென்று தன்ளி விடுகிறது தருமமோ வென்று கேட்க, யயாதி மகாராஜன் யோசனை செய்து, ஸ்திரீகளுக்கு வாழ்வு உண்டாக்கி வைக்கிறது பெரியோர்களுக்கு கடனென்னு சொல்லியிருக்கிற படியால், இதனாலே ஒரு தாழ்வுமில்லை என்று யயாதி மகாராஜன் சன்மிட்டையுடனே சேருகிறதற்குச் சொல்லுகிற விதங்காண்க:

### 170. யயாதி சன்மி டைக்குச் சொல் கந்தார்த்தம்

இராகம் : மோகனம்

குயிலே யொயின மேவிய மரகத
மயிலே திகழெழிலுறு விகசித
நயமேவிய நடையள் அதிவித
இயலோடெனை சேர்ந்திடவிங்கித
இறைவியே வாராய் நின்னாசையைக்
குறைவரத் தீராய்

நறை மலரளியினை நாடி வந்தது போலும்

நிறைமதியினைக் கண்ட குரைகடலினைப்போலும்

நெஞ்சமகிழ்ந்திருவோருங் களிகூர

செஞ்சும் பெடையனம் போலுமெனை சேர

(இறைவியே...)

நறை – தேன்; வாசனை
அளி – வண்டு; கருந்தேனீ
குரை – ஆரவாரம்

### 171. சன்மிட்டை சொல் கந்தார்த்தம்

இராகம் : மோகனம்

மதிமா மரபினில் வருஜெகவதி

பதியே கருதலரின மகிழ்நிதி

கதிரமேவிய தயமுனிவரர்மதி

துதியோய் எனை சேர்ந்திட விதுத்தி

தூமனே வாரும் வருத்தும் பொல்லாக்

காமத்தைத்தீரும்

மாமயிலோனு மடவள்ளி நாயகி போலும்

வாம முறுஞ்சசி வச்சிரதரன் போலும்

மகிழ்ச்சியுடன் வந்தன வனத்திலிருவரும்

புகழ்ச்சியுடன் புணர்ந்திடவே பொருவரும்

(தூமனே...)

கருதல் – பகைவர்; மாமயிலோன் – முருகன்; வாமம் – அழகு; ஒளி சசி – இந்திராணி
வச்சிரதரன் – இந்திரன்

## 172. யயாதி சொல் கந்தார்த்தம்

இராகம் : மோகனம்

தடமேருறு தோளுடையாய் பொழி
லுடனே யெனை சேர்ந்திடுவாய் பழி
இடமேயிலை என்றுரைமான் விழி
மடமார்கிளி யொத்திடு பொன் மொழி
மங்கையே வாராய் மருவியுந்தன்
சங்கையைத் தீராய்
வங்கணமொன்றுமில்லாமலே யானிந்த
திங்களினில் வாச சேர மனமுவந்த

(மங்கையே...)

## 173. சன்மிட்டை சொல் கந்தார்த்தம்

இராகம் : மோகனம்

கணைமாமலரெய்யு நல் வேளும்
இணையாதென வெழிலுடனாளும்
பணையா மநு நெறியுடனீளும்
மணிமாநில மொரு குடை யாளும்
மகிபனே வாரும் மருவியின்ப
சுகமதைத் தாரும்
மகரதுவசன் கொடு மதியின் பகையு நீங்க
நிகரிலாப் பரவை சூழ் நிலமதிற் புகழோங்க

(மகிபனே...)

சங்கை – வேட்கை; வங்கணம் – காதல்
மகரதுவசன் – மன்மதன்
பரவை – கடல்

## 174. பொது விருத்தம்

தஞ்சமென்று சரணடைந்தார் காத்திடாமற் றள்ளி
விடுவது தரும மல்ல வென்று
நெஞ்சினினைத் திகுனை சன் மிட்டையோடு நேச
முட னே யந்த நெடு வ னத்தில்
குஞ்சரநேர் யயாதிபதி கலவி செய்து கொற்றமனை
புலரிபுகுந் தனன்சன் மிட்டை
யுஞ்சரியாய் இகலதாக் கர்ப்பமுற்றிட்டாள் – துயரினை
யகற்றிட்டாளே

வசனம்

அகோதெப்படியென்றால் யயாதி மகாராஜன் தன்னிடத்தில் அடைக்கலமென்று வந்தவர்களை இரட்சிக்காமல் தள்ளி விடுவது தருமம் அல்லவென்று மனதில் யோசித்து தேவயானைக்குத் தாதியாகிய சன்மிட்டையுடனே அந்த பூங்காவனத்தில் யயாதி மகாராஜன் காமலீலா விநோதமான சரகங்களைச் செய்து விடியற்காலத்தில் எழுந்து தன் அரண்மனைக்குப் போனார். இப்பால் சன்மிட்டையானவள் கர்ப்பமாய் இருந்தது கண்டு தன் விசாரங்களை எல்லாம் ஒழித்து தன் எண்ணம் நிறைவேறியதென்று சந்தோஷமடைந்து இருந்தாள். மேல் நடந்தது காண்க:

இகுளை – தோழி
குஞ்சரம் – யானை
புலரி – விடியல்

## 175. பொது அகவல்

தன்னிக ரில்லாத் தகை பெறும் யயாதி
மன்னவ னுடனே சுரதுகள் புரிந்து
சேர்ந்த சன் மிட்டை திருவயிற் றினிலே
பாந்தமாய்க் கருவும் பண்புட னுதிக்க
அன்னமும் வெறுத்தே அரவிந் த முகம்
துன்னிய நிலவென துலங்கிவே யொத்த
குவ்வு தோ ணேர்ந்து கொடியிடை கதித்து
பவள வாய்த் தாளப் பல்லழுக் கடைந்து
முகை நகி லத்தின் முகங்களுங் கறுத்து
எகினமு நாணுமியல்நடை சோர்ந்து
... மதி சென்று தரணியிற் சிறு வெண்
...... யென்னக் கிளர்ந்த சுத னுதிக்க
ஆதுலர் குழாத்துக் ககமகிழ் வாக
போதவே தானம் புகழுட னீந்து
தேதியர் தம்மை விழைவுட னழைத்து
சாதகங் களுநற் சாஸ்திரம் பார்த்து
பொருவிலா நாமமும் பூருவென் றமைத்து
இருக்கிற போதில் எழில்புக ரளித்த
அன்புள தேவ யானையுங் கேட்டு
இன்பமாய்ப் புருட னில்லாமற் பிள்ளை

பெற்றதை யறியப்

பேதை சன் மிட்டை

யற்று வாழ் வீட்டுக்கு

உவந்து வந் தனளே

ஆதுலர் – வறியவர்
புகர் – சுக்கிரன்

## 176. தேவயானை வருகிற விருத்தம்

இராகம் : தோடி

சுரும் பணைந் திமிர்க்குங் கோதை தொண்டையங் கனிபோற் செவ்வாய்

இரும் பணை வரைபோற் கொங்கை யிந்தென விளங்கு நெற்றி

கரும் பணை மொழியாள் மாரன் கணையெனும் விழியாள் முல்லை

அரும் பணை நகையாள் தேவ யானையும் வருகின் றாளே

## 177. தேவயானை வருகிற தரு

இராகம் : சாவேரி தாளம் : ஆதி தாளம்

தேவதேவரு மயல்ஆவல் கொள்ளுமியல் தேவயானையும் வந்தாள்

மாவடு போன்ற செவ்வரி பரந்த விழியாள்

மருவுஞ் சர்க்கரையோ முக்கனியோ வெனு மொழியாள்

வாரிசத்தினையே பழித்திடு மாமலர்க்கரமாய் செழித்திடு

மாதத்துள்ளோர் புகழுந் தாதலர் சலச மலர்

மீதினிலுதித்த திருமாதென வடிவமுடன்

(தேவ...)

நிருதர் குலத்தில் வந்த – தனது பாங்கி
நேரிழையாளுஞ் சிறந்த –
கருவு கொண்டே தந்த – சேதியைக் கேட்டு
கடிதினிற்றானே சந்த விருக்ஷ நிறை
மருமலர் வனமதிலமரர்களுலகினை மேவ – சிகரமதில்
கருமுகில்களும் வருபரிதியனுதினமுலாவ – வாரணஞ்சூழ்ந்த
இருநில மதிலி தனிணையிலை யென் பலர் தாவ – விளங்குநற்செந்
திருமகள் மருவிய பெருவாண் மனையென ஆவலுடன் யயாதி
அருமையாய் சன்மி டைக் களிப்புடன் கட்டிவைத்த

அழகுபெறு மனைக்கு விரைவுடன் போக சுத்த
தெருளுறு முனிவர்க ளுளமதில் ...
செய்யு மிரதி கண்டு ... வடிவு பெற்ற
சித்திர மயிலொப்பளிவள் பேசும் – சொல்லில்
தத்தையுங் குயிலினமுங் கூசும்
வித்துருவிடை வல்லியை யேசும் பூசும்
கத்தூரி சந்தன மணம் வீசும்
பொற்புள நடையெகின நடைகளை வெல்லும்
சொற்பெறு மெய்யினிலணி மற்கதிரெனவே வில்லும்
சூது நகிலங்கள்வெகு – காதலையளிக்குமென்ன
கோதறு நளின மொத்த சீதள வதனமன்ன

(தேவ...)

தத்தை – கிளி
வித்துரு – மின்னல்
வல்லி – கொடி
எகினம் – அன்னம்; நகிலம் – முலை

### 178. சன்மிட்டை தேவயானையைப் போற்றி விருத்தம்

பங்கய மாதி னுக்குப் பணைத்தநல் லழகு வாய்ந்த
மங்கையே போற்றி சுக்கிரன் மகிழ்தவக் கொழுந்தே போற்றி
துங்கமா யுலகை யாளும் தோன்றலின் மனையே போற்றி
எங்களாண் டகையே யுந்தன் இணையடி போற்றி போற்றி

### 179. தேவயானை சன்மிட்டைக்குச் சொல் கவி

மன்னிய சகஸ்திர மங்கையர் போற்றும்
பொன்னணி பூண்ட பூவையே வாழி
இன்னமு தச்சொல் இகுளையே வாழி
மன்னிடபன்மன் மகள் வாழி வாழி

### 180. தேவயானை சன்மிட்டையை கேட்கிற தரு

இராகம் : புன்னாக வராளி தாளம் : ஆதி தாளம்

ஆரணங்கெனு நல்லாய் – சுத
னளித்த வாறினைச் சொல்லாய்
வாரணகும்பத்தை வாடச் செய்யுந்தனத்தை
மருவு மருமமுறு கருமைச் சுரியல் பெறு
மணமேவிய மலரார் விழியாய் திகழ்
வணமேவிய சிலையா நுதலாய் புகழ்

(ஆரண...)

பணிவிடை செய்தென்னாளும் உயர்

பதும மலர் வதன விகுளையர்களுடனே

விதம் விதமாயெந்தனிதய மகிழடையப்

பணிவிடைசெய் தென்னாளும்

வழையவமரருலகள வெனதாணமனை

விழைவு கொடனுதின மகிழுடனவாநினை

பகருமிளங்கொடி யென வளை துடியிடை

நிக நிகென விருமயிலனா எனதிடை பணி

பரிவுற்றகில் பொற்பெறு சந்தன வனம்

விரிவுற்றுயர் மனை தனிலுற்பவள கனமே

பதியுந்திகழ் பெறுமர சரு முனதிடம்

மிதியாத தகையுடன் உறை பெண்ணே எனதிடம்

பணிவிடைசெய் நாளும் பாங்குறு மனைப் பரிந்தாவலாய் மீளும்

பிணியிலாமற் சந்ததம் பெருமையுடனுலாவும்

பிழையிலாவிடபன் செய் பேறாலுலகிற்றாவும்

மிக நன் மொழி மடவன மென வளர் வெகு

மகிழ் கொண்டுயர் தகைமையினுடனொளிர் மிகு

(ஆரண...)

### 181. சன்மிட்டை தேவயானைக்குச் சொல் விருத்தம்

குருதிசேர்ந் திலகும் வைவேற் கொற்றவர்க் கரச னுன்மேல்
கருதி சேர்ந் தனை வ னப்பு காரிகை யாளே போற்றி
சுருதிசேர் மனத்த ரான தூயமுனி யருளி னாலே
பரிதிசேர் புகழ்ச்சி வாய்ந்த பாலனை யளித்திட் டேனே

வசனம்

கேளாய் எனது நாயகியாகிய தேவயானையே சரணம். வேதங்க ளெல்லாம் குறைவர உணர்ந்த ஒரு ரிஷியீஸ்வரனுடைய கடாக்ஷத்தி னாலே இந்த புத்திரனைப் பெற்றேன் அம்மணி.

### 182. தேவயானை சன்மிட்டைக்குச் சொல் விருத்தம்

தாங்கிய புகழ்சேர் வேத்த தாபத ரருளால் புத்ரன்
பூங்கணை யோன்போல் பெற்ற பூண்முலை யாளே வாழி
பாங்குட னுனது டம்பை பத்திரம் பார்த்துக் கொண்டு
தீங்கிலா திருப்பாய் யெந்தன் திருமனைக் கெய்து வேனே

வசனம்

கேளாய். ரிஷியீஸ்வரனுடைய கிருபையினாலே புத்திரனைப் பெற்ற சன்மிட்டையே வாழி! உன்னிட உடம்பை பத்திரமாய் பார்த்துக் கொண்டிரு. நான் என் அரண்மனைக்குப்போய் வருகிறேன் பெண்ணே.

சன்மிட்டை வசனம்:

அப்படியே போய் வாரும் அம்மணி

சுருதி – வேதம்; பரிதி – கதிரவன்
தாபதர் – தவமுனிவர்
பூங்கணையோன் – மலர் அம்மை எய்துகின்ற மன்மதன்.

### 183. பொது திரு – ஜம்பை

கார்பரவு கருங்கேசன் தேவயானையுந்தன்
வார்பரவு மனை சென்று வசித்திருந்த பின்பு
கூர்பரவு வேல் விழியாள் குமரி சன்மிட்டை பினும்
தார் பரவு யயாதியுடன் தருக்குடனணைந்து
பாசமுடனே யிரண்டு பாலகளைப் பெற்றெடுத்து
நேசமுடனேவளறனெஞ்ச மகிழ் உற்றாள்
வாசமுடனே மூன்று மைந்தர்களும் விரைவினிலே
பேசுமுடனே கொஞ்சிப் பேச கற்பித்தாளே
கணையொரு ஐந்துங்கொண்ட கந்தர்ப்பன்போல் வனப்பில்
இணையொரு வரில்லாமரிக்குமைந்து வயதில்

திணையொரு குடையிலாளும் செம்மல் யயாதியுமுணர்ந்து
பணையொருவனிவனெனு முபாத்தி தனை யழைத்து
தனையருக்கு கல்விதனை சாற்றென்று உரைத்திடஅப்
புனையருக்கு கல்வி தனைப் புகலவே யிசைந்து
அனையருக்கு மேலாக அருங்கல்வி கலைமுழுதும்

கனிவுடனு பாத்தி சொல்லக் களிப்புடனே படித்து

இருக்குனாளினில் வொருனாளிசையுடன் மூவர்களும்

செருக்குடனே விந்தையதாய்த் தெருவீத பார்த்து

தருக்குடனே வரும்போது தந்தை யயாதி மருவி

யிருக்கு மரண் மனைத் தெருவிலெய்தினர் மைந்தர்களே

மைந்தரிவ...

சிந்தையுமுக...

அந்தமுமிகுந்...

யிந்தனன...

வசனம்

அகோதெப்படியென்றால் சன்மிட்டையினுடைய குமாரர்கள் மூவரும் ஒரு நாளையத்தினம் அந்நகரத்து வீதிகள் அலங்காரமெல்லாம் வேடிக்கையாகப் பார்த்துக் கொண்டு வருகிற போது, தேவயானை தனது அரண்மனைத் தெருவினில் வந்து பார்த்தவளாய் "இந்த புத்திரர்கள் நமது புருஷன் போல ரூபவான்களாயிருக்கிறவர்கள் யாவரோ" வென்று சந்தேகிக்கிற விதங்காண்க :

184. தேவயானை சொல் தரு

இராகம் : அசாவேரி தாளம் : ஆதி தாளம்

பல்லவி

ஆரோ இவராரோ

எந்தன் அருமைப்

புருஷனெனு ...

................

... பெற்ற மைந்தர் போற்றோணுதே

மகிபனைப்போல்

மன்னென வடிவமுங் காணுதே

(ஆரோ...)

நீங்களார்யென்று கேட்டால் நிஜமதனைச் சொல்வாரோ

நினக்கென்ன வேலையென்று சினத்துவாய் மெல்வாரோ

(ஆரோ...)

யெனவே யியலுடனே – யிங்கு வந்திடும் பாலர்

(ஆரோ...)

சாற்றுனவமணி யாலாற்றுஞ் சரவுரத்தார்

தாண்டியே முழந்தாட் கீழ் நிண்டிருக்குங் கரத்தார்

(ஆரோ...)

185. தேவயானை சன்மிட்டையினுடைய பிள்ளைகளை அழைத்த கவி

யெத்திசையோ ரும் போற்றும் சிற்றர சன் றன்னை வென்ற

மெத்தவமெ ழில் மிகுந்த புத்திரரே யிங்கு வாரீர்

### 186. சன்மிட்டை பிள்ளைகள் தேவயானைக்குச் சொல் விருத்தம்

உன்னிய குவல யத்தை போர்குடை தனிலாள் வேந்தன்
மன்னிய மனைவி யேயுன் மலரடி போற்றி போற்றி
மின்னிய புகழின் மிக்க வெள்ளியின் சுதையே போற்றி
தன்மையா யெங்களை யழைத்த சங்கதி யுரைசெய் வீரே

வசனம்

கேளும். மகாராஜன் பத்தினியாகிய யெங்கள் அன்னையே சரணம். விளையாடிக் கொண்டிருந்த யெங்களையழைத்த காரியத்தை இன்னதென்று எங்களுக்குத் தெரியச் சொல்லுவாய் அம்மணி.

### 187. தேவயானை சொல் விருத்தம்

இராகம் : பந்து வராளி

மேலைசூ ழுலகி லேயோர் வேளென்று னவில
வாலைநற் பருவங் கொண்டு வாய்திரி மதன னாப்போல்
காலவே யுமைப்ப யந்ததாய் தந்தை தனையெ னக்கு
கோலம ...... ப்பென உரை செய் வீரே

சுதை – மகள்
மேலை – மேன்மை
வாலை – இளமை

வசனம்

கேளுங்கள் புத்திரர்களே! கடல் சூழ்ந்த உலகத்தில் ஒரு மன்மதனென்று சொல்லுவார்கள். அந்த உண்மையானது நீங்கி வாலிபத்திற் சிறந்த அழகுடைய மூன்று மன்மதனைப்போல

வடிவந்தாங்கிய உங்களைப் பெற்ற தந்தை தாயினுடைய பேரை வஞ்சனையில்லாமற் சொல்லுங்கள் மைந்தர்களே

**188. சன்மிட்டை பிள்ளைகள் தேவயானைக்குச் சொல் ஜம்பை**

முருகு செறிப்போதுடைய மரைமலரின் மீதுதித்த
திருவெனவே வனப்பின் மிகு தெரிவையருக்கரசே
யெங்களை யாரென்றுரைத்த பொங்குமிகு அன்னையே
சங்கையில்லா யாங்களிங்கதனை யுரைப்போம்.

நற்றவத்தினைச் செய்து யித்தலத்தியெங்கள் தமை
பெற்றளித்தவன்னை புகழ் பெற்ற சன்மிட்டை
சிந்தை மகிழ்ந்திருக்குமெங்கள் தந்தையரும் உலகினுக்கு
இந்திரனெனும் புகழினில் மிகுந்த யயாதியுமே
சந்தன வனத்தினிலே யெந்தையருங் கட்டிவைத்த
சுந்தரமனைத்தனிலுரைந்திருப்போமே
சிந்தை மகிழ்வுடன் யாங்கள் பந்தமுடன் விளையாடி
விந்தையுடன் வீதி கண்டு வந்தனமிப்போதே

## 189. தேவயானை சொல் கலிப்பா

இராகம் : புன்னாக வராளி

யீனொன்றும் பணியாள் சன்மிட்டையெனக்
கேனொன்றும் நடத்தை லாகுமோ
நானொன்று நினைக்கத் தெய்வ முன்னகைத்
தானொன்று நினைத்ததிற்கென் செய்வேன்

### வசனம்

ஆ! ஆ! தெய்வமே! ஈனத்துவமுடைய பணிவிடைக்காரியாயிருக்கின்ற இந்த சன்மிட்டை எனக்குச் சரியாகும் படியான நடத்தையெண்ணி நடக்கலாமோ. னானொரு யெண்ணங்கொண்டு தாதியாய்ப் பணி விடை செய்யப் பெற்றுக் கொண்டதிற்கு தெய்வந்தானொரு எண்ணங்கொண்டு ... தாதியாய்ச் சேர்த்துவிட்ட தேயென்ன செய்வேன் தெய்வமே!

## 190. தேவயானை புலம்பல்

இராகம் : நீலாம்பரி தாளம் : ரூபகம்

ஐயையோ நானென்ன செய்வேன் ஆவியைத்
தெவ்விதமுய்வேன்
வையகம் புரக்கு மன்னன் மநு நெறியுணர் விற்பன்னன்
என்னிட பணி செய் பாங்கி யிச்சையுமிகவுந்தாங்கி
அன்னவளுடனே சேர்ந்து அணையலாமோ அன்பு கூர்ந்து

னானொரு (நானொரு)
புரக்கும் – காக்கும்
இச்சை – ஆசை

தப்படியாகப் பிரஹ்ரீயை ...

இப்படி செய்வரா கண்ட விரு நிலத்தி ...

வெம்புலி பசித்தாலும் புல் மேயுமோ ...

வம்பவியரசனானாலணைவனோ மகிழ ...

நீதி நீ ணெறியோனென்று நெஞ்சினில் நினைத்தேயன்று

தீதிாத் தெரியல் சூட்டி திகைக்கலாகினே நாட்டில்

வியப்புடன் சுரபித்தோலே வேங்கையும் புனைந்து மேலே

வயமுடன் கொலை புரிந்தவாறு போலானார் தெரிந்த

புலவு வேலரசை நம்பி புலம்பலாகினேன் வெதும்பி

இலவுகாத்த கீரம் போலே – யேங்கலானேன் புவியின் மேலே

ஆசிலான் கரத்தைத் தொட்டு அயர்ச்சியே மிக நேரிட்டு

மாசிறகு வண்டே போல மனஞ் சுழலானேன் சால

எஞ்செய்வேனினி ...
வஞ்சகனிடத்தில் ...
மூதறிவுடையோ ...
தீதிலா வழியந்து ...

### 191. தேவயானை சொல் விருத்தம்

இராகம் : முகாரி

மணங்கமழ் மாலை சூட்டி மகிழ்ச்சியாய் மன்றல் செய்த

அணங்கினை அணையான் யானும் அருகிருப் பயெனை விட்டு

குணங்கள்சற் றேனு மில்லாக் கொடிநுடங் கிடையா ளோடு

இணங்கியே யணைந்தி ருந்தால் இயானிருந் தென்செய் வேனே

மன்றல் – திருமணம்

வசனம்

ஐயையோ தெய்வமே! சகலருமறிய மணமாலை சூட்டிக்கலியாணஞ் செய்து கொண்ட மனைவியானிருக்க, யென்பேரில் சற்றும் விருப்பமில்லாமல் விட்டு விட்டு, நற்குணங்களானது கிஞ்சித்தும் இல்லாத சன்மிட்டையுடனே மருவியணைந்திருந்தால், நான் இந்த அரசனிடத்திலிருந்து யென்ன செய்வேன் தெய்வமே!

192. தேவயானை சுக்கிரனிடத்துக்குச் சொல்லிக் கொண்டு போகிற தரு

இராகம் : காம்போதி தாளம் : ஆதி தாளம்

இனியென்ன செய்வே னானே யென்
யெண்ணங் கடந்திடம்
கிழண்ணன் புணர்ந்ததினால்
யெப்படி யுய்வேனானே

யென்பேரில் (என் பேரில்)
கிஞ்சித்தும் – சிறிதும்

சனியன் பிடித்து இந்தத் தலைவனை மணந்தேனே
தருவிலேறிக் கைவிட்டோன் தகைமைபோலாகினேனே
(இணியென்னசெய்வேன்...)

கூபத்தில் பண்டெனைத்தள்ள அந்த
கொடுமை நினைத்து யானும்
யடிமை தரவே கேட்டு
கொற்றமுடன் யான்கொள்ள வந்த

சாபநுதலாள் சன்மிட்டை மனநடலை

சார்ந்துயென் கேள்வனாந்ததை மலரா தொடலை

பூபனையினிதுடன் புணர்ந்தெனக்கெதிராக

புனிதமுடன் வந்தாளே புகழுடன் சதிராக

(இனியென்னசென்வேன்...)

கலைக்கும் பொறைக்கும் மனு

நிலைக்குமிவரேயென்று

கருத்தில் விழைந்தேன் பண்டு

நடலை செய்வா ரென்று நண்ணாமற் போனேனே

ரத்தினமிழந்தலையும் நாகம் போலானேனே

வடுவெனுங் கண்ணிதன் வலையினிலே சிக்கி

மயலு மிகப்பெருகி மருவினாரே தருக்கி

(இனியென்னசெய்வேன்...)

தாதை இடத்திற் சேர்வனேயென்

தலைவன் கவடமெலாம்

நிலைமையுடனுரைத்துத்

தானெனதுயரந் தீர்வனோ

ஏதில்லாமல் வருந்த இனிமையுடனம் புயன்

எழுதினானோ வறியேன் என்றலையினிற் பயன்

சூதொன்று முணரா நான் தொன்னாள் செய் பாதகமோ

துணிவுடன் குரவரை தூஷித்த காதகமோ

(இனியென்னசெய்வேன்...)

மண் குதிரையை நம்பி ஆற்றில்
மயங்கி மனதுழன்று
தயங்கித்தவித்தவன்போல
வருந்தலாகினேன் வெம்பி நல்ல
பண்பு பெறத் துயரம் பாங்குடன் நீங்கியே
பகுக்க நிகரில்லாமல் பணையியல் ஒங்கியே
யெண்ணெனன மனமகிழ வெய்துரையக் காலமோ
யேந்திழை சன்மிட்டைக்கியல் தேவானு கூலமோ

(இனியென்னசெய்வேன்...)

### 193. தேவயானை சுக்கிரனுக்குச் சொல் கொச்சகம்

மிக்க புகழுடன் விஞ்சை மீதவத்தோரும் ...
தக்க புகழுடனுணர்ந்த தந்தையிருதாள் போற்றி
சக்கிரேச யயாதி மன்னைத்தான் மணஞ்செய்தனுபவிக்கும்
துக்கமதை யென்னென்று சொல்வேன் மனமுவந்தே

வெம்புதல் – வாடுதல்; விஞ்சை – ஞானம்
யேந்திழை (ஏந்திழை – பெண்)

வசனம்

கேளும். என்னைப்பெத்த தந்தையே சரணம்! சரணம்! யேகசக்கிரேசனாகிய யயாதி மஹாராஜனை நான் விவாகஞ்செய்து கொண்டு அவரிடத்தில் நான் அனுபவிக்கிற மன வருத்தத்தை நான் என்னவென்று சொல்லவேன் என் தந்தையே!

### 194. சுக்கிராச்சாரியுடன் தேவயானை புலம்பல் தரு

இராகம் : கெண்டா தாளம் : அட தாளம்

சிறந்த குலத்திற்றோன்றும் தந்தையே எந்தன்
தீவினைக்கென்ன செய்வேன் தந்தையே
அறஞ்செய் பொன் சுதனுக்கு தந்தையே விஞ்சை
யன்பினுடனுரைத்த தந்தையே
மாதர்களும் நடுங்கத் தந்தையே மிக்க
வலிமை படைத்திருந்துந் தந்தையே
ஆகுலத்துழலுறேன் தந்தையே – அதை
அகற்றலாகாதோ யெந்தன் தந்தையே

தெருள் மநு நெறியுடன் தந்தையே – அரசு
செய்யு முறைமை தப்பித் தந்தையே
தரும் நினைப்பகன்று தந்தையே – பர
தார விருப்பமுற்றுத் தந்தையே
உமது மருமகனுந் தந்தையே சன்மிட்டை
யுடனே சையோகஞ் செய்து தந்தையே
குமரா விழைவு நீக்கித் தந்தையே – யென்மேற்
குரூர மிகவே தாக்கித் தந்தையே
சீறு மாறாகவே தந்தையே அவர்
செய்குராரென் செய்வேன் தந்தையே
தாறுமாறாகவே தந்தையே மிகச்
சாற்றுரார் பொறுக்காமற் தந்தையே

உந்தனிடத்தில் வந்தேன் தந்தையே நெஞ்சில்
உற்ற துயரைத்தீரும் தந்தையே
இந்த துயர் தீராமல் தந்தையே அந்த
இறைவன் மனையணுகேன் தந்தையே

தெருன் – அறிவு
சையோகம் புணர்ச்சி
குரூரம் – கொடுமை

## 195. சுக்கிரபகவான் தன் பெண்ணாகிய தேவயானைக்கு தேறுதல் சொல் விருத்தம்

இராகம் : நாட்டை

ஆகுலத்துடனே புலம்பி மனக்குந் தொடர் நடையினாய்
கோகிலத்தை பழித்த பானமொழி கோதையாகிய பேதைமேல்
மோக முற்று புணர்ந்த மூடர்கள் முதல்வனைக் கடு சூளினால்
வேகவைத்து நின்பகை நீங்கிட விரைவில் செய்குவேன் காண்பையே

### வசனம்

கேளாய். மன வியாகுலத்துடனே புலம்பிடு தேவயானையே! அந்த சன்மிட்டை மீதில் மோகமுற்றுச் சேர்ந்த மூடர்களுக்கெல்லாம் மூடனாகிய யயாதி மஹாராஜனைக் கடூரம் பொருந்திய சாபத்தினால் விருத்தனாக்கி உன்னுடைய வருத்தத்தை ஒருநொடிக்குள்ளே நீங்கிப் போகச் செய்குறேன் பாராய் பெண்ணே.

## 196. சுக்கிராசாரியார் வருகிற பொது விருத்தம்

அத்தனை யுளத்தினி லிருத்திலே துதித்துயரருந்

தவரினத்தர் மகிழச்

சித்த மலைவற்று நிலையுற்று பரதத்துவ திகழ்ச்

சுடர் பதத்தை வருடி

இத்தரை இடத்திலெனை யொற்றகுர உத்தமரிலைச்

சொலி உருத்தினுடனே

வித்தகனெனப் புகழ்வு பெற்ற தகை சுக்கிரன்

வியற்கொலுவிலுற்றனனே

## 197. சுக்கிராசாரி வருகிற தரு

இராகம் : மோகனம் தாளம் : அட தாளம்

சுவர்க்கத்தினில் மருவும்

சுரருங்கண்டு வெருவும்

சுக்கிராசாரி நானே

உவர்க்கருங்கடலினை ஒரு நொடிதனில் வற்ற

ஒண்மையுடனே செய்யும் வண்மை பெறும் பிரசித்தன்

உரைசெய் முனிவர்கள் வெருவ மகிழ்விரிந்த

தரியதவமதை புரியும் புகழ்தரிச – சுவர்க்கத்தினில்

அருந்தவர்களும் நிதம் வருந்தியிறைஞ்சுங்காணா

ஆதியாம் ஒளிவினைக் காட்டுவேன் பயந்

தபயமென்ற வரையென் உபயவிழிபோல் காத்து

அரிய நன்னெறி நிலை நாட்டுவேன்

பரிந்தெனதிகலவரை நிரந்தரமுஞ் சாட்டியில்லா பம்பரம்

போல் வலியோட்டுவேன்

பங்கயன் திருமாலும் சங்கரனெனுந்திரி பகவரையும்

அண்டம் விட்டோட்டுவேன்

பொருந்தும் விண்யோடுந் தினகரனைப் போகாமற்கட்டும்

புறமுடையோனென்று புகழுறுத்திசையெட்டும்

திருந்து மறைக்ள முதல் செப்புங்கலையெட்டெட்டும்

தெளிந்த பிறகற்பதியும் வொளிந்திடவேயதட்டும்

சித்துகளாற்றிடு வீரன் – கலை முற்று முணர்ந்திடு சாரன்தகை

பெற்றிடு மலர் வருதீரன்–றனை செயும் மரை ... மிகத்

திகழு கலைமதி முகமும் வளர்ந்தரு – முகிலையுற்ழகுழல்
மகளை அயர்வு செய்

திறமிலிறைவனை – கரமோடரிய சூள் – உறமோடுதவிட –
நிறமுள கொலுவினில்

சுவர்க்கத்தினில் மருவும்

சுரங்கண்டு வெருவும்

சுக்கிராச்சாரி நானே

தினகரன் – சூரியன்
கலையெட்டெட்டும் – கலைகள் அறுபத்திநான்கும்
பிறகற்பதி (பிரகஸ்பதி – தேவகுரு)
அதட்டும் – வெருட்டும்
சித்து – மாயவித்தை
சூள் – சபதம்

## 198. யயாதி சுக்கிராச்சாரிக்குச் சொல் போற்றி விருத்தம்

பரிந்துநற் றவங்கள் செய்து பரநிடத் தினிலே மந்திரம்
தெரிந்திடு திறமி குந்த தேவனே போற்றி போற்றி
திருந்திய சுரர்ந டுங்கச் செய்யும் உத் தமனே போற்றி
விரிந்தமா மறையு ணர்ந்த விளங்குநின் பாதம் போற்றி

## 199. சுக்கிரன் யயாதியைச் சபித்தல் விருத்தம்

இராகம் : நாட்டை

இந்திராதிகளனைவரும் வந்து தொழுமெனது
வாய்மையை யிகழ்ந்துநீ
சந்திராதி உருவைப் பழித்த – னுதலாதியர்க்கும்
யிழிவேமிகும்
கந்தமாதிகள் தரித்த பேதையொடு கலவி செய்ததி
மகிழ்ந்ததால்
இந்த மாதிரம் நனைக்க மூப்பு மிகசெய்திடக்
கடிசபித்தனனே

சுரர் – தேவர்
பரண் – கடவுள்; நுதல் – நெற்றி; மூப்பு – முதுமை
கடி – கடுமை; மாதிரம் – பூமி

### வசனம்

கேளாய் யயாதி ராஜனே! தேவேந்திரன் முதலாகிய தேவர்கள் எல்லாம் வந்து பணியும் படியாகிய திறமை பொருந்தியிருக்கின்ற நான் ஆதியிலே பூங்காவனத்திலே என் குமாரத்தியாகிய தேவயா னையைக் கலியாணஞ் செய்து கொடுத்தபோது சொன்ன வாய்மையை இகழ்ந்து தள்ளிவிட்டுப் பிறை நுதலாள்ாகிய சன்மிட்டையுடனே லீலா வினோதஞ் செய்து மகிழ்ச்சி அடைந்திருந்தபடியினாலே இந்த பூலோகத்தாரெல்லாம் கண்டு நகைக்கத் தக்கதான விருத்தனாகக் கடவாய் யயாதிராஜனே.

### 200. பொது விருத்தம்

இராகம் : தோடி

வெஞ்சினத் துடனே சுக்கிரன் விளம்புசா பத்தீ யாலே
செஞ்சிய முதுகு மிக்கச் சிலையென வளைந்து தேகம்
மிஞ்சவே திரைந்து ரோமம் வெளுத்துநன் னடையும் சோர்ந்து
நெஞ்சினில் வருத்த முற்று நிருபனுங் கலங்கு வானே

### வசனம்

அகோதெப்படியென்றால் சுக்கிர பகவானானவர் வெவ்விதாகிய கோபத்துடனே சபித்த சாபாக்கினியினாலே செவ்வை பொருந்திய முதுகு வில்லைப்போல் வளைந்து தேகமெல்லாம் திரைந்து, மயிர்களெல்லாம் நாணல் பூப்போலே வெளுத்து, நல்ல நடையுஞ்சோர்ந்து, மனதில் வியாகுல முற்று, யயாதி மஹாராஜன் வருத்தப்படுகிற விதங் காண்க:

## 201. யயாதி இரங்கல் கண்ணிகள்

இராகம் : காம்போதி தாளம் : ஆதி தாளம்

என் செய்வேனேது செய்வேன் முன்னமிப்படியா

மென்றிதையத்தெண்ணாமற் போனேனே

குன்னமாகவே மூப்பு துன்ன யெப்படியென்று குடல்

நடுங்கிடலானேனே

நரைத்துத் திரைந்து வாயில் சொள்ளொழுகிட

நங்கஞ் சொல்லவிடலாச்சே

வரைத்தட கரியெனத் திருத்த நடையும் போய் வருந்தித்

தள்ளாடிட பெருமூச்சே

தாவரம் ஒடுங்கவே மேவும் இருமலினால்

சகிக்கக் கூடிலையே திரேகம்

மாவரிவையருடன் ஆவல் தீர்ந்திட இனி

மருவுவனோ மிக போகம்

காலுங்கை சோர்ந்து முது மேலுஞ் சீலை போாகி

கருத்து மயர்ந்திடவும் விதியோ

வாலிபத்தினிலே அகால மூப்புவணுகி வந்த தப்பறு

மன்றெழுதியோ

இம்மைத் துயரனுபவித்திடத்தலையினில் இருந்ததோ

யாதறியேனே

சத்துந் தயை யில்லாமற் பெத்தவனுடன் சொல்லி

சபிக்கச் செய்த குறி யறியேனே

தூத்தும் பெண்டீர்களே தன் கூற்றுவ னென்றவை

சொல்லிய வாக்கியமது போலே

க்ஷாத்ரமாகவே சூள் கீத்த முடன்றான் சாற்றினள்

சினமாய் மேன்மேலே

திகைப் பூண்டினை மெரித்த வகை மோசமானோன்

போலதியங்கலாகினேனே திருமாலே

பகை பூண்ட சிசுபாலன் தகை பூண்ட முடிகொய்த

பஞ்சாயுதக்கரனே திருமாலே

தாக்கும் அலைகடலில் வாய்க்கும் சிற்றுரும்புபோலே

தானலையலாகினேன் திருமாலே

ஆக்க மருவுமவள் மேர்க்குங் கடன் மலையில்

அலருந் தலசயனத் திருமாலே

### 202. யயாதி சுக்கிரனுக்குச் சொல் கட்டணைக் கலிப்பா

தெருளிலாத சிறியவர் செய்பிழை தீர்த்துக்காக்கல்

தெகவுறு நன்மனப்

பெரியவருக்குக் கடன் யென்றே யொளில் பிறங்கு

பேசுவராதலால்

விரியுமேதகு கீர்த்தி மிகுந்தவர் வெஞ்சினத்தோடு

மூப்பின்னாகவென்

றரிய சாபமியம்பிடலாகுமோ அய்யனே தீதகற்

றெனை யாளுவாய்

வசனம்

யெனதாண்டவறாகிய சுக்கிராச்சாரியரே! சிறியோர்கள் செய் த பிஸ்ழகளையெல்லாம் தீற்குறது தெளிந்த மனதையுடைய பெரியோர்களுக்குக் கடமையென்று உலகத்தில் சொல்லுவார்கள். அந்த மொழியைச் சற்றும் யெண்ணிப்பாராமல் மிகுந்த கீர்த்திப் பிரதாபத்தையுடைய பெரியவரான தேவரீர் அடியேன் பேரில் கோபித்து பெருமையோ? அந்த சாபத்தை நீக்கி ஆண்டு கொள்ள வேணும் சுக்கிராச் சாரியரே!

## 203. யயாதி சுக்கிராச்சாரியுடன் இரங்கல்

இராகம் : பந்துவராளி　　　　தாளம் : ஆதி தாளம்

விஞ்சை தனிற் சிறந்த செஞ்சுந் தகையுடையமிருத

சஞ்சீவி கற்ற குருநாதா

வீதலின்றி வயங்கும் மேதினி முழுதினும் வீறும்

புகழ்படைத்த குருநாதா

சஞ்சலமற்றுலாவ நெஞ்சமகிழ்வுடனே சந்தன

வனத்திற் சென்றேன் குருநாதா

சந்திரனின் வேளையில் முந்தனங்கனால் வாடி

சன்மிட்டையென்னிடம் வந்து குருநாதா

... முயர்க் கணைகள் விடுமதனம் புலியும் கோர

முற்றென ... பகை குருநாதா

கொண்டெழுந்ததால் வெருக் கொண்டு ளபத்தில் விழுந்தேன்

குறைவிலாமற் காரனென்றாள் குருநாதா

கடியுமவர்கள் முன்னே மடமையுடைய யென்னை காட்டிக்

கொடாதே யென்று குருநாதா

கருத்துங்கலங்கி மிக அருத்தியுடனே வுந்தன் கழல

டைக்கலமென்றாள் குருநாதா

போரினில் வெருவியுன் வாரிச மாமலர் பொன்னடி

கதியென்றாள் குருநாதா

புரக்காதிருத்தல் புவிபுரப்போர்க் கடாதென்று

புந்தியிலேயுணர்ந்து குருநாதா

வாரிசூழுலகாண்ட சீரியல் சிபிராசன் மன்னுந்

தன்னுடலீய்ந்தான் குருநாதா

மாராபிராமன் முன்னிராவணன் தம்பியென்று

மனதிலெண்ணாமற் காத்தான் குருநாதா

அந்தத் தகைமை தன்னைச் சிந்தையிலுணர்ந்த நீர்

அடயேன் மீதிற் சினத்து குருநாதா

அகற்றவரிய சாபம் புகன்றிடல் நியமமோ அருமா

மறையுணர்ந்த குரு நாதா

கந்தர மொய்த்த கூந்தற் பைந்தொடியான் சன்மி டை
கழறு மொழியைக்கேட்டால் குருநாதா
... மனதில் மீசுரமாகவேதான் கனவருத்தமுண்
டாச்சே குருநாதா

204. யயாதி சுக்கிரனுக்குச் சொல் விருத்தம்

*இராகம் : முகாரி*

உயர்ந்தமண் குலத்திற் தோன்றும் உத்தம குணத்தாய் போற்றி
அயர்ந்தசன் மிட்டை பின்னும் அடியினில் விழுந்து இஞ்சொல்
பயின்றனன் குழவிச் செல்வம் பாங்குட னளிப்பா யென்று
செயின்றயென் னுடனே பிச்சை தேவென்றாள் தாவென் றாளே

வசனம்

கேளும். உயர்ந்த பிரம்ம குல சிரே ட்டராகிய சுக்கிராச் சாரியரே சரணம். சரணம். தென்றல், சந்திரன், மன்மதன் இவைகளால் வருத்தப்பட்டுச் சன்மிட்டையானவள் என்னுடைய பாதத்தில் வந்து விழுந்து இனிமையாகிய மொழிகளைச் சொல்லுகின்ற ஒரு புத்திரபாக்கியம் பிச்சை தர வேணுமென்று வருந்தினாள் வேதவித்தகராகிய கர்த்தனே.

செயீன்ற – சினந்த
கற்தனே – (கர்த்தனே)

## 205. இதுவும் யயாதி சொல் விருத்தம்

இராகம் : முகாரி

பிச்சையுந் தருவா யென்று பிரியம தாக அந்த
நச்சையுந் துரக்கும் நீண்ட நயனசன் மிட்டை சொன்ன
இச்சையுந் தடுத்தால் பாவ மெய்துமென் றெண்ணி யானும்
கச்சையுந் துரக்குஞ் சேக்கைக் கன்னிகை தனைச்சேர்ந் தேனே

### வசனம்

கேளுமெனதாண்டவறாகிய சுக்கிராச்சாரியரே! உகத்தில் பிச்சை தரவேணுமென்று கேட்டால் இல்லையென்று சொல்லுகிறது ராஜாக்களுக்கு நீதிமார்க்கமல்லவென்றும், கறுத்த கண்ணினையுடைய ஸ்ரீ சாதிகள் இச்சையைத் தடுத்தால் பாவம் வருமென்று நினைத்து, கச்சுக்குள்ளடங்காத தன பாரத்தையுடைய சன்மிட்டையைச் சேர்ந்தேனேயல்லாமல் அவள் பேரில் மோகித்துச் சேர்ந்தவனல்லவே. இதற்கு யென்பேரில் கோபஞ் செய்யலாமோ ஞான சுரூபராகிய சுக்கிராச்சாரியரே!

## 206. இதுவும் யயாதி சொல் விருத்தம்

இராகம் : எதுகுல காம்போதி

இதையொரு குற்ற மாக யெண்ணியென் மேற்கோ பித்து
சிதையொரு புழுவை வெல்ல சிங்கமு மெதிர்த்தாப் போல
சுதையொரு மொழியைச் சொல்ல் சோம்புடன் பிடித்துக் கொண்டே
வதையொரு சாப மீய்ந்து வரைத்தது சரியோ சொல்வீர்.

வசனம்

கேளும். சதுர்வேத நிபுணராகிய சுக்கிராச்சாரியரே சரணம். தங்கள் குமாரத்தியினுடைய சொல்லைக்கேட்டு அடியேன் பேரில் தேவரீர் மனம் பதைத்துக் கோபம்கொண்டு சிதைந்து போகப்பட்ட புழுவின் பேரில் சிங்கம் யெதிர்ந்து போல் கிருமியிலும் கடையனாகிய என்னையொரு பொருட்டாக நினைத்துக் கொடிதான சாபஞ்செய்து இப்படியென்னை வருந்தச் செய்வது பண்போ? பெருமையோ? தருமமோ? சுக்கிராச் சாரியரே!

சிதைதல் – அழிதல்
சுதை – மகள்

207. சுக்கிராச்சாரியர் யயாதிக்குச் சொல் கழி நெடில் விருத்தம்

இராகம் : தோடி

வள்ளலே யுனதுமநு நெறிகளுக்கும் வஞ்சக மன்றிருப்பதற்கும்
மாசிலா வண்மை நிலைக்கு நிற்புகழ்க்கும்
மறையவனெனு மதிகட்கும்
உள்ள முவந்தே நின்மொழி கேட்டு வுருத்தினாற் சபித்ததை
நீக்க – ஒருவனாலாகாதாதலாலந்தவுயர் பெறு மூப்பினை
உனது
பிள்ளையிலொருவன் தனக்கதையளித்து பிழையிலாவவன்
மடங்கொண்டு – பேரின் முலையாள் போகமுஞ்சில
நாள் பிரியமதாயனுபவித்து
கள்ளமில்லாமல் வெறுத்தபினந்த காளைக்குன் கதிர்
முடிதரித்து
காசினி யரவை செய்தவன் மூப்பைக்கவர்த்து
நின்னிளமையுமளிப்பாய்

மடம் – இளமை

வசனம்

கேளும் யயாதிராஜனே! உன்னுடைய மநு நீதிக்கும் மோச நினைவில்லாமலிருப்பதற்கும் குற்றமில்லாத நல்ல கீர்த்தி பிரதாபத்திற்கும், பிரகஸ்பதி பகவான் போன்ற புத்திக்கும் நான் மிகவும் மகிழ்ச்சியடைந்தேன். அதிக கோபத்தோடு விருத்தனாகக் கடவதென்று நான் உன்னைச் சபித்ததை நீக்கிறதற்கு ஒருவராலும் ஆகமாட்டாது. ஆனதினாலே உனக்குக் கொடுத்த விருத்தாப்பியத்தை உனது குமாரர்களில் ஒருவனுக்குக் கொடுத்து அவனுடைய வாலிபத்தை வாங்கிக் கொண்டு ஸ்ரீ சாதிகளினுடைய போக போக்கியங்ளெல்லாம் அனுபவித்து ஆசை வெறுத்த பின்பு, உன்னுடைய விருத்தாப்பியத்தை நீயே வாங்கிக் கொண்டு (வாலிபத்தை) அந்தப் பிள்ளைக்குக் கொடுத்து, இந்த பூலோகமெல்லாம் ஆளும்படியாக மகுடாபிஷேகமும் கட்டி வைப்பாய் மஹாராஜனே.

208. சுக்கிரன் தேவயானைக்குச் சொல் விருத்தம்

வேற்றட விழியாய் மிக்க மெல்லியர் மொழியா யுந்தன்
சீற்றமெல் லாமொ ழித்து திருக்குகள் மனம் வையாமல்
சாற்றுமுன் புருனோடு சார்ந்துநீ பகையில் லாமல்
நாற்றிசை புகழ நன்னாய் நட்புட னிருந்தி டாயே

வசனம்

கேளாய் வேலாயதத்தைப் போன்ற கண்களும் மிருதுவாகிய மொழிகளையுமுடைய தேவயானையே! உன்னிட கோபமெல்லாம் நீக்கி, மனதில் ஒரு வஞ்சனைகளையும் வையாமல் யயாதி ராஜனுடனே முன்போல் விரோதமில்லாமல் யாவரும் புகழத்தக்கதாக நல் நேசத்துடன் வாழ்ந்து கொண்டிருப்பாய் யெனது பெண்ணே!

தேவயானை சொல் வசனம் : அப்படியேயிருக்கிறேன் யெனது தந்தையே

திருக்கம் – வஞ்சகம்

## 209. பொது விருத்தம்

இராகம் : தோடி

தன்னருஞ் சுதையின் சீற்றம் தவிர்ந்துநன் னெறிமி குந்த
மன்னவ னுடனி ருத்தி மனமொரு மிக்கச் செய்து
அன்னவர் விடைகள் பெற்று அசுரர்கள் அமைச்சன் சென்ற
பின்னருஞ் சுதர்க டம்மைப் பெட்புடன் வரச்செய் வானே

### வசனம்

அகோதெப்படியென்றால் தன் குமாரத்தியாகிய தேவயானையின் கோபத்தை நீங்கி நல்ல நீதி மார்க்கத்தையுடைய யயாதி மகாராஜனுடனே மனமொருமிக்கச் செய்து இருக்கச் சொல்லி அனுப்பிவைக்கத்தக்கதாக விடைபெற்றுக் கொண்டு சுக்கிராச்சாரியானவர் தன்னாசிரமத்துக்குச் சென்றார். பின்பு யயாதி மகாராஜன் தேவயானை பிள்ளைகள் சபா மண்டபத்திற்கு வரச்செய்கிற விதங்காண்க:

அசுரர்கள் அமைச்சர்கள் – சுக்கிராச்சாரி
பெட்புடன் – அன்புடன்

## 210. யயாதி கட்டியனுக்குச் சொல் விருத்தம்

இராகம் : மத்தியமாவதி

இளஞ்சிங்கம் போலே நிற்கும் இயல்புகட் டியனே நீபோய்
வளஞ்சிறந் திருக்கு மெந்தன் மாமனை தனிலி ருக்கும்
குளஞ்சிறு மதியைப் போன்ற குமாரர்கள் தமைய ழைத்து
தளஞ்சிறந் தழகு செய்யும் சதிர்கொள வருகு வாயே

வசனம்

ஆரடா! சிங்கக்குட்டியைப்போல் பராக்கிரமத்துடன் எதிரில் நிற்கிற கட்டியக்காரா! நீ போய் அரண்மனையிலிருக்கும் எனது குமாரர்களை நவரத்தின கசித சிங்காகன கொலுவுக்கு உங்கள் பிதா அழைத்து வரச் சொன்னாரென்று அழைத்துக்கொண்டு அதி சீக்கிரமாக வாடா கட்டியக்காரா.

கட்டியன் ராஜனுக்குச் சொல் வசனம் : அப்படியே அழைத்துக் கொண்டு வருகிறேன் இராஜ பரமேஸ்பரா!

## 211. கட்டியன் தேவயானை பிள்ளைகளுடன் சொல் கவி

தேச ராஜேந்திரனும்மை
மாசிலாக் கொலுவிலின்று
பாசமாயழைக்கச் சொன்னார்
நேசமாய் வருகுவீரே

அயது, துறவசு சொல் வசனம் :

அப்படியே வருகிறோம் கட்டிக்காரா!

**212.** தருக்குடன் கட்டியக் காரன் தந்தையு மழைத்தா ரென்று
செருக்குடன் வந்து ரைக்க தேவயா னைப்புதல்வர்
பெருக்கமாய் பூண்க ளெல்லாம் பெட்புட னணிந்து கொண்டு
திருக்கிலா கொலுவின் முன்னே சிறுவர்கள் வருகின் றாரே

வசனம்

அகோதெப்படியென்றால் தன் தந்தையாகிய யயாதி மஹாராஜன் அழைத்தாரென்று கட்டியக்காரன் சொன்னபடியால் தேவயானை குமாரர்களாகிய அயது, துறவசு இருவரும் வஸ்திர ஆபரணாலங்கிறுதராய் நவரத்தின சிம்மாசனக் கொலுவிற்கு வருகிற விதங்காண்க:

**213.** அயது, துறவசு கொலுவிற்கு வருகிற தரு

இராகம் : மத்தியமாவதி தாளம் : அட தாளம்

சுந்தரமுள அயது துறவசுவென்னு மிரு
மைந்தர்கள் வந்தனரே
மைந்த ... மறையவனுங்களிக்க
அந்தமுடைய தேவயானை இனிதளிக்க
ஆலோன் குலமதில் வந்திடு
பாலோன் மொழிகளைத் தந்திடு – சுந்திர
தந்தையழைத்தாரென்று கட்டியன் வந்து – சாற்று
மொழிகேட்டின்று

விந்தையாகவே குழை விளங்கச் செவியினிலே

சுந்தரமுடனே துன்ன தூயக் கொலுவினிலே

துகளற்றிரு மனதுற்றவர் அகிலத்தினில் மகிழ்பெற்றவர்

(சுந்தரமுள...)

அன்னை பதத்தை வணங்கி தாதையுரைத்த அருமொழிசொலி இணங்கி

வன்னத்துகிலுடுத்தி மார்பிற் பதக்கச் சுடர்

மன்னத்துரைகளெல்லா மருவுங் கொலுவிலிடர்

மனமுற்றவர்களை வென்றவர் சினமற்ற நன்னெறி நின்றவர்

(சுந்தரமுள...)

கழலிற்றண்டையுஞ் சீறவே நகரிலுள்ளோர் கண்டு மகிழ்வு மீறவே

எழிலிற் சிறந்த மதன... மனம் நாண

பொழிலிற் சிறந்த தந்தை பொற் பதந்தனைக் காண

................

(சுந்தரமுள...)

214. அயது, துறவசு யயாதியைப் போற்றி கொச்சகம்

பங்க வய விற்பயிர்செய் பண்புழவற் கேதினமும்

சங்கை யெய்தா மற்புரக்குந் தந்தையே நின் தாள் போற்றி

வங்கையுட னேதெவ்வா மாற்றிரள் கள்தமை வாட்டி

எங்கும் புகழ்படைத்த யெந்தையே நின்சரண் போற்றி

## 215. அயது, துறவசுக்கு யயாதி வாழ்த்து விருத்தம்

வருந் ... சஞ் சீவி மந்த்ரம் மகிழ்வுட னுணர்ந்த சுக்ரன்
பெருந்தவப் புதல்வி பெற்ற பீடுசேர் சுதரே வாழி
திருந்திய வழகின் மிக்கதிகழ் கும ரனைப்ப ழித்த
விரிந்திடும் வண்மை வாய்ந்த மேன்மைமைந் தர்களே வாழி

யயாதி தன் பிள்ளைகளாகிய அயது, துறவசுவுடன் இரங்கல்

இராகம் : பந்துவராளி

வாரி சூழுலகினில் நேரிலா வனப்பமுறு
மகிஷாதி மிகவே யுற்ற மைந்தர்களே
மாசில் நன்னெறி யோர்ந்து காசிலாகவாய்ந்து
மாண்புமிசையுஞ்சேர்ந்த மைந்தர்களே

சீருலாப் பூசுரர்கள் வாரமுட நிறைஞ்சுந்
திங்கள் சாபத்தினால் மைந்தர்களே
செய்யவழகுலவு மெய்யெல்லாம் வெளுப்புற்று
செப்பும் விருப்பமுற்றேன் மைந்தர்களே
யெந்தன் வருத்தத்தினை சிந்தை யுவந்துனீக்கில்
இருங்கடலுலகினில் மைந்தர்களே
இணையில்லாத புகழும் திணையீனையும் பெற்று
எழில் கதியைப் பெறுவீர் மைந்தர்களே

அத்துமுடனே மிக விந்தை விந்தையாகவே

அன்பாயனு தினமும் மைந்தர்களே

அருந்திடு போசனமும் திருந்தும் துயிலில்லாமல்

அலைந்து தவிக்கிறேன் மைந்தர்களே

வாரமுடன் – அன்புடன்
யெந்தன் (எந்தன்)
திணை – பொருள்

## 217. தேவயானை பிள்ளைகள் யயாதிக்குச் சொல் விருத்தம்

பருகலை வேலை ... பீடுசே ருலகை யாளும்

முருகவிழ் தொடலை சூடு முதல்வனே சிறுவர் தம்போல்

உருகினத் தனாலிப் போதுற்ற காரியமுண்டோ

திருகிலா தேயெ னக்குத் திரமுடன் வுரைசெய் வீரே

### வசனம்

கேளும் யெங்களைப்பெற்ற தந்தையே! சமுத்திரத்தை வஸ்திரமா கத் தரித்த பூமியெல்லாம் ஒரு குடையில் ஆளுகின்ற நீர் அறியாத பாலகர்களாகிய யெங்களுடன் வருத்தப்படுவதில் ஆகின்ற காரியம் உண்டோ? அதை எங்களுக்குச் சொல்ல வேணும் மகாராஜனே!

### 218. யயாதி பிள்ளைகளுக்குச் சொல் கட்டளைக் கலிப்பா

பஞ்சவாளி தொடுக்கும் மதனெனும்
பாலரேயெனக் கெய்து துயரினுக்
கஞ்சிடாதே யென்றோருரை சொல்லியே
அழகு நல்ல விளமையுந்தந்துயென்

பரு – கடல்
முருகு – நறுமணம்
தொடலை – மாலை

இதுவுமது

மிஞ்சுமூப்பினைக் கொண்டு சிலதுநாள்
மேவினால்யெனக் கின்பம் வெறுத்தபின்
கொஞ்சிளமையுங் கொற்றமு முங்கட்குக்
குணமுடன் தருவேனிது திண்ணமே

வசனம்

கேளும். அழகிலே மிகுந்த மன்மதனைப் போன்ற குமாரர்களே! சுக்கிரபகவான் செய்த சாபத்தினாலே இப்போது எனக்கு வந்திருக்கிற துன்பத்திற்கு பயப்படவேண்டாமென்று ஒரு உறுதி மாத்திரஞ் சொல்லி உங்களிட வாலிப திசையை எனக்கு கொடுத்து, எனது விருத்தாப்பியத்தைக் கொஞ்ச காலம் நீங்கள் அனுபவித்திருந்தால் எனக்கு ஆசை வெறுத்த பின்பு உங்கள் இளமையை உங்களுக்கே கொடுத்து என் விருத்தாப்பியத்தை நான் வாங்கிக் கொள்ளுகிறேன் பாலர்களே.

## 219. பொது விருத்தம்

இராகம் : தோடி

பொறைகளும் நெளியு மிக்க புத்திக ளுற்ற வேந்தன்
குறைவிலா யிளமை தன்னை கொடுங்களென யறைத்த மாற்றம்
அறைகழல் சிறுவர் கேட்டு அழகுறு முடல்ந டுங்கி
நிறைவுள மணந்த ளர்ந்து நிருபர்முன் வருந்து வாரே

### பொது வசனம்

அகோதெப்படியென்றால், இந்தப் பிரகாரமாக யயாதி மகாராஜன் தன்னுடைய விருத்தாப்பியத்தை வாங்கிக் கொண்டு உங்கள் வாபிதிசையைக் கொடுக்கவேணுமென்று சொன்ன சொல்லைக்கேட்டு உடல் நடுங்கி மனந்தளர்ந்து, அயது துறவசு இருவரும் வருத்தப்படுகிற விதங்காண்க:

## 220. தேவயானை பிள்ளைகள் அயது துறவசு இருவரும் இரங்கல் தரு

இராகம் : புன்னாக வராளி தாளம் : ஆதிதாளம்

மன்னவன் மூப்பினையடைந்து வருத்தமும் நீடி நம்மை
வரவழைத்துமதிளமைத் தாவென்று வழுத்தினார் கோடி
என்னமாயிளமையை யளிந்து மூப்பெய்துவோம் உவந்து
நாம் எப்படி துயரினில் வருந்துவோம்பினி மூப்பைக்கவர்ந்து

வருத்தமின்றி வாழ்விற் சிறந்தோம் வண்மையாய் வீறி தந்தை
வழுத்தும் மொழிகேட்டுளந்தளருதே மனந்தடுமாறி

விருத்தத்தைக் கொணர்ந்தனுபவித்திடவெங்களால் வசமோ
நெஞ்சில்

வெரு விடாமலே யிளமை யீய்ந்து விடுவது மதிசமோ

மூப்பினைக் கொண்டு மடத்தினைத்தரமுள்ள நடுங்குதே

பின்னும் – மொழிவேதற்கு மருமையாகவே மோன மடங்குதே

கோப்பிலா விருத்தத்தைக் கொண்டு கொம்மையீவமோ –அன்றி

கொற்றவன் துயர் தீர்த்திடாக் கொடும்பாவி யாவமோ

வண்மையாய் மடத்தினை யளித்து வசிப்பதெவ்விதம் – மூப்பு

மாழகல மிகுந்து மேவினால் யாரும் – மதிப்பரோதிதம்

திண்மையாகவே புலம்பிடயாம் செய்வினைப் பயனோ மிகச்

சிந்தை கலங்கி நொந்திட முன்பு தீட்டினான் அயனோ

வழுத்தும் – சொல்லும்
வெருவிடாமலே – அஞ்சிடாமலே
மடத்தினை – இளமையை
கோப்பிலா – அமைப்பழகு இல்லாத
கொம்மை – பெருமை
அயன் – பிரம்மன்

## 221. தேவயானை பிள்ளைகள் அயது, துறவசு இருவரும் யயாதிக்கு சொல் கொச்சகம்

முப்புவியை யோர்குடையில் இஷடமுட னேபுரக்கும்

மெய்ப்புகழ்சேர் யெந்தையேநின் – விரைப்பதுமச் சரண் போற்றி

செப்பரிய மூப்பதனை திறமுடனே யாம்கொண்டு

எப்படிஎம் வாலிபத்தை யீவோம்நெஞ் சமுவந்தே

வசனம்

கேளும். யிந்த பூலோகமெல்லாம் ஒரு குடை யிலாள்கின்ற யெங்கள் தந்தையே சரணம். வருத்தப்படுத்துகின்ற விருத்தாப்பியத்தை நாங்கள் வாங்கிக் கொண்டு எங்களினிளமையை எப்படி மனம் உவந்து கொடுக்கப்போகிறோம் யெங்கள் பிதாவே!

## 222. யயாதி தேவயானை பிள்ளைகளை சபித்தல் விருத்தம்

பெருத்திடும் விருத்தமு மிகுத்துமதிடத் துறை
பிறங்கிளமையைக் கொடுயென
அருத்தியோடுரைத்து – மிளமைத்தன மனித்திட
வகத்தினிலிரக்கமிலதால்
கருத்தினிலறத்தினையுணர்ச்சி யறிவற்றிடு
கடத்தினிலிருக்கு மெயினர்க்
கிருத்தரசியற்றுமியல் கொற்றவனெனச்செல
யிமைப்பினில் சபித்தனனே

வசனம்

கேளும் யெனது குமாரர்களே! நான் முதிர்ந்த விருத்தாப்பியத்தில் அதிக வருத்தப்பட்டு உங்களிட வாலிப திசையைத் தரவேணுமென்று ரொம்பவும் பரிந்து கேட்டதற்கு, உங்கள் வாலிபத்தைக் கொடுப்பதற்கு மனதில் சற்றும் இரக்கமில்லாமல் போனபடியால், சதாகாலமும் மனதில் தரும நினைவில்லாமல் காட்டிலே கொலை செய்து திரிகின்ற புத்தியீனராகிய வேடர்களுக்கெல்லாம் யெஜமானர்களாகக் கடவீர்களென்று சாபமிட்டேன் மைந்தர்களே!

அருத்தி – இரத்தல்
கடத்தினில் – காட்டில்
எயினர் – வேடர்

## 223. பொது விருத்தம்

சத்தியற் தவறா வேந்தன் சாற்றிய சாபத் தீயால்

புத்திர ரிருவர் தேகப் பொலிவெல்லாம் நீங்கி வில்லு

*மத்திரங்* கொள்ளும் ...... விரைவிற் றோன்றி

மெத்தவு மனம் வ ருந்தி அழுகுவார் அழுகு வாரே

### கட்டிய வசனம்

அகோதெப்படியென்றால் யயாதி மகாராஜன் தனது குமாரர்களை வேடர்களுக்கெல்லாம் யெஜமான்களாய்ப் போகக் கடவீர்களென்று சாபமிட்டபடியால் அவர்களுடைய யவ்வனமான ராஜ வடிவு நீங்கி வேட வடிவு தாங்கி அயது, துறவசு இருவரும் பிரலாபிக்கிற விதங்காண்க:

## *224.* தேவயானை பிள்ளைகளாகிய அயது, துறவசு இருவரும் வேடராகி இரங்கல் கண்ணிகள்

இராகம் : மோகனம் தாளம் : ரூபக தாளம்

என்ன செய்வோம் யென்ன செய்வோம் என் தலைவிதியோ

இது யேழைகட்கிரங்காத தெய்மெண்ணிய சதியோ

முன்னஞ் செய்த ஊழ்வினையால் முதல்வராயிருந்து இந்த

பூதுலகினை யாண்டிடாமலே முதிர் வனந்திரிந்து

யெப்படியென்று சகித்திருப்போ மினங்களைத் துறந்தே துயர்

யெய்துமான் போல் யாவுமேவுதே யிதையம் மெய் மறந்தே

தப்படிகொண்டு மறை விரிஞ்சன் செய்சதியோ வறியமே பெற்ற

தந்தையிப்படி சபிப்பாரென்று சற்றுங்குறியமே

சினத்து நிருபன் சூளுரைத்திடத் தேகவெழில் கெட்டு கொடுந்

தீய மறவராகினோமே திகழும் நெறிவிட்டு

வனத்தினிற் சென்று வசித்திருந்திட வாய்த்ததே காலம் சூளால்

வனப்பெலா நிமைப்பினிற் சென்றானோ வாடலங்கோலம்

வெட்டிவேர் மருக்கொழுந்தினாற் புனைவிசிறி கைக்கொண்டு பக்கல்

விசிறி மகிழ்வாய் துயில்வோமதை யூழ்வினையினால் விண்டு

கட்சியிலுள்ள மலை குண்ணில் வெகுகாந்தியாகவே காற்று

கனலென வந்தாலெனமாய் சகிப்போம் கடியம் போகவே

தரையில் நடந்தால் சிவக்குந் தாளெனத் தகைமையெண்ணியே மார்பில்

சதிருடன் நடைபயிற்றனார் மிகுத்தருக்குள் நண்ணியே

பொறையில் முகலுமெரிக்கலாச்சுதே பொன் மலர்த்தாளில் மிகப்

புந்தியில் வருந்திடவே வாச்சுதே போத இன்னாளில்

வெய்யிலில் மேனி கறுக்குமென்று வேந்தனுங் கருத்திலுன்னி

வெளியினில் வராமல் வளர்த்தார் மிகநமை அருத்தி

அய்யய்யோ இன்று அடவி வெய்யலிலலையலாச்சுதே முன்

அரு நிழலினில் வளர்ந்தது ஈனவாகப் போச்சுதே

விழைந்து நமக்குப் பாலுமன்னமுமேன்மையாயளிக்க உண்டு
மிகு சுகத்தை மருவி யிருந்தோ வேட்புடன் களிக்க
இழைந்திங்கில் வனத்திற் புக்கியேங்கியே உதிர்ந்து – சர
கிலை கிழங்குகாய் விரும்பியருந்தியென் செய்வோமிருந்து
வையகம் புகழரசர்க்கரசன் மைந்தனாய்ப் பிறந்தோம் மகுட
மண்டலீகருங்கண்டு துதிக்கும் வாழ்வினிற் சிறந்தோம்
எய்தும் வினையிப்படி வருமென்றண்ணாமற் போனோம் போரில்
இயல் துதிக்கையு மறுந்த யானைபோல் யேங்கிடலானோம்

## 225. பொது விருத்தம்

மைந்தரிவ் வாரிரங்கி வனத்தினிற் சென்ற ாரிப்பால்
மந்தர நிகர்த்த மொய்ம்பு மன்ன வ னாம் ய யாதி
செந்திரு மகிழ்ந னான செம்மலைத் தன்ன கத்தில்
பந்தமாக வுன்னிப் பரிவுடன் இரங்கு வானே

## வசனம்

அகோதெப்படியென்றால் அயது, துறவசுவென்னும் இரண்டுபேரும் பிரலாபித்து வெப்பத்தையுடைய காட்டிலே போய் சஞ்சரித்திருந்தார்கள். இப்பால் செந்திரு மகிழ்ணனான ஸ்ரீமன்நாராயணரைத்தன் மனதிலே தியானித்து வருத்தப்படுகிற விதங்காண்க:

## 226. யயாதிராஜன் இரங்கல் கொச்சகம்

வந்தடைந்த வரைக் காத்தல் மன்னவர்க்கு நீதி யென்று
முந்திருந்த வேந்த ரெல்லாம் மொழிந்தபடி கார்த்ததனால்
தொந்தரைசெய் சாபமதைச் சொல்ல நண்ணி மூப்பணுகி
சிந்தைவருந் திடமுன் செய்தீ வினையோ வறியேனே

### வசனம்

அரிகரி வைகுந்த வாசா தஞ்சமென்று வந்தவரைக் காத்து ரட்சிக்கிறது இராஜாக்களுக்கு முறைமை யென்று முன்னிருந்த சிபி, அம்பரீஷன் முதலானவர்கள் சொல்லியபடிக்கு எனது பாதத்தில் வந்தடைந்த சன்மிட்டையைக் கார்த்ததினால், சுக்கிரபகவான் எனக்கு இப்போர்கொத்த துயரம் வரும்படி சபித்தது முன் செய்த தீவினையல்லவோ என்ன செய்வேன் அரிகரி ஆதி மூலமே!

## 227. யயாதி இரங்கல் தரு

இராகம் : புன்னாக வராளி    தாளம் : அட தாளம்

மானில மெல்லாந்துதிக்குங் கானுலவு குல்லைத்தொடை

மார்பனே பிரதாபனே மழு

மானகரத்தோன் ஐயமனதத்தான் தவிர்த்தாண்டிடு

மாதிமாயனே – செவ்வாயனே

ஈனமற்றயெழில் தேவயானையின் சிறுவருடன்

யெஞ்சியே மிக்க கெஞ்சியே – உம

திளமையைத் தருவீரென்று அளவிலாதுரைத்தேன்

அவரேக்கமாய் – அதிமூர்க்கமாய்

எப்படித் தருவோமென்று செப்புமுடனே சுதர்கள்

ஏங்கினார் துயர்தாங்கினார் இனி

இயாருடன் வழுத்தியிந்த மூறிடு மூப்பை யொழிப்பேன்

ஈஸ்வரா ஜெகதீஸ்வரா

செப்பருந் துயரமதி லெப்படி உழலச் செய்தாய்

சீதரா தாமோதரா ஒளிர்

செந்திருமருவிய முகுந்தனே அன்பர்துதிக்குஞ்

செய்யனே எனதையனே

குல்லைத்தொடை – துளசி மாலை
இயாருடன் (யாருடன்)
சீதரன்
தாமோதரன்    திருமாலின்
முகுந்தன்    வேறுபெயர்கள்

## 228. யயாதி கட்டியனுக்குச் சொல் கவி

கட்டியக் காரா கடிதினிற் சென்று
பட்டிகை முலையாள் பாவை சன் மிட்டை
இட்டமா யளித்த இயல் சிறு வர்களை
சட்டமா யழைப்பாய் சலுதியிற் றானே

கட்டியன் வசனம் :

அப்படியே அழைத்துக்கொண்டு வருகிறேன் மகாராஜனே.

## 229. கட்டியன் சன்மிட்டை பிள்ளைகளுக்குச் சொல் விருத்தம்

கனப்புய னாணு மோதிக் கன்னிசன் மிட்டை யீன்ற
கனைப்புறு சிலப்பு தண்டைக் கழலுள சுதரே கேளீர்
வனப்புய யயாதி மன்னன் வண்மையாய் அழைக்கச் சொன்னார்
இனிப்புறு கொலுவி னுக்கு இக்ஷணம் வருகு வீரே

வசனம்

கேளுங்கள் சன்மிட்டையம்மாள் பெற்ற குமாரர்களே! உமது தந்தையாகிய யயாதி மகாராஜன் நவரத்தின சிம்மாசனக் கொலுவுக்கு அழைத்துக்கொண்டு வரச் சொன்னார். அதி சீக்கிரமாக வாருங்கள் பாலர்களே.

பட்டிகை – கச்சு
சலுதி (ஜல்தி) – விரைவு
கனைப்பு – ஒலி

### 230 சன்மிட்டை பிள்ளைகள் கட்டியனுக்குச் சொல் விருத்தம்

மதாமதங் கொண்ட பொல்லா வஞ்சக ரினத்தை வாட்டி
சதாவெழிற் கோல முவன்றறான் சாயாமல் அரசு செய்யும்
பிதாவழைத் திட்டா ரென்று பேசிய படியி னாலே
இதோதடை யின்றி யாங்கள் இக்கணம் வருகின் றோமே

வசனம்

அகோ வாருங் கட்டியக் காரா! மதங் கொண்ட பொல்லாத துட்டர்களையெல்லாம் சங்கரித்து செங்கோல் முனைசாயாமல் அரசாட்சி செய்யா நின்ற எங்கள் தந்தையாகிய யயாதி மகாராஜன் அழைத்தாரென்று சொன்னபடியால், இந்த க்ஷணமே வருகிறோம் கட்டியக்காரா!

### 231. சன்மிட்டை பிள்ளைகள் வருகிற தரு

இராகம் : தோடி                    தாளம் : ஆதி

தனையர் மூவரும் வந்தார் மொழி
தந்தையையுற்ற சன்மி டையளித்திடு

(தனையர்...)

துனிவிலாமலே நல்ல சுகுணத்தோடிருப்பவர்
தூய மனந்தரெல்லாஞ் சொற்புகழ் தரிப்பவர்
துட்டரைவெட்டி இடப் புவியுற்பவர்
தட்டற பற்பல நற்கலை கற்பவர்

(தனையர்...)

தனுவைக் கடிந்த குணந்தகைமை யுடைய திங்கள்
தனி நுதலிற்றிலாதம் இயலுடனே விளங்க
கனை கடலுலகினைக் கவர்ந்திடுமுயாபங்க
காந்தியதனைக் கண்டு கதிரவனு மழுங்க
கற்பொரும கொள்புயத்தில் விரித்தொளிர்
பொற்புறு நற்குழையைச் செவியிற்கிளர்

(தனையர்...)

கருதுபார மருமத்தினில் அசைந்து வருக
கண்ட மாதர்களெல்லாம் கனமயலே பெருக
உரமுடன் மலத் தொடுத்தெவர் மனமும் உருக
உறைச் செயுமதனு மெழில் கண்டங்கருக
ஒப்பறுமத்தக வத்தியை யொத்திடு
செப்பரு மெய்ப்புள பொற்புறு நடையொடு

(தனையர்...)

நீதிகளினை நெஞ்சில் நிறுத்தி நெடிய நாட்டி
நிலைக்கு மனிதர் போலே நினைவில் நலம் பாராட்டி
சூதிலாமலே வாயிற் புன்சிரிப்பினைக் காட்டி
தோல் துதிக்கை யெனவே நீண்ட கரத்தையாட்டி
துற்குணமுற்ற மனத்திரினத்தினில்
சற்று மதித்த வடத்தில் மதித்திடா

(தனையர் மூவரும்...)

### 232. சன்மிட்டை பிள்ளைகள் யயாதி ராஜனுக்குப் போற்றி சீச பத் தியம்

இராகம் : புன்னாக வராளி

தஞ்சமென வந்தவரை அஞ்சலென் றாட்கொள்ளும்
சதுரனே உமது மலர்த் தாள்கள் போற்றி
தாரணியில் வலிமை மிகு நேநலர்கள் வந்து பணி
தலைவனே யுமது மலர்த் தாள்கள் போற்றி
சாற்றரிய மனுநீதி நூற்றிர ம திப் பரவு சற்குணா யுமது
மலர்த் தாள்கள் போற்றி
சட்டமுடனே யெம்மை யிட்ட முடனே யீன்ற தந்தையே
உமது மலர்த் தாள்கள் போற்றி

எத்திசை யுளார்களு மிறைஞ்ச வேத்திப்
பெத்தவண் டிறலு நற்பெரு மையுலவுங்
கத்தனே கவினுலவு கரிசில் மெய்மைச்
சித்தனே யுமது திருவடிகள் போற்றி

தஞ்சம் – அடைக்கலம்
தாரணி – பூமி
நேரலர் – பகைவர்
கத்தன் – (கர்த்தன்)
சித்தன் – அருள்பெற்றவன்

### 233. யயாதி ராஜன் பூரு முதலாகிய பிள்ளைகளுக்கு வாழி விருத்தம்

தீங்கரும் பினைவில் லாகத் திகழ்கரத் தினிலே கொண்ட
பாங்குசேர் மதனை வென்ற பாலரே வாழி வாழி
ஓங்குவண் மையிற்சி றந்த உத்தமர் புகழு நன்மை
தாங்கிய குணமு லாவுந் தனையரே வாழி வாழி

### 234. யயாதி ராஜன் பூருவுக்குச் சொல் கவி

உரை செயுமென்ற திரநினை வமரும்
தரமுள சுதரே விரைவுடன றைவேன்

பூரு சொல் வசனம்

அப்படியே சொல்லும் எங்களைப்பெத்த தந்தையே

### 235. பூரு யயாதிக்குச் சொல் கவி

அத்தனே யுன்றனடியிணை போற்றி
கர்த்தனேயுமது கருத்துரைப்பீரே

அத்தன் – தந்தை

## 236. யயாதி ராஜன் சன்மிட்டை பிள்ளைகளுடன் இரங்கல் தரு

இராகம் : புன்னாக வராளி தாளம் : அட தாளம்

மாது சன்மிட்டை வயிற்றில் மேதினி போற்றவுதித்த
மாரரேஎன் குமாரரே
மதியினிலுயர் பிரகஸ்பதியினை நிகர்த்த
மான்களே கனவான்களே...
பூததயவேது மிலாப் பேதையென் மனைகவி பால்
புக்கியே – மனஞ் சொக்கியே
பூதலத்தையாளு மன்னன் நீதியற்று தாதியோடு
மிகத்திருந்தினான் என்று
பொன்னனை மகள் சொல்லக்கேட்டு தன்மமுந் தடுத்து ஓர்கண்
போகினோன் – துயராகினோன் – இன்று
புன்மையா மிகுளையுடனனமையாய்ச் சேர்ந்தானேயென்று
புண்ணியன் சாபம் பண்ணினன் – மூப்பு

வண்மையாய் எனை அனுக அன்னவன் பொன்னடி போற்றி
வணங்கினேன் அயர்ந்திணங்கினேன் மகிழ
வாய்ந்திருன் சேய்க்கு மூப்பை யீந்தவரிளமை கொண்டு
வண்மையாய் சில நாளுண்மையாய் யின
மங்கையர் தங்களைப் புணர்ந்திங்கிதம் வெறுத்தபின்பம்
மைந்தனுக் கெழிற் கந்தனுக்குந்தன்

மாசிலா முடிதரித்து நேசமாய்ச் செங்கோலளித்து

வலமையாய் வெகுநிலமையாய் மிகப்

பொங்கமாயரசு செய்யச் சங்கையில்லாமற் செய்யென்று

புகன்றனர் நன்சொற் பகன்றனர் அதை

புதல்வருக்குரைத்தேன் வரிதமுடன் சொல்லை நீரென்

புல்கிறீர் யென்ன சொல்கிறீர்

இங்கிதம் – இனிமை; குறிப்பு
வலமையாய் – வெற்றியாய்
பொங்கம் – பொலிவு
சங்கையில்லாமல் – அச்சமில்லாமல்

### 237. சன்மிட்டை பிள்ளைகளில் பூரு சொல் விருத்தம்

சந்தமோடரசாளும் வண்டிறல் தலைவர் போற்றி வணங்கிடு

மெந்தையே கொடிதான சுக்கிரனெண்ணிடாமல் சபித்ததால்

வந்தடைந்திடு மிருமல் கோழை வருத்து மூப்பினை வாங்கியே

எந்தனுண் மகிழ்வாக யீகுவனிளமையைப் பெறுவீர்களே

### வசனம்

கேளும்! வீராதி வீரர்களும் வணங்கித் துதிக்க உலகமெல்லாம் ஒரு குடையில் அரசாட்சி செய்யா நின்ற எனது தந்தையே சரணம். கொடூரமான மனதையுடைய சுக்கிரபகவான் சற்றுந்தயை தாட்சிண்யம் பாராமல் சாபமிட்டதால் உம்மை நெருக்கிய விருத்தாப்பியத்தை அடியேன் வாங்கிக்

கொண்டு, உமது மனதில் இருக்கிய வியாகூலங்களை நீங்கிப் போகத்தக்கதாக எனது இளமையைக் கொடுக்கிறேன். வாங்கிக்கொண்டு வருத்தத்தையக ற்றி சுகத்தையனுபவித்திருப்பீர் எனது தந்தையே!

சந்தம் – அழகு
திறல் – வலிமை
ஈகுதல் – கொடுத்தல்

## 238. பொது விருத்தம்

புத்திர னளித்த விளமைகைக் கொண்டபோத யயாதி மன்னவனும்
பத்திர நயனப் பாவையர்போகப் பார்வையிற் சிலது நாடிளைத்து
ருத்திர மான மாலினை யொழித்து குணமுடன் கொலுவினி லமர்ந்து
சித்திர மிகுத்த வமைச்சரை யழைத்து திறமுடன் விரைந்து
சொப்புவனே

### வசனம்

அகோதெப்படியென்றால், யயாதி மகாராஜன் தன் புத்திரனாகிய பூரு ராஜன் கொடுத்த வாலிப திசையை வாங்கிக் கொண்டு ஸ்ரீ சாதிகளிட மோகமாகிய கடலில் சிறிது காலம் உழன்று கெடுதியான மயக்கங்களை எல்லாம் ஒழித்து, நல்ல ஞானத்துடன் சபா மண்டபத்திற்கு வந்து தன்னுடைய மந்திரிகளை வரவழைத்து, தன் வருத்தங்களைச் சொல்லுகிற விதங்காண்க:

பத்திர நயனம் – அழகுக் கண்
திளைத்து – அனுபவித்து
ருத்திரம் – அச்சுறுத்தல்
மால் – காமம்

## 239. யயாதி மந்திரிகளோடு இரங்கல்

இராகம் : ஆகிரி தாளம் : ஆதி

பொன்னெள வுணர்வு செறிந் துன்னிய மன்மதனென பொலி
வடிவிற்சிறந்த வமைச்சர்களே
பூவுலகமெங்குந் தகைமேவி நற்சீர்த்தியரும் பூத தயவுமிகுத்த
வமைச்சர்களே
மன்னு மாதலத்துள்ளோருக் கின்னலணுகாமல் காத்து
மாண்பினுடனே யாளுமமைச்சர்களே
மன்னனென விருப்பதினா லென்ன பலனென்று நெஞ்சில்
வருத்தங்கதித்திட்டேனே அமைச்சர்களே
...... நாளிருந்தாலு மித்தலத்தழிந்து போகு
மிவ்வுடற் சதமென்று அமைச்சர்களே
எண்ணி மனை வாழ்க்கையினில் நண்ணியே யிருந்தால்
நாளை ...... மனவருகும்போது அமைச்சர்களே
பத்தியாய்த தெண்டனிட்டாலுஞ் சித்த மகிழுடன் விட்டு
பரிந்து போவதுண்டோவமைச்சர்களே
பண்புடனெம் மொழிகள் நண்புடனே கேட்டிருந்தும்
பதவியடைவதற்கு அமைச்சர்களே

ஒருவகையுந் தேடாமல் வருகையறிவார் போல் வுலக
வாழ்க்கையில் சிக்கியமைச்சர்களே

ஒளிவுக்குமொளிவாகி கிளருற்றோன் பதகஞ்ச முன்னாது

நாட்கழித்தேன் – அமைச்சர்களே

தருமநெறியுடன் முன்னரசு செய்து வசித்த சக்கரவர்த்தி

களினமைச்சர்களே

சதமாயெவர் பூமியை நிதமாகா போற்ற வாண்டு

தானிருந்தவருண்டோ வமைச்சர்களே

### 240. மந்திரிகள் யயாதிக்குப் போற்றி விருத்தம்

பருப்பத மனையத் திண்டோட் பற்றலர் களைச்ச வட்டி

இருப்பதம் வணங்க நாடா ளேந்தலே போற்றி போற்றி

அருப்பமா யெங்க ளோடே யயர்ந்துசொல் கார ணத்தை

விருப்பம தாக நன்றாய் வெளிவிட வேண்டு மையா

சதம் – நித்தியம்
பருப்பதம் – மலை; ஏந்தல் – அரசன்
அருப்பம் – அருமை

#### வசனம்

கேளும். மலை போன்ற புயத்தினையுடைய சந்திராதிகளையெல்லாம் வென்று யாவரும் உமது பாதத்தில் வணங்க அரசாட்சி செய்ய நின்ற மகாராஜனே சரணம். மகா துன்பத்தோடு எங்களுடன் இரங்கிய காரணத்தை இன்னதென்று தெரியச் சொல்ல வேணும் இராஜ பரமேஸ்வரா!

## 241. இராஜன் மந்திரிகளுக்குச் சொல் விருத்தம்

வருவதை யறிந்து நாளா மகிழுட னெனக்குச் சொல்லும்
பெருமைசேர் மந்திரி மாரே பெட்புட னுரைப்பேன் கேளும்
திரமிலா வாழ்வை நம்பி செருக்கிநாட் கழித்தேன் நல்ல
பரகதி யடைவ தற்கு பரிந்தொரு பாயஞ் சொல் வீர்

வசனம்

வருங்காலங்களை அறிந்து எனக்குச் சொல்லும் புத்தியிலே சிறந்த மந்திரமார்களே, நிலையில்லாத இந்த இல்வாழ்க்கையை நம்பி என்னுடைய வாணாட்களை எல்லாம் வீணாட்களாய் கழித்தேன். இனி மேலாகிலும் நல்ல பரமபதத்தை அடைவதற்குத் தகுதியான உபாயம் அறிந்து சொல்வீர் மந்திரிமார்களே!

பெட்புடன் – விருப்பமுடன்
திரமிலா – உறுதியில்லாத
உபாயம் – வகை

## 242. முதல் மந்திரி இராஜனுக்குச் சொல் விருத்தம்

அலைசெறி நீலலேயுண் டாகிய குமிழி போலே
நிலையிலா தழிந்து போகு நெடியவிக் காயந் தன்னை
நலமென மனத்தெண் ணாமல் நாடியே வனத்தில் புக்கி
வலமுடன் தவசு செய்து வானகத்தை யடைய லாமே

வசனம்

கேளும் இராஜபரமேஸ்வரா! அலைகளானது வீசுகின்ற நீரில் உண்டாகிய குமிழி போலே உடனே அழிந்து போகும் இந்த தேகத்தை நிலையாக இருக்குமென்று நினையாமல் கானகத்தில் சென்று திடச் சித்தத்துடன் அரிதாகிய ...... மேலான கதியை யடையலாம் மஹாராஜனே!

243. 2–வது மந்திரி இராஜனுக்குச் சொல் விருத்தம்

செப்பும்விண் மின்னல் போல திட்டென வழிந்து போகும்
இப்பெருந் தேகத் தின்மேல் இச்சைகொண் டிருந்தி டாமல்
விப்பிரர் மறைகட் கெட்டா விமலனைக் கருதி யாற்றல்
தப்பறச் செய்து முத்தி தலத்தினை யடைய லாமே

காயம் – உடல்
வனம் – காடு
வலமுடன் – மேன்மையுடன்
தவசு – தவம்
விப்பிரர் – அந்தணர்
விமலன் – கடவுள்
முத்தி – வீடுபேறு

வசனம்

கேளும் இராஜ பரமேஸ்வரா! ஆகாயத்தின்கண் உண்டாகிற மின்னலைப் போல் திட்டென்று நிமிஷ நேரத்தில் அழிந்து போகுமிந்த உடலின் பேரில் விருப்பங்கொண்டு இராமல் நாலு வேதங்களுந் தேடியறியாத நின்மலனை தியானித்து தவஞ்செய்தால் நல்ல மோக்ஷத்தையடையலாம் மஹாராஜனே.

## 244. இராஜன் மந்திரிக்குச் சொல் விருத்தம்

மந்திரி மாரே கேளீர்! மகிழுட னிக்க ணத்தில்
சந்தண சுணங்கு கொங்கை சன்மிட்டை மாத வத்தில்
சுந்தர மாயு தித்த சுகுணநற் பூரு தன்னை
அந்தமார் கொலுவிக் கிப்போ தழைத்துநீ வரச்செய் வாயே

### வசனம்

கேளுங்கள் மந்திரிமார்களே! அழகிய கச்சணிந்த தன பாரத்தை யுடைய சன்மிட்டை செய்த தவத்தினாலுதித்த குண பூஷணனாகிய பூரு ராஜனை நமது சபா மண்டபத்திற்கு அழைத்துக் கொண்டு வரச் சொல்லுங்கள் மந்திரிமார்களே.

### மந்திரி சொல் வசனம்

அப்படியே அழைத்துக்கொண்டு வரச் சொல்லுகிறேன் இராஜ கண்டீரவா

நின்மலன் – மாசில்லாதவன்

## 245. மந்திரிகள் கட்டியனுக்குச் சொல் விருத்தம்

அடையல ரினத்தை யெல்லா மடலினில் வெருவச் செய்யும்
திடமிகு கட்டியக் காரா தீவிர மாகச் சென்று
கொடையினி லேசிறந்த கொற்றவ னு வந்த ளித்த
தடமிகு பூரு ராஜன் றன்னை நீ அழைத்து வாடா

வசனம்

ஆரடா அடா சந்திராதிகளை எல்லாம் உயித்தியத்தில் பயந்தோடச் செய்யும் பராக்கிரமத்தையுடைய கட்டியக்காரா! நீ அதிசீக்கிரமாகப் போய் நமது ஆண்டவராகிய யயாதி மகாராஜனானவர் பெற்ற புத்திரனாகிய பூரு ராஜனை அழைத்துக் கொண்டு வாடா கட்டியக்காரா!

கட்டியன் மந்திரிகளுக்குச் சொல் வசனம் :

அப்படியே அழைத்துக் கொண்டு வருகிறேன் மந்திரிமார்களே!

அடையலர் – பகைவர்
அடல் – வலிமை
வெருவுதல் – அஞ்சுதல்
கொற்றவன் – வேந்தன்

*246. கட்டியன் பூரு ராஜனுக்குச் சொல் விருத்தம்*

*தந்தையின் துயரந் தீர்த்த தரும நன் னெறிக ளோர்ந்த*

ஐந்தலரிப் பாணங்கொள் அனங்கநேர் யெழிலோய் போற்றி

நந்தலில் லாப் பிர காசம் நண்ணிய கொலுவி லும்மைப்

பந்தமா யழைக்கச் சொன்னார் பரிவுடன் வருகு வீரே

வசனம்

கேளும். பிதாவின் வருத்தமெல்லாம் நீக்கும் குணமும் நல்ல நெறிகளுமுணர்ந்த மன்மதனைப் போன்ற அழகினையுடைய பூரு ராஜனே சரணம். உமது தந்தையாகிய யயாதி மகாராஜன் தனது ரத்தின சிம்மாசனக் கொலுவிற்கு அழைத்துக் கொண்டுவரச் சொன்னார், வாரும் பூரு ராஜனே

## 247. பூரு ராஜன் கட்டியனுக்குச் சொல் கவி

அரசனு மழைத்தா ரென்று
விரைவுட னுரைத்த தாலே
திரமிகு கொலுவி னுக்கு
உரமுடன் செல்லுவோமே

ஐந்தலரிப் பாணங்கொள் அனங்கன் – ஐவகை மலர்களினாலாகிய அம்புகளை எய்தும மன்மதன்
நந்தல் இல்லாத – கெடுதல் இல்லாத
நண்ணிய – பொருந்திய

## 248. பொது விருத்தம்

விழைத்தன முடைய ரூப மெல்லியர் மயங்கத் தக்க
மழத்தன மதனைப் பெற்ற மன்யயா தியுமே தன்னை
வழைத்தன னென்று ரைக்க அதிதுரி தமாய் மிக்க
கிழத்தன முடைய பூரு கிளர்கொலு வருகின் றானே

### வசனம்

அகோதெப்படியென்றால், அதிக ரூப லாவண்யமான ஸ்ரீ ஜனங்களெல்லாம் கண்டு மகிழ்ந்து அணைய வேண்டுமென்று ஆசைகொள்ளும்படியான இளமை என்னும் வாலிப திசையைப் பெற்ற தன் தந்தையாகிய யயாதி மகாராஜன் அழைத்து வரச் சொன்ன மாத்திரத்திலே விருத்தாப்பிய முடைய பூரு ராஜன் கொலுவிற்கு வருகிற விதங்காண்க:

## 249. பூரு ராஜன் வருகிற தரு

இராகம் : ஆனந்த பைரவி                                                    தாளம் : ஆதி

பூரு ராஜன் வந்தான் கிழத்தனப்
பூரு ராஜன் வந்தான்

தாருலாவும் பரிசாத முடிகதித்த
சசிமுகச் சன்மிட்டை தவத்தினிலேயுதித்த
(பூரு ராஜன்...)

வாகையன்னைப் பிதாவைத் தெய்வ மென்றெண்ணும்
மார்க்கமுள்ளான் யாரும் ஏற்கும் புகழ் நண்ணும்
(பூரு ராஜன்...)

தந்தை சொல்லிற்கொரு தாழ் வியம்பா நேயன்
தரும குணந்தானே – மருவுமிகு சேயன் –
(பூரு ராஜன்...)

கறுத்தமயிர் வெளுத்து காயமெலாந்திரைத்து
வெறுக்கு மூப்பையடைந்து வியப்புடனே விரைந்து
(பூரு ராஜன்...)

நற்றவத்தர்களின்பால் நாளுமன்பு கொள் சுத்தன்
ஞாலந்தனைப் புரக்க தீரமுளப் பிரசித்தன்
(பூரு ராஜன்...)

மூப்பினனென்று தன் முகமலர் வாடாமல்
முக்கியமாயிளமைமேல் தக்க மனம் நாடாமல்
(பூரு ராஜன் வந்தான்...)

## 250. பூரு ராஜன் யயாதிக்குச் சொல் சீசபத்தியம்

காத்திர மிகுத்த சதி மாற்றலர்கள் வந்து பணி காவலர்
வுமது மலர் கழல்கள் போற்றி
தோத்திரஞ் செய் வுலகை காத்திரக்ஷிக்கின்ற தோன்றலே
யுமது துணையடிகள் போற்றி
சாஸ்திரமுடன் வேள்வி யாற்று மறையோர் கண் மகிழ
தலைவனே யுமது மலர் தாள்கள் போற்றி
பார்த்திபர்கள் கப்பணம் பூந்த்தியாய் கட்டியே பணிகின்ற
பங்கய பதங்கள் போற்றி

அறிதாக எங்கணுமமர்ந்த மாயோன்
சரணார விந்தத்தை தான் பணிந்து
தாமேவு மது மலர் தாள்கள் போற்றி

காத்திரம் – கனம்
மாற்றலர் – பகைவர்
தோத்திரம் – துதி
வேழ்வி (வேள்வி) – யாகம்
பார்த்திபர்கள் – அரசர்கள்
கப்பணம் – கப்பம்

## 251. யயாதி பூரு ராஜனை வாழ்த்தல்

மன்னிடபனுமளித்த மங்கை சன்மிட்டை யீன்ற
மின்னுறு பூண்கள் பூண்ட மேன்மை மைந்தர்களே வாழி
பன்னு நன்னெறி யுணர்ந்த பாங்கு சற்குணனே வாழி
பொன்னென மதி சிறந்த புத்திரனே வாழி வாழி

வசனம்

வாழி! வாழி! பூரு ராஜனே!

## 252. யயாதி பூருவை அழைத்தல் விருத்தம்

தீரனே வாராய் மிக்க திகழ்நவ மணியே வாராய்
மாரனே வாராய் யாரு மகிழ்குண பதியே வாராய்
சீரனே வாராய் நான்முன் செய் தவப் பயனே வாராய்
வாரனே வாராய் என்கு மாரனே யருகில் வாராய்

## 253. இதுவும் – யயாதி பூருவுக்குச் சொல் விருத்தம்

நான்செயுந் தவத்தால் வந்த நற்குணக் குன்றே கேளாய்
வான்செயு முனது கொம்பை வாங்கிநா னரசு செய்து
கான்செயுங் குழலார் மீதிற் காதலும் வெறுத்தெந்தன்
ஊன் செய் மூ ... கொன்னினமையைக் கொள்வாயே

வசனம்

கேளாய்! நான் செய்த தவத்தாலுதித்த புத்திர சிகாமணியே! உன்னுடைய வாலிபத்தை வாங்கிக் கொண்டு ஸ்ரீ சாதிகளுடைய போகங்களும் போகித்து எனக்கு வெறுத்துவிட்டபடியால், என் விருத்தாப்பியத்தை எனக்கு கொடுத்து, உன் வாலிப திசையை வாங்கிக் கொண்டு சுகமாயிருப்பாய் குமாரனே!

## 254. பூரு ராஜன் சொல் கவி

இத்தல முழுதும் போற்றும்
அத்தனே யுமது மெய்மைச்
சித்தத்தின் படியே யானும்
பத்தியாய்ச் செய்கு வேனே

## 255. யயாதி பூருவுக்குச் சொல் விருத்தம்

நித்தமென் சொற்றி ரம்பா நேயமார் மகனே கேளாய்
பத்திர மாக இந்த பவ்வஞ்சூழ் நிலத்தை யெல்லாஞ்
சத்திய வான்கள் போற்ற தனி மணி மகுடம் பூண்ட
சித்திர வரசு செய்து சிரஞ்சீவி யாக வாழி

சித்தம் – எண்ணம்
பத்தியாய் – முறையாய்
பவ்வம் – கடல்
சிரஞ்சீவியாக – நெடுங்காலமாக

### வசனம்

கேளாய்! எனது வார்த்தைக்குத் தப்பி நடவாத குமாரனே! சத்தியவான்களாகிய பெரியோர்களெல்லாம் வாழ்த்தும்படிக்கு நவரத்தின கசித மகுடாபிஷேகஞ் செய்து கொண்டு, மநு நீதி தவறாமல் இராச்சிய பரிபாலனஞ் செய்து வாழ்ந்திருப்பாய் பூரு ராஜனே.

## 256. பூரு ராஜன் வருகிற பொது விருத்தம்

தாதையளித்த மடத்தினைப் பெற்று தளர்ந்த கிழத்தனம் விட்

டேதமில்லாத மலர்க்கணை மார னெனத்தகு தேயசுடன்

சோதரர் பக்க மதிற்றிறலாய் வாதூய்பெறு நன்மனதாய்

போதமிகுத்து தகைப் புகழுற்றொளிர் பூருவும் வந்தனனே

### வசனம்

இந்தப் பிரகாரமாக, பூரு ராஜன் தான் அனுபவித்திருந்த கிழத்தனத்தை ஒழித்து, தன் தந்தையாகிய யயாதி ராஜன் கொடுத்த இளமையை வாங்கிக்கொண்டு மன்மதனைப்போல அதிக ரூப லாவண்ணியத்துடன் தம்பிமார் புடை சூழ பூரு ராஜன் மகுடாபிஷேகஞ் செய்து கொள்ள கொலுவுக்கு வருகிற விதங்காண்க:

தாதை – தந்தை
மடத்தினை – இளமையை
ஏதம்இல்லாத – குற்றமில்லாத

## 257. பூரு ராஜன் வருகிற தரு

இராகம் : சங்கராபரணம்

புதனொத்த மதியொத்த

மத னொத்த வெழில் பெற்ற

பூருராஜன் வந்தான்

ததை மட்ட வீழ் தெரியலகத்தினில் வயங்க

தம்பியரிருவர் வர கெம்பீர முடையசுர

(புதனொத்த...)

கடல் சுற்றுமுலகத்தை – யடல் பெற்றினிதளிக்குங்

காவலன்றுயர் தீர்த்தோன்

கறையில் மநு நெறிக்கு நிறை வுற்ற நிலமைக்குங்

கல்விக் குஞ்சிறந் தேற்றோன்

...... டிரள் வதைக்க

அடல் சிங்கமெனுஞ் சீற்றோன்

அளிமொய்த்த குழல் சுத்த வொளிர் நன்முக சன்மிட்டை

அளித்த பிள்ளையின் மூற்றோன்

புதன் – நவிக்கிரகங்களில் ஒருவர்; சந்திரனின் புதல்வர்
மதி – சந்திரன்
மதன் – மன்மதன்

சன்மிட்டை அளித்த பிள்ளையின் மூற்றோன் (மூத்தோன்) (சன்மிட்டை ஈன்ற மகன்களில் "பூரு" என்பவன் இளைய மகன் என்கிற கருத்தும் உண்டு. அதன்படி "துருஹ்யு" இ "அநுத்ருஹ்யு" என்கிற இருவரும் மூத்த மகன்கள் ஆவர்.)

சன்மிட்டை ஈன்ற புதல்வர்களைக் கண்டு தேவயானை வினவல்

ஈன்றதுணர்ந் தடைந்தவன்பால் தேவ யானை

இம்மகவீன் றிடுஞ் செயல்யா திசைத்தி யென்ன

மீன்றடங்கண் ணொருமுனிவன் வரத்தா லென்ன

மெய்யெனமீண் டனளவள்சன் மிட்டை மீட்டுந்

தோன்றலைச்சேர்ந் துபையரையீன் றெடுத்தாள்

... விதனை மதித்த கடகத்தினை தரித்து
புனித சரினை துயிலினை மெய்யினில் விரித்து
வடுவிற்றவ முனிவரின மிக்க வார் பரித்து
வண்மை பெருகி வர – சம்பிரமுடனே கர
மலரிற் சிலை பிடித்து எதிர்கட்டியம் படித்து
மனமதில் மகிழ்துஞ்சி யினவரசர்கள் விஞ்சி
வரவஞ்சியர்கள் கெஞ்சி மயில் மிஞ்சிடவே கெஞ்சி

(புதனொத்த...)

## 258. பூரு ராஜன் யயாதிக்குச் சொல் விருத்தம்

தீதுசெய் வொன்னார் தங்கள் திரள்பொடி படவே தாக்கும்
பூதரப் புயனே யாரும் புகழும்பி தாவே போற்றி
போதமு மிகுத்தே யிந்த பூதல முழுதுங் காக்கும்
தந்தையே போற்றி யுந்தன் தாளிணைக் கமலம் போற்றி

### வசனம்

சரணம். சரணம். என்னைப் பெற்ற தந்தையே!

கடகம் – கங்கணம்; தோள் அணி
சரிகைத்துயில் – சரிகை ஆடை
சம்பிரம் – மகிழ்ச்சி; சிலை – வில்; கட்டியம் – புகழ்ச்சி

## 259. யயாதி ராஜன் பூரு ராஜனுக்கு வாழி விருத்தம்

புத்தியிற் புதனைப் போன்ற புதல்வனே வாழி யின்சொல்

தந்தையை யுறழ்சன் மிட்டை தனத்தவச் சுதனே வாழி

பத்தியும் *பொறையும் நல்ல* பண்புவண் டிறலு மிக்க

சுத்தமும் வனப்பும் மேவுஞ் சுகுணனே வாழி வாழி

*வசனம்*

வாழி! வாழி! சன்மி டையின் *தவப்புத்திரனாகிய* பூரு ராஜனே!

## 260. *முடிசூட்டாய் விருத்தம்*

இராகம் : தோடி

உலகிலுறு மெண்ணேழு தேசத்துற்றவுத்தம் வேந்தர்

கணெருங்கியுகந்து போற்ற

இலகுபுகழ் வியாசர் *முதல் தவத்தோரெல்லாமியலு*டனாசிகள்

கூற விமையோர் வாழ்த்த

சலசை மருவியவஸ்தினா புரத்திற் சதிருட*னே எங்கும்*

...... செய்து

நலமுடனே நவமணிக ளிழைத்த கிரீடம் நாட்டினார்

பூருவுக்கு சூட்டினாரே

பத்தி – *வழிபாடு*
பொறை – பொறுமை
எண்ணேழு – ஐம்பத்தாறு
இலகு – விளங்குகிற
இமையோர் – தேவர்
*சலசை* – இலக்குமி

## 261. பூரு ராஜன் மகுடாபிஷேக தரு

இராகம் : சௌரா கம்

அபிஷேகங் கொண்டானே சொல்
அருமறை மொழிபடி
பெரு நல மணிமுடி
அபிஷேகங் கொண்டானே
சுப ஷேம சன்மி டை யகமது களி மீற
சோர்வுடன் தேவயானை முகமல ரொளிமா
சுந்தரமிகுந்து விளங்கி யுயர்ந்திரு
சொற்புகழ் மணி மண்டபத் தமர்ந்து
...... முழுதுணர்ந்து – அபிஷேக

புண்ணிய நீரிற் ஸ்நானம் புரிந்து துகில் விரித்து
புநிதிமுடன் றிரு மண்ணும் முகத்தினிலே தரித்து
திண்ணிய புஜகீர்த்தி தோளில லங்கரித்து
திருமருவுமால் பாதம் திகழாய் நமஸ்கரித்து

சித்தவிருட்களகற்றிய நாற்றவர்
மெத்த நெருங்கி துதித்திட கற்றவர்
திருந்து மங்களவாசிகள் கூறவே
பொருந்து பரிதாபமு மீறவே

...... நிகழ்த்தியே கொண்டாட
நேயத் தம்பிமார்கள் மகிழ்ந்தானந்தமாட
ஆதுலர்களின் மிடியகன்று பயந்தோட
அரியதான தருமம் விரிவாகவே நீட
அந்திரர்மலர்கள் சொரிந்தனர் கடலென
திரிந்தன வாத்தியந் திந்திற்திமியென
யயாதி மன்னனுமிளமையைக் கொடுத்து
ஜெயாதிபனெனத் தன் மூப்பையும் விடுத்து

திடமிகுந்த யெண்ணேழ் தேசத்துக்கு முடங்கல்
திறமுடன் விட்டுவரச் செய்தரசரடங்கல்
அடர்ந்திருக்க நனியாண்மையுள மடங்கல்
லாசனத்திலமர்ந்தழகுடனே தடங்கொள்
அற்புத முடியினை நற்றவ வியாசரும்
பற்றிகரத்தில் சிரத்தில் தெரித்து மெய்
ஆட்சியிற்கவனிப்பாய் மனம் வெகு
காட்சியாகவே வாழ்ந்திடவே

(அபிஷேகங்கொண்டானே...)

## 262. கடவுள் துதி விருத்தம்

மஞ்சுமா தழும் மாரி வருஷிக்க வுயிர் செழிக்க
விஞ்சுவே தியர்கள் வேதம் வேள்வியும் பெருக வேணும்
அஞ்சிடா வெனது செங்கோ லாண்மையாய்ச் செலுத்த வேணும்
கஞ்சமா மலரை யொத்த கண்ணன் பொற்பதம் போற்றி

வருஷிக்க – பொழிய
கஞ்சம் – தாமரை

## 263. விருத்தம்

கடர்முடி தனது மூப்பினைக் கவர்ந்த
சுதனுக்கு விருப்பமாய் நல்கி
சொல்லு மூவாசை யாவையு மொழித்து
துன்னலர்ப் பணியும் யயாதி

தொடர் வினை யகற்றி நற்கதியடைய
துன்னிய வனத்தினிற் புக்கி
தூயருந் தவருந்தான் சிறந்துனக்குந்
தோமிலாக்காதி மைந்தனைப் போல்

படர்புகழ் சலச மலரயன் கழலைப் பதித்திதயத்தினற் கருதி

பகருந் தவங்கள் புரிந்திட பகவன் பரிந்து யயாதிமுன் தோன்றி

இடாறு வரங்களீந்தண்டமுழுது மியங்க விமானமு நல்க

இனிமையையாப் பெற்று சத்திய லோக மெய்தியே வைகினன் மாதோ

சுதன் – மகன்; மூவாசை – மண், பெண், பொன் ஆகியவை பற்றி வரும் ஆசை
துன்னலர் – பகைவர்
துன்னிய – நெருங்கிய
சலசம் – தாமரை

## 264. இயல் வாழி விருத்தம்

பொன்மருவுங் கந்திருவர் முனிவர் வாழி போதன்

வாமனன் பித்தன் புனிதன் வாழி

சொன்மருவு மீதலர் பூதலரும்வாழி தூயிரவி

மதியுடு கந்தரமும் வாழி

மின்மருவும் யயாதியுஞ்சன்மிட்டை வாழி

வேளனைய பூரு முதல் மூவர் வாழி

மன்மருவு தரும குணா திபரும் வாழி வாசித்தோர்

எழுதினர் கேட்போரும் வாழி!

கந்திருவர் – யாழ் வல்லோர்; தேவசாதியில் ஒரு வகையினர்
வாமனன் – திருமாலின் தசாவதாரத்தில் ஒரு அவதாரம் (குள்ள உருவம்)
பித்தன் – சிவன்
இரவி – சூரியன்; மதி – சந்திரன்; கந்தரம் – முகில்

முற்றும்

